# கல்கி




KALKI அக்டோபர் 3, 1954 4 அணா



## உங்கள் நவீன பம்பாய்

## ஜடைச் சிங்காரத்தின் அழகைப் பூர்த்திசெய்ய

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்



## கூந்தல் தைலம்

## உபயோகியுங்கள்

**இனம்!** இந்த ஜடைச் சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத் தரும் துண்டுப் பிரசுரம் நெ. 6க்கு ஒரு அணா தபால் தலையுடன் விளம்பர இலாகா, தபால் பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். இந்த துண்டுப் பிரசுரம் தனித்தனியாக தமிழ், ஹிந்தி, வங்காளி, ஆங்கிலம் என்ற பாஷைகளில் கிடைக்கிறது.

இராஸ்மிக் கம். லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது. CPH. 14-50 TM

# கல்கி

## கைத்தொழில் மலர்

மலர் 14 இதழ் 10

ஜய வரு புரட்டாசி 17

அக்டோபர் 3, 1954


M.

## பொருளடக்கம்










மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 10

# அவர் நிகழ்த்திய அற்புதம்

இந் நாளில் அற்புதம் என்னும் சொல் சர்வ சாதாரணமாகி விட்டது. "அற்புதமாய்ச் சொற்பொழிவு ஆற்றினார்" என்கிறோம். "கச்சேரி அற்புதமா யிருந்தது!" என்கிறோம். "நேற்று நடந்த விருந்தில் சாம்பார் அற்புதம்!" என்கிறோம். "அடடா! இந்தக் கவிதை என்ன அற்புதமா யிருக்கிறது?" என்று வியக்கிறோம். போர்க்களங்களில் வெற்றி யடைந்தவர்கள் "அற்புதங்களைச் சாதித்தார்கள்" என்கிறோம். விஞ்ஞானிகள் "அற்புதமான உண்மைகளைக் கண்டு பிடித்தார்கள்" என்றும் சொல்லுகிறோம்.

உண்மையிலே / நமது காலத்தில் இந்த உலகில் நிகழ்ந்திருக்கும் அற்புதங்களிலெல்லாம் பெரிய அற்புதம் என்ன வென்று சிந்தித்துப் பார்த்தோமானால், காந்தி மகாத்மாவின் வாழ்க்கைச் சாதனைதான் என்று அறிந்து கொள்வோம். அதற்கு இணையான அற்புதத்தை நம் நாளில் யாரும் சாதித்த தில்லை. உலகத்தின் சரித்திரம் முழுதும் ஆராய்ந்து பார்த்தாலும் காந்தி மகானுடைய சாதனைக்கு இணை சொல்லக் கூடியவையாக மிகச் சில நிகழ்ச்சிகளையே குறிப்பிடக் கூடும்.

* * * *

இன்று நம் நாட்டில் நடந்து வரும் கோவா விடுதலைப் போராட்டத்தைச் சிந்தியுங்கள்.

கோவா என்பது எவ்வளவு சிறிய பிரதேசம்? ஒரு சிறிய பட்டணமும் அதைச் சுற்றியுள்ள சில கிராமங்களும் சேர்ந்ததுதான்!

கோவாவுக்கு விடுதலை தர மறுக்கும் போர்ச்சுகல் தேசத்தைப் பாருங்கள்! ஐரோப்பாவின் ஒரு மூலையில் ஒட்டிக் கொண்டிருக்கிறது! மிகச் சிறிய தேசம்! அதனுடைய சேனா பலமும் மிக அற்பமானது. ஐரோப்பாவின் அரசியல் சதுரங்க ஆட்டங்களில் போர்ச்சுகல் நாட்டுக்கு எந்த வித முக்கியத்துவமும் கொடுக்கப்படுவதில்லை.

அப்படிப்பட்ட உள்ளங்கை அளவினதாகிய சிறிய போர்ச்சுகல் தேசத்தின் பிடியிலிருந்து கோவாவை விடுதலை செய்ய எவ்வளவு பாடுபட வேண்டி யிருக்கிறது? எத்தனை நீண்ட காலப் போராட்டம் நடத்த வேண்டி யிருக்கிறது! கோவா மக்களின் விடுதலைப் போராட்டத்துக்குப் பக்க பலமாக இந்திய அரசாங்கமும் இந்தியப் பொது மக்களும் இருக்கிறார்கள்! ஆயினும் கோவாவின் விடுதலை கைகூடவில்லை. பண்டித நேருவின் அயல்நாட்டுக் கொள்கையின் சிறப்பினால் இந்தியா சர்வ தேசிய விவகாரங்களில் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தும், கோவாவை மீட்பதற்கு அது இன்று வரையில் போதுமானதாக இல்லை. காரியம் இன்னும் கைகூடவில்லை; கோவா விடுதலை அடையவில்லை.

போர்ச்சுகல் சர்க்கார் இந்திய அரசாங்கத்தை மிரட்டிக் கொண்டும், சால்ஜாப்புக்கள் சொல்லிக் கொண்டும் காலத்தை ஓட்டி வருகிறார்கள்.

கோவாவின் விடுதலைப் போராட்டத்தை எண்ணிப் பார்த்து விட்டு, பாரத தேசம் விடுதலை அடைந்த அற்புதத்தை எண்ணிப் பாருங்கள்!

காந்தி மகாத்மாவின் சாதனை எவ்வளவு மகத்தானது, அற்புதங்களில் எல்லாம் அற்புதமானது என்பதை ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.

சென்ற முந்நூறு வருஷ காலமாக உலகத்தின் மிகப் பெரிய வல்லரசாக இருந்து வந்தது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம். முதலாவது எலிஸபெத்தின் காலத்தில் உலகாதிபத்தியத்தைத் தேடிய ஸ்பெயின் தேசத்தைப் பிரிட்டிஷார் முறியடித்தார்கள். பின்னர், நெப்போலியன் காலத்துப் பிரான்ஸ் தேசத்தைத் தோற்கடித்தார்கள். உலகில் ஐந்தில் ஒரு பகுதிப் பிரதேசத்தைத் தங்கள் சாம்ராஜ்யத்தின்கீழ்க் கொண்டு வந்தார்கள். நம்முடைய

காலத்தில் இரண்டு உலக மகா யுத்தங்களில் வெற்றி கண்டார்கள். முதலில் ஜெர்மன் சக்கரவர்த்தியை வென்றார்கள். பின்னால், ஹிட்லரையும் முஸோலினியையும் முறியடித்தார்கள்.

அத்தகைய வெற்றி வெறி கொண்ட பிரிட்டிஷ் ஜாதியுடன் அரைத் துணி உடுத்திய காந்தி மகாத்மா போராடினார். பலாத்கார ஆயுதங்கள் எதுவுமின்றி, 'வெல்லிக்காய் மூட்டை' என்று அம்மவர்களே சொல்லிக் கொண்டிருந்த இந்திய மக்களைப் பக்க பலமாக வைத்துக் கொண்டு மகாத்மா போராடினார்.

காந்தி மகான் ஆரம்பித்து நடத்திய எந்தப் போராட்டத்திலும் இந்திய மக்கள் பூரணமாக அவரை ஆதரித்து நின்றதாகச் சொல்ல முடியாது.

*1921*-ம் வருஷத்து ஒத்துழையாமை இயக்கத்தின்போது இந்தியாவில் வக்கீல்கள் கோர்ட்டுக்குப் போவதையும் மாணுக்கர்கள் கலாசாலைகளுக்குப் போவதையும் நிறுத்தினார்களா! இல்லை. நூற்றுக்கு ஒருவர் வீதந்தான் மகாத்மாவின் கட்டளையை நிறைவேற்றினார்கள்.

சட்டசபைகளுக்கு அரசியல் வாதிகள் அனைவரும் கட்டுப்பாடாகப் போகாமல் இருந்தார்களா? — அதுவுமில்லை. காங்கிரஸ் 'வாதிகள் போகாத சமயத்தில் மற்றவர்கள் 'இதுவே நல்ல சமயம்' என்று நுழைந்து கொண்டார்கள்.

*1930*-ம் வருஷத்துப் பொதுஜன சத்தியாக்கிரஹத்தின் போதுதான் இந்திய மக்களில் எத்தனை பேர் காந்திஜியின் வழியைப் பின்பற்றினார்கள்!

நூற்றுக்கு ஐந்து பேர் வீதம் இருக்கலாம். மற்றவர்கள் தங்கள் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

*1940*-ம் ஆண்டில் பிரிட்டிஷாரின் யுத்த முயற்சிகளுக்கு உதவி செய்ய வேண்டாம் என்று மகாத்மா காந்தி சொன்னாரே! அதைத்தான் எவ்வளவு பேர் கேட்டார்கள்! எவ்வளவு பேர் காரியத்தில் நடத்திக் காட்டினார்கள்!

எல்லா விதமான யுத்த உதவிகளும் பிரிட்டிஷாருக்கு இந்தியாவில் தங்கு தடையின்றிக் கிடைத்துக் கொண்டுதா னிருந்தன.

இப்படியெல்லா மிருந்தும், காந்திஜி தமது சத்தியத்தின் பலத்தினால், தவத்தின் வலிமையால், ஆத்ம சக்தியால் இந்தப் பெரிய பாரத தேசம் அரசியல் விடுதலை பெறும்படி செய்தார். லார்ட் மவுண்ட்பேட்டன் கையினாலேயே டில்லிமா நகரில் யூனியன் ஜாக் கொடி இறக்கப்பட்டு, அசோக சக்கரம் பொறித்த இந்தியாவின் சுதந்திரக் கொடி உயர்த்தப்பட்ட விந்தையைக் கண்டோம்.

உலகத்தின் அரசியல் சரித்திரத்திலேயே இம்மாதிரி ஓர் அற்புதம் இதற்கு முன் என்றும் நிகழ்ந்ததில்லையென்று திட்டமாகக் கூறலாம்.

# அவதரித்த புண்ணிய தினம்

அரசியலில் மட்டுமின்றி, வேறு பல துறைகளிலும் மகாத்மா காந்தி இந்த நாட்டில் அற்புதங்களை விளைவித்தார்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந் நாட்டின் சமூக வாழ்வில் வேர் ஊன்றியிருந்த தீண்டாமையை ஒழித்தார்.

பெரிய புராணத்தில் நந்தனார் சரித்திரத்தைப் படித்தவர்கள், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே இங்கே தீண்டாமை எவ்வளவு வலுப் பெற்றிருந்தது என்பதை அறியலாம். தீண்டாதவர் ஒருவர் எவ்வளவு தீவிர பக்தராயிருந்தாலும், அவர் ஆலயத்துக்குள் செல்வதென்பது நினைக்கவும் முடியாத காரியமா யிருந்தது.

காந்தி மகான் காலத்தில் இந்த நாட்டிலுள்ள எல்லாத் தேவாலயங்களும் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன. எல்லா மக்களும் எவ்வித வேற்றுமையுமின்றிச் சரிநிகர் சமானமாகக் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடும் உரிமையைக் காந்தி மகான் அளித்தார்.

இது போலவே, ஹிந்து சமூகத்தில் பல நூறு ஆண்டுகளாகக் குடி கொண்டு வேரூன்றிப் போயிருந்த பல தீமைகளை மகாத்மா அகற்றி எண்ணற்ற மக்களுக்குச் சமூக விடுதலையும் தந்தார்.

*  *  *

உலகெங்கும் பரவி மனித சமூகத்தைக் கெடுத்து வந்த நிரீசுவர-நாஸ்திக- லௌகாயதக் கொள்கைகள் மேனாட்டாரின் தொடர்பினால் பாரத நாட்டிலும் பரவி வந்தன. "கண்டதே காட்சி; கொண்டதே கோலம். இந்த உலகத்தில் சுகபோகங்களைப் பெற்று வாழ்வதே வாழ்க்கையின் லட்சியம்" என்று சமூகத்தின் மேற்படியில் உள்ளவர்கள் கருதத் தலைப்பட்டார்கள். ஆங்கிலம் படித்தவர்கள் "அரசாங்க உத்தியோகமே மோட்சம்" என்று நம்பினார்கள்.

குரோதமும் லோபமும், மதமும் மாற்சரியமும் உலகில் வளர்ந்து வந்தன. தேசங்களுக்குள் துவேஷமும் யுத்த வெறியும், சமூகங்களுக்குள் பகைமையும் பூசலும் பரவி வந்தன.

இத்தகைய சூழ்நிலையில் காந்தி மகாத்மா தோன்றினார். "சத்தியமே ஜயம்" என்ற பழைய தர்மத்தை நிலை நாட்டினார். "அஹிம்சையினால் ஹிம்சையை வெல்லலாம்" என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி எடுத்துக் காட்டினார்.

அன்பினாலும் தியாகத்தினாலும் எப்பேர்ப்பட்ட பகைவர்களையும் வென்று வசப்படுத்தலாம் என்று அறிவூட்டினார்.

உண்மையுடன் உளங் கசிந்து இறைவனைப் பிரார்த்திப்பதனால் நடவாத காரியமும் நடந்து விடும் என்று போதித்தார்; தம் சொந்த வாழ்க்கையினாலும் நிரூபணம் செய்தார்.

காந்திஜி பாரமார்த்திகத் துறையில் இந்திய தேசத்துக்கும் உலகத்துக்கும் புரிந்த தொண்டு எல்லாவற்றிலும் மேன்மை யானது.

அணுகுண்டு. ஜலவாயு குண்டு முதலிய பயங்கர ராட்சத ஆயுதங்களினால் இந்த உலகம் அழிந்து போகாமல், மனித வர்க்கம் உய்ந்து கடைத்தேறுமானால், அது காந்தி மகானுடைய ஆத்ம சக்தியினால்தான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மகாத்மாவின் ஆத்ம சக்தியினால்தான் உலகத்தையே அழித்து விடக்கூடிய மூன்றாவது பயங்கர மகா யுத்தம் - இன்னும் தொடங்காமல் தடைப்பட்டிருக்கிறது. மகாத்மாவின் ஆத்ம சக்திதான் இனியும் இந்த உலகத்தையும் மனித வர்க்கத்தையும் காத்தருளப் போகிறது.

*  *  *

காந்தி மகான் தம் வாழ்நாளில் விளைத்த அற்புதங்களையும், அவற்றினால் பாரத நாடும் உலக

# சேர்ந்து நில்லுங்கள் !




இலங்கை மாஜி மந்திரி ஸ்ரீ பொன்னம்பலம் "இலங்கையிலுள்ள தமிழர்கள் ஒன்று சேர்ந்து நின்று கொத்தலாவல சர்க்காரின் விரோத நடவடிக்கைகளை எதிர்க்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்.

மும் அடைந்திருக்கும் நலங்களையும் இன்று நம்மால் சரிவரக் கணித்து மதிப்பிட முடியாது. ஏனெனில், சிறிய காரியங்கள் பல,-அற்பமான ஆசாபாசங்கள் பல,-சுயநல நோக்கங்கள் பல,- இன்று நம் உள்ளங்களைக் குழப்பி யிருக்கின்றன. உலகில் ஒவ்வொருவரும் தத்தம் சிறிய வட்டத்தி லிருந்து பார்த்து, 'காந்திஜியினால் நான் அடைந்த பயன் என்ன !' என்று சிந்திக்கிறார்கள்.

ஆனால் சரித்திரம் வேறு விதமாகக் காந்தி மகானின் சாதனைகளை மதிப்பிடும். நூறு ஆண்டுகளுக்குப் பின்னால் வருவோர், மகாத்மா காந்தி என்னும் அவதார புருஷர் தோன்றி உலகத்தை உய்வித்த அற்புதத்தை எண்ணி எண்ணி மகிழ்வார்கள் ; பாமாலை சூடுவார்கள் ; காவியங்கள் இயற்றுவார்கள் ; வியந்து போற்றுவார்கள்.

• • •

காந்தி மகான் அவதரித்த புண்ணிய தினமாகிய அக்டோபர் மீ 2உ வருகிறது. அன்று இந்தியா தேசமெங்கும் மக்கள் மகாத்மாவை நினைத்துக் கொள்வார்கள். அவர் புனித ஞாபகத்துக்கு அஞ்சலி செலுத்துவார்கள். கூட்டங்கள், ஊர்வலங்கள், பிரார்த்தனைகள் எல்லாம் நடக்கும்.

உலகத்திலும் இந்தியாவின் மற்றப் பிரதேசங்களிலும் காந்தி மகானுடைய அவதார மகிமையைப் பற்றி எந்தவிதச் சந்தேகம் இருந்தாலும், நம் செந்தமிழ் நாட்டு மக்களிடையே எவ்வித ஐயப்பாடும் கிடையாது. தென்னாப்பிரிக்காவில் மகாத்மா சத்தியப்போர் தொடங்கியதிலிருந்து தமிழர்கள் அவருடன் தோளோடு தோள் நின்று உதவி புரிந்திருக்கிறார்கள். இந்தியாவின் விடுதலைக்காக அவர் நடத்திய ஒவ்வொரு போராட்டத்திலும் முன்னணியில் நின்றிருக்கிறார்கள்.

ரவ்லட் சட்டத்தை எதிர்த்துத் தேசமெங்கும் கடையடைப்புச் செய்து சத்தியாக்கிரஹ இயக்கம் தொடங்கும் யோசனை, மகாத்மா சென்னையில் தங்கியிருந்தபோதுதான் அவருடைய திரு உள்ளத்தில் உதயமாயிற்று.

காந்திமகான் தென் பாண்டிய நாட்டில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோதுதான் சட்டை, தலைப்பாகைகளைக் கழற்றி எறிந்து விட்டு, அரையில் மட்டும் ஆடை உடுத்துவது என்னும் மகத்தான முடிவுக்கு வந்தார். இந்த ஒரு செயலானது மகாத்மாவை ஏழைகளோடு ஏழையாக்கி ஏழைகளின் உள்ளத்தில் நிலையான இடம் பெறச் செய்தது. புத்தர், ஏசுநாதர் முதலிய அவதார புருஷர்களின் வரிசையில் மகாத்மாவைச் சேர்த்து எண்ணும்படி செய்தது.

எனவே, தமிழர்களுக்கும் காந்திஜிக்கும் மிக முக்கியமான தொடர்புகள் உண்டு.

தமிழ் மக்கள் காந்தி ஜயந்தியை மிக உற்சாகமாகவும் கோலாகலமாகவும் கொண்டாடி மகிழ்வார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# எப்படிக் கொண்டாடுவது?

**கா**ந்தி ஜயந்தியைக் கொண்டாடுவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள், நூற்பு யக்ஞங்கள், கதர் விற்பனை, கதர் வாங்குதல், ஆலயங்களில் விசேஷ வழிபாடுகள் நடத்தல், கிராம சேவை புரிதல் முதலிய பணிகளின் மூலம் மகாத்மா ஜயந்தியைக் கொண்டாடலாம்.

டில்லி, கல்கத்தா, பம்பாய் முதலிய பல பெரிய நகரங்களிலும் காந்தி ஜயந்தி அன்று அதிகாலையில் தேசத் தலைவர்கள், மந்திரிகள், தொண்டர்கள் முதலியோர் பொது மக்களுடன் காந்தி மகானின் நினைவுச் சின்னமாக விளங்கும் இடத்துக்குச் சென்று, மலர்கள் தூவி, மகாத்மாவுக்கு அஞ்சலி செய்து விட்டு, மற்ற நடவடிக்கைகளைத் தொடங்குகிறார்கள்.

தமிழகத்தின் தலைநகரமான சென்னையில் மட்டும் இது வரையில் அத்தகைய காந்தி நினைவுச் சின்னம் இல்லாமலிருக்கிறது. காந்தி பக்தர்கள் எல்லாரும் ஓரிடத்தில் சேர்ந்து காந்தி மகானுக்கு அஞ்சலி செய்யக் கூடிய இடம் ஒன்று இன்னும் சென்னையில் ஏற்பட வில்லை.

இந்தக் குறையை நிவர்த்திப்பதற்காக நம் சென்னைக் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களும், தலைவர் ராஜாஜி அவர்களும் முயற்சி தொடங்கியிருக்கிறார்கள். கிண்டி ராஜபவன் தோட்டத்தில் காந்தி மணி மண்டபம் நிறுவப்பட்டு வருகிறது. அஸ்திவாரம் நன்கு அமைந்து, மேல் கட்டிடமும் எழும்பத் தொடங்கி விட்டது. தமிழ் நாட்டுக்கே தனி உரிமையான சிற்ப சாஸ்திர முறைப்படி மணி மண்டபம் அமைப்பதற்குக் கல்தச்சர்கள் ராஜபவனம் தோட்டத்தில் வேலை செய்து வருகிறார்கள். அடையாற்றிலிருந்து கிண்டிக்குப் போகும் சாலையில் செல்வோர், கல் உளிகள் வேலை செய்யும் போது உண்டாகும் 'கிளீர்' 'கிளீர்' சத்தத்தைக் கேட்டு மகிழலாம்.

இந்தத் திருப்பணிக்காகத் தமிழ் மக்கள் நன்கொடையளித்து உதவ வேண்டுமென்று கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் வேண்டுகோள் விடுத்துச் சில மாத காலம் ஆகிவிட்டது. ராஜாஜி அவர்களும் அடிக்கடி இதைப் பற்றி நினைவூட்டிக் கொண்டு வருகிறார்கள்.

கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களின் வேண்டுகோளுக்குப் பிறகு இதுவரையில் ஏறக்குறைய ரூ. 56,000 வரையில் வசூலாகி யிருக்கிறது.

இதைப் பற்றி அதிருப்திப் படுவதற்கில்லை. ராஜாஜி முதலியவர்கள் பல்லாயிரம் பேரிடமிருந்து கிடைக்கும் சிறு தொகைகளைக் கொண்டே காந்தி மண்டபம் நிர்மாணிக்கப்பட வேண்டும் என்று சொல்லி வருவதால், பெரிய செல்வர்களும் சிறிய நன்கொடைகளை அளித்து வருகிறார்கள். இதனாலேதான் இதுவரை ரூ. 56,000 மட்டும் வசூலாகி யிருக்கிறது.

காந்தி ஞாபகார்த்த மணி மண்டபம் கட்டிப் பூர்த்தியாவதற்கு இன்னும் குறைந்த பட்சம் இரண்டரை லட்சம் ரூபாய் தேவை.

காந்தி மகான் பிறந்த இந்தப் புனிதமான அக்டோபர் மாதத்தில், மணி மண்டபம் கட்டுவதற்குத் தேவைப்படும் தொகை முழுதும் வசூலாகி விட்டால், எவ்வளவு நன்றா யிருக்கும்!

இந்த வருஷத்துக் காந்தி ஜயந்திக் கொண்டாட்டத்தைத் தமிழ் மக்கள் காந்தி மண்டப நிதி வசூல் கொண்டாட்டமாக நடத்த வேண்டும் என்று ராஜாஜி அவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார். அக்டோபர் மீ 2௳ அன்று இந்தப் புனிதமான கைங்கரியத்தில் காந்திஜியின் பக்தர்கள் ஈடுபட வேண்டும். பின்னர், அக்டோபர் மாதம் முழுதும் தொடர்ந்து நடத்த வேண்டும்.

"கல்கி" நேயர்கள் இம்மாதிரியான திருப்பணிகளுக்கு உதவி செய்வதில் எப்போதும் முன்னணியில் இருந்திருக்கிறார்கள். பாரதி மண்டபத் திருப்பணி தொடங்கியதிலிருந்து ஒவ்வொரு நல்ல கைங்கரியத்துக்கும் தாராளமாக வழங்கியிருக்கிறார்கள். காந்தி மண்டபத் திருப்பணியில் மட்டும் அவர்கள் பின்வாங்கி விடுவார்களா, என்ன! அவர்கள் அளிக்க எண்ணி யிருக்கும் நன்கொடையைச் சிறிய தொகையானாலும், பெரிய தொகையானாலும், இந்த அக்டோபர் மாதத்துக்குள் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற அளவில் தங்கள் கடமையைச் செய்தால், அடுத்த ஆண்டு காந்தி ஜயந்திக் கொண்டாட்டத்தை, மகாத்மா மணி மண்டபத்திலேயே அமோகமாகத் தொடங்கி நடத்தி வைப்பது சாத்தியமாயிருக்கும்.

காந்தி மண்டப நிதிக்குப் பணம் அனுப்ப வேண்டிய விலாசம்:—சென்னைக் கவர்னர், (காந்தி மண்டப நிதி), ராஜ பவனம், கிண்டி, சென்னை.

# நெசவுத் தொழிலும் நாட்டின் நலனும்

**கா**தால் கேட்டும் கண்ணால் கண்டும் எல்லோரும் அறிந்த உண்மைக்கு இப்போது நிபுணர் கமிட்டி ஒன்றும் முத்திரை வைத்து விட்டது.

பார்லிமெண்டு அங்கத்தினரான ஸ்ரீ நித்யானந்த கனுங்கா தலைமையில் இந்திய சர்க்காரால் நியமிக்கப்பட்டிருந்த நெசவுத் தொழில் விசாரணைக் கமிட்டியார் சென்ற வாரம் தங்கள் அறிக்கையை வெளியிட்டுள்ளனர். இந்தியாவில் உள்ள ஆலைகள், கைத்தறிகள் இவற்றின் நிலைமையை அவர்கள் நன்கு பரிசீலனை செய்து, தேசத்தின் எதிர்கால நன்மைக்கு உகந்தவாறு நெசவுத் தொழிலைத் திட்டமிட்டு நடத்துவதற்கு வேண்டிய பல யோசனைகளைக் கூறி யிருக்கிறார்கள்.

"மில் ஜவுளி உற்பத்தியை இப்போது உற்பத்தியாகும் அளவிலேயே கட்டுப்படுத்தி நிறுத்த வேண்டும்; கைத்தறி ஜவுளி உற்பத்தி அதிகரிக்க வசதி அளிக்க வேண்டும்."

இவை மேற்படி கமிட்டி செய்துள்ள சிபார்சுகளின் முக்கிய அம்சங்கள். அவ்வாறு செய்வதற்கான வழி வகைகளையும் கனுங்கா கமிட்டியார் எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

தற்போது இந்தியாவில் உள்ள ஆலைகளில் வருஷத்துக்கு 480 கோடி கெஜம் துணி உற்பத்தியாகிறது. இதற்கு மேல் மில்கள் அதிகமாக உற்பத்தி செய்ய அநுமதிக்கக் கூடாது. ஆலை உற்பத்தியின் மேல் வரம்பை 500 கோடி கெஜம்

# சரிநிகர் சமானம்!







இந்தியப் பார்லிமெண்டில் நிறைவேறியிருக்கும் ஹிந்து விவாக சீர்திருத்தச் சட்டம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சரிநிகர் சமானமான இல்லற உரிமைகளை அளிக்கிறது.

என்று நிர்ணயித்து விடவேண்டும். நெசவு ஆலைகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் தொடர்ந்து வேலையில் இருந்து வர வேண்டும் என்பதற்காகவே மில் துணி உற்பத்தியை 500 கோடி கெஜமாக நிர்ணயித்திருப்பதாகக் கமிட்டியார் கூறியுள்ளனர். எனவே, இதில் தொழிலாளர் பிரச்னை சம்பந்தம் இராவிடில், மில் ஜவுளி உற்பத்தி எல்லையை இன்னும் குறைக்கும்படியும் மேற்படி கமிட்டியார் சிபார்சு செய்திருக்கலாம் என்று ஏற்படுகிற தல்லவா!

1951–52ல் எடுத்த கணக்கின்படி இந்தியாவில் உள்ள ஒவ்வொரு நபரும் வருஷத்துக்குச் சராசரி 12½ கெஜம் துணி உபயோகிப்பதாகத் தெரிய வந்தது. 1955-56ல் ஒவ்வொரு நபரும் 15 கெஜம் துணி உபயோகிப்பது சாத்தியமாக வேண்டும் என்பதும் ஐந்து ஆண்டுத் திட்டத்தின் இலட்சியம். அதற்குத் தகுந்தவாறு குறிப்பிட்ட அளவு துணி உற்பத்தி பெருக வேண்டும் என்று ஐந்து வருஷத் திட்டம் கூறியது. ஆனால் ஐந்து ஆண்டுகளில் உற்பத்தி செய்ய வேண்டிய துணிகளை ஆலைகள் மூன்று ஆண்டுகளிலேயே உற்பத்தி செய்து குவித்து விட்டன.

மேலும் ஆலைகள் துணி உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டே போனால், துணிகள் விற்பனையாகாமல் தேங்கும்படி நேரும். பிறகு, அவ்வாறு தேங்கிய துணிகளை என்ன செய்வது என்ற பிரச்னை உண்டாகி, ஜவுளித் தேக்கத்தைக் கரைப்பதற்காக விலையைக் குறைக்கவேண்டியிருக்கும். அதன் விளைவாக, கைத்தறி ஜவுளிகளுக்குப் போட்டி ஆபத்து ஏற்பட்டு, கைத்தறி நெசவாளர்கள் மறுபடியும் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் அடைந்திருந்த பரிதாப நிலையை அடைந்து கஷ்டப்படும்படி நேரும்.

கைத்தறி நெசவாளரின் பட்டினிப் பட்டாளங்கள் நாடெங்கும் சுற்றி அலையும். சென்னை போன்ற நகரங்களில் வீதிகளில் கைத்தறி நெசவாளர் செத்து விழுந்து கிடக்கும் பயங்கர—பரிதாபக் காட்சிகளைப் பார்க்கும்படி நேரிடலாம்.

எனவே, இந்தியா முழுவதும் உள்ள பல லட்சம் கைத்தறி நெசவாளர்களின் நல்வாழ்வுக்குக் குந்தகம் ஏற்படாமல் இருக்க வேண்டுமாயின், மில் துணி உற்பத்தியைக் கட்டுப்படுத்த வேண்டியது அத்தியாவசியம் என்று ஏற்படுகிறது. இதைக் கனுங்கா கமிட்டியும் எடுத்துக் காட்டியிருக்கிறது.

சென்ற சில வருஷங்களில் மில் துணி உற்பத்தி வருஷத்துக்கு வருஷம் அதிகமாகி வந்திருக்கிறது. கைத்தறித் துணி உற்பத்தியோ வருஷத்துக்கு வருஷம் குறைந்து வந்திருக்கிறது.

1910-ல் இந்தியாவில் நெசவு மில்களின் தொகை 263; இன்றை நம் நாட்டில் 453 மில்கள் இருக்கின்றன. அதற்குத் தகுந்தாற்போல் ஜவுளி உற்பத்தியும் அதிகமாகியிருக்கிறது.

1938–39ல் 192 கோடி கெஜம் கைத்தறித் துணி உற்பத்தியாகியது. 1949–50ல் மேற்படி உற்பத்தி 75 கோடியாகக் குறைந்துவிட்டது. அந்தத் துணியும் மில்களின் போட்டி காரணமாக விற்பனையாகாமல் தேங்கும் நிலைமை ஏற்பட்டு விட்டது. அதன் விளைவாகவே கைத்தறி நெசவாளர்கள் பஞ்சத்துக்கும் பட்டினிக்கும் இலக்காகி அலைந்து திரியும்படி நேர்ந்தது.—இதையெல்லாம் கனுங்கா கமிட்டியார் எடுத்துக் காட்டித் தங்கள் சிபார்சுகளைச் செய்திருக்கிறார்கள்.

1953-ல் 70 கோடி கெஜம் மில் துணியும் 6 கோடி கெஜம் கைத்தறித் துணியும் இந்தியா




# கோன்

## நூல்கள்

நிட்டிங் பாக்டரிகளுக்காக 20,
26 நம்பர் நூல்களை நாங்கள்
கோன்களில் தயாரிக்கிறோம்.

**தி பிரிமியர் மில்ஸ் (CBE) லிமிடெட்.**

புலாங்கிணர் R.S. உடுமலைப்பேட்டை.

தந்தி: TEXTILES . . . . . . . . டெலிபோன்- 22.

EP



## கண்ணைக் கவரும் கலர்களில்

அற்புதமான பார்டர்களில் அசல், கொள்ளேகாலம்
பட்டு சேலைகள், மைசூர் ஜார்ஜெட் கிரேப் சேலைகள்
சோளி பீஸ்கள், பாவாடைகள், சரிகை வேஷ்டிகள்
முதலிய பட்டு மற்றும் நூல்
ஜவுளிகளுக்கு நம்பிக்கையான இடம்

# ரத்தன்
# ஸில்க் ஹவுஸ்

சன்னதி தெரு மைலாப்பூர் மதருஸ்-4.

உங்கள் தோற்றத்தை
அழகு படுத்தக்கூடியது

# கிங்ராஜ்
## பனியன்கள்

நீண்ட நாள் உறுதியுடன் உழைக்கும்







கிங்ராஜ் & கோ. பல்லடம் ரோட், திருப்பூர்
PHONE. 161

லிருந்து ஏற்றுமதி ஆயின. அதாவது மில் துணியில் பத்தில் ஒரு பங்குகூடக் கைத்தறித் துணி ஏற்றுமதியாகவில்லை. ஆதலின், உள்நாட்டிலும் சரி, வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதிலும் சரி, கைத்தறித் துணி மில் துணியுடன் போட்டியிட்டுத் தலை தூக்குதல் இயலாத காரியம்.

எனவே, இந்திய சர்க்கார் தற்போது கைத் தறித் தொழிலுக்கு அளித்து வரும் பல்வேறு பாதுகாப்புகளையும் தொடர்ந்து அளித்து வர வேண்டியது அவசியத்திலும் அவசியம்.

* * *

கானுங்கா கமிட்டியார் மில் துணி உற்பத்தி மேற்கொண்டு அதிகமாகாமல் தடுக்கும்படி சிபாரிசு செய்திருக்கிறார்களே யன்றி, இப்போது உள்ள உற்பத்தியைக் குறைக்கச் சொல்லவில்லை.

எனவே, அவர்களுடைய சிபாரிசினால் மில்களுக்குத் தற்போது கிடைக்கும் ஏராளமான லாபம் குறைந்து விடாது.

1960-ம் வருஷத்துக்குள் இந்தியாவில் ஒவ்வொரு நபரும் உபயோகிக்கும் துணி வருஷத்துக்கு 18 கெஜமாக உயரக் கூடும். அதன் காரணமாக 40 கோடி ஜனங்களுக்கு வருஷத்துக்கு 720 கோடி கெஜம் துணி தேவையாக இருக்கும் என்று கானுங்கா கமிட்டியார் கூறுகின்றனர்.

அதன்படி இன்னும் ஆறு வருஷங்களில், மில்களுக்கு ஒதுக்கப்பட்ட 500 கோடி கெஜம் துணி போக மீதியுள்ள 220 கோடி கெஜம் துணி கைத்தறி நெசவாளர்களால் உற்பத்தி செய்யப்படும் என்பது கமிட்டியாரின் நம்பிக்கை. இந்த நம்பிக்கை நிறைவேறுமானால் பாரத நாட்டில் கைத்தறித் தொழில் மறுபடியும் ஓரளவு சுபிட்ச நிலையை அடைவதற்கு வழி உண்டாகும்.

பாரதநாடு சுதந்திரம் பெற்ற சில வருஷங்களுக்குள் கைத்தறித் தொழில் அதிவேகமாக நசித்து, ஆயிரக் கணக்கான கைத்தறி நெசவாளர்கள் பஞ்சம் - பட்டினிக்கு ஆளானார்கள். இந்த நிலைமையைக் கண்டு தேசபக்தர்கள் எல்லாரும் கண்ணீர் வடித்தார்கள்.

நாடெங்கும் நடந்த பெருங் கிளர்ச்சியின் காரணமாக இந்திய அரசாங்கம் விழித்துக் கொண்டது. கைத்தறித் தொழிலுக்குச் சில உதவிகள் செய்ய முன் வந்தது.

கானுங்கா கமிட்டியாரின் சிபார்சுகள் இந்திய சர்க்காரின் மேற்படி முயற்சிகளுக்கு மேலும் ஊக்கம் அளிக்குமென்று நம்புகிறோம். மிகவும் மிதமான நியாயமான அச்சிபார்சுகளைத் தீவிரமாக அமுலுக்குக் கொண்டு வந்து நடத்தி வைப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# சமர்ப்பிக்கின்றோம்

**பா**ரதநாடெங்கும் வெளிநாடுகளிலும் காந்தி ஜயந்தி வைபவம் நடைபெறும் இப்புனித வாரத்தில், "கல்கி" இரண்டாவது கைத்தொழில் மலரை மகாத்மாவின் திருவடிகளில் சமர்ப்பிக்கின்றோம். குடிசைத் தொழில் என்று கூறப்படும் கைத்தொழில்களைக் காட்டிலும் காந்திஜியின் மனத்துக்கு உகந்த காரியம் வேறு எதுவுமே இல்லை. பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்கு வழிகாட்டி வெற்றி பெற்ற காந்தி மகான் பாரத நாட்டு மக்கள் சுபிட்ச வாழ்வு பெறுவதற்கும் அஸ்திவாரத்தை அமைத்து விட்டார். அதன் பலனாகவே இன்று இந்தியாவில் வீடுகளில் செய்யப்படும் கைத்தொழில்களுக்கு ஆக்கம் அளிப்பதில் எல்லோரும் ஆர்வம் கொண்டுள்ளனர்.

மேற்படி கைத்தொழில்களில் ஒன்றான பனியன் தொழில் சம்பந்தமான அரிய கட்டுரைகளை இந்தக் "கல்கி" இதழில் விவரமாகக் காணலாம். பரம ஏழைகள் முதல் பெரும் செல்வந்தர்கள் வரையில் சகலரும் போட்டுக் கொள்ளுவதற்கு உகந்த பனியன் உற்பத்தியில் தமிழ் நாடு முதல் ஸ்தானம் வகிக்கிறது என்பதைக் கேட்கத் தமிழ் மக்கள் பெருமை அடைவார்கள்.

திருப்பூர், மதுரை, சேலம் முதலிய ஜில்லாக்களில் சிறப்பாக நடைபெறும் பனியன் தொழில் தமிழர்களின் தொழில் திறமைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

மந்திரிகளும் தொழில் நிபுணர்களும் இந்தக் "கல்கி" இதழுக்குச் செய்திகளும் கட்டுரைகளும் தந்து உதவி யிருக்கிறார்கள்.

இந்தக் கைத்தொழில் மலரின் அட்டையை அலங்கரிக்கும் கிருஹலக்ஷ்மியின் ஒளி வீசும் முகத்தையும் கைத் திறனையும் பாருங்கள். பின்னல் தொழிலில் ஈடுபட்டுள்ள அந்தக் குடும்பத்தில் நிலவும் அமைதியையும் ஆனந்தத்தையும் பாருங்கள்!

அந்தக் கிருஹலக்ஷ்மி சுபிட்ச தேவதையாகவே காட்சி அளிக்கிறாள் அல்லவா!




## அத்தியாயம் 9

## நான் பிறந்தேன்!

குழந்தை தன் தாயைப் பார்த்து, "அம்மா! நீயும் அப்பாவும் கலியாணம் செய்து கொண்டபோது என்னை ஏன் அழைத்துக் கொண்டு போகவில்லை?" என்று குறைப்பட்டதாம். இப்படி ஒரு விகடப் பேச்சை அடிக்கடி பலர் சொல்லி நான் கேள்விப் பட்டதுண்டு. என் பெற்றோர்களின் திருமணத்துக்கு நான் போகவில்லை. உலகில் சாதாரணமாக நடக்கும் கல்யாணங்களைப் போல் அவர்களுக்குக் கலியாணம் நடக்கவு மில்லை. என் பெற்றோர்களைப் பற்றி எனக்கு நினைவிருப்பது மிகவும்சொற்பம். என்னை வளர்த்த தந்தை என் சொந்தப் பெற்றோர்களைப் பற்றிக் கூறிய விவரங்களை மட்டுமே அறிவேன். அவருக்கும் என் பெற்றோர்களைப் பற்றி எல்லா விவரங்களும் தெரிந்திருக்க வில்லை. அவருக்குத் தெரிந்த விவரங்கள் எல்லாவற்றையும் எனக்குச் சொன்னாரா என்பதையும் நான் அறியேன். என்னுடைய உள்ளம் வேதனைப்படக் கூடாது என்பதற்காகச் சில செய்திகளை அவர் சொல்லாமல் மறைக்கிறார் என்று ஒவ்வொரு சமயம் நான் சந்தேகப் பட்டதுண்டு. மந்திரமூர்த்தி என் பெற்றோர்களைப் பற்றிக் கூறிய விவரங்களைத்தான் இங்கே எழுதுகிறேன். அவர்களுடைய வரலாற்றை எழுதும்போது எனக்குச் சில சமயம் உற்சாகமாகவும் இருக்கிறது; சில சமயம் மன வேதனையும் உண்டாகிறது. ஆயினும் இந்தச் சிறைக்கூடத்தில் பொழுதுபோவதற்கு வசதியாக இருக்கிறது. மேலும், ரங்கதுரை என் பெற்றோர்களின் வாழ்க்கைச் சம்பவங்களுக்கும், என் வாழ்க்கையில் நடந்த விபரீத நிகழ்ச்சிகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் என்று கருதுகிறார். ஆகையால், மந்திரமூர்த்தி சொல்லி எனக்கு ஞாபகம் இருக்கும் எல்லா விவரங்களையும் ஒன்று கூட விடாமல் எழுதும்படி வற்புறுத்துகிறார். அவருடைய விருப்பத்தை இப்போதாவது நிறைவேற்றி, முன்னம் அவருக்கு நான் இழைத்த அநீதிகளுக்குப் பரிகாரம் தேட முயல்கிறேன்.

• • •

என் தந்தையார் காசிலிங்கம் தென் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர். அவர் பள்ளிக்கூடத்தில் படித்தபோது படிப்பில் அவ்வளவாகக் கவனம் செலுத்தவில்லை. ஒரே வகுப்பில் இரண்டு, மூன்று வருஷம் இருப்பாராம். ஆனால் விளையாட்டுகளில் முதன்மையாக இருப்பாராம். நீளம் தாண்டுதல், உயரம் தாண்டுதல், ஓட்டப் பந்தயம் முதலியவற்றில் முதற் பரிசுகள் வாங்குவாராம். 'பார்' விளையாட்டில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தாராம். சண்டை பிடிப்பதிலும் கெட்டிக் காரராம். பள்ளிக்கூடத்தில் மற்றப் பிள்ளைகளெல்லாம் அவரைக் கண்டு பயந்து நடுங்குவார்களாம். அவர்களில் பலர் அவரிடம் மிக்க பிரியமாகவும் இருப்பார்களாம்.

அவருடைய இந்தப் போக்கு அவருடைய பெற்றோர்களுக்குப் பிடிக்கவில்லை. ஓயாமல் அவரை "நீ உருப்படமாட்டாய்!" என்று திட்டிக் கொண்டிருப்பார்களாம். ஆனால் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்மார்கள் ஒருவாறு அவருடைய விஷமங்களைப் பொறுத்துக் கொண்டு அவரை உற்சாகப்படுத்தியும் வந்தார்கள். ஏனெனில், மற்றப் பள்ளிக்கூடங்களுடன் நடந்த விளையாட்டுப் போட்டிகளில் காசிலிங்கத்தினால் அவருடைய பள்ளிக்கூடத்துக்கு அடிக்கடி வெற்றியும் புகழும் கிட்டி வந்ததாம்.

பள்ளிக்கூடத்துக்குப் புதிதாகத் தலைமை ஆசிரியர் வந்த போது, இந்த நிலைமை மாறிவிட்டது. புதிய தலைமை ஆசிரியருடைய மகனும் அந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்க வந்து சேர்ந்தான். அவனுக்குக் காசிலிங்கத்தைக் கண்டால் பிடிப்பதில்லை. அவன் தன் தந்தையிடம் போய்க் காசிலிங்கத்தைப் பற்றிக் கோள் சொல்வானும். இதை யறிந்த காசிலிங்கம் ஒரு நாள் அந்தப் பையனைச் சண்டைக்கு இழுத்து அடித்து விட்டானும். தலைமை ஆசிரியருக்கு அளவு மீறிக் கோபம் வந்து விட்டது. எல்லாப் பிள்ளைகளையும் கூட்டி வைத்துக் கொண்டு காசிலிங்கத்தைத் திட்டி அவமானப் படுத்தியது மல்லாமல், அவனுக்குப் பிரம்பினல் ஆறு அடி கொடுக்கப் போவதாகச் சொல்லி விட்டுப் பிரம்பையும் கையில் எடுத்துக் கொண்டாராம். அப்போது காசிலிங்கம் தம்மிட மிருந்த பள்ளிக்கூடப் புத்தகங்களைத் தூக்கித் தலைமை ஆசிரியர் முகத்தைப் பார்த்து எறிந்து விட்டு, அவர் திகைத்துப் போய் நிற்கையில், அவருடைய கையிலிருந்த பிரம்பையும் பிடுங்கிக் கொண்டு ஓட்டம் எடுத்தாராம். வீட்டுக்குப் போனல் அடியும் வசவும் கிடைக்கும் என்பது நிச்சயம். மறுபடியும் இந்தப் பள்ளிக்கூடத்துக்குத் தான் போகச் சொல்வார்கள். இந்தத் தலைமை ஆசிரியரிடம் ஆறு பிரம்படிக்குப் பதிலாகப் பன்னிரண்டு பிரம்படி பெற்றுக் கொள்ளும்படி நேரிடலாம். இதை யெண்ணி, காசிலிங்கம் வீட்டுக்குப் போகாமல் ஊரை விட்டு ஓடிப் போகத் தீர்மானித்தார். மதுரை நகருக்குப் பிரயாசை சிலநாள் பட்டினியாகச் சுற்றி அலைந்தார். அங்கே அப்போது ஒரு சர்க்கஸ் கூட்டத்தார் வந்திருந்தார்கள். அந்த நாளில் சில சர்க்கஸ் கம்பெனிகள் பிரபலமா யிருந்தன. அவற்றுக்குப் பொது ஜனங்களிடம் ஆதரவும் இருந்தது. ஸாண்டோ சங்கரராம் என்பவர் மார்பில் பாறாங் கல்லை ஏற்றிக் கொண்டு உடைக்கச் செய்தல், இரும்புச் சங்கிலியை முறித்தல், மோட்டாரைப் பிடித்து இழுத்து நிறுத்துதல் முதலிய சாஹஸச் செயல்களைச் செய்து வந்தார். சிங்கம், புலி, யானை, குதிரை முதலிய மிருகங்களின் வேடிக்கைகளும் அந்தச் சர்க்கஸில் நடந்து வந்தன.

காசிலிங்கம் ஸாண்டோ சங்கரராமை மிக்க பிரயாசையின் பேரில் பார்த்துத் தம்மைச் சர்க்கஸ் கம்பெனியில் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டார். இவர் சர்க்கஸ் வித்தைகளில் தேர்ச்சியடைந்து தம் கம்பெனிக்குப் புகழ் அளிப்பார் என்று ஸாண்டோ சங்கரராமுக்கு நம்பிக்கை உண்டாயிற்று. ஆகையால், காசிலிங்கத்தைச் சேர்த்துக் கொண்டார். சம்பளம் ஒன்றும் கிடையாது. சாப்பாடு போட்டு மாதம் சில்லறைச் செலவுகளுக்காக ஐந்து ரூபாய்தான் கொடுத்தார்கள். காசிலிங்கத்துக்கு அதுவே சொர்க்க லோகம் கிட்டியது போலிருந்தது. வர வர அந்தச் சர்க்கஸ் கம்பெனியில் அவர் முன்னேற்றம் அடைந்து கொண்டு வந்தார். பார் விளையாட்டுக்கள், ஆகாசக் கம்பி மேல் நடத்தல், வான ஊஞ்சலிலிருந்து கரணங்கள் அடித்தல் முதலிய ஆட்டங்களில் பெயர் வாங்கினர். சாண்டோ சங்கரராம் அவர் மேல் கொண்ட அபிமானமும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. தாம் கம்பெனியிலிருந்து விலகிக் கொள்ளும் காலம் வரும் போது, காசிலிங்கத்தினிடமே கம்பெனியின் பொறுப்பை ஒப்படைக்கப் போவதாகவும் சொல்லிக் கொண்டிருந்தார்.




பதினெட்டு வயதிலிருந்து இருபத்து நாலு வயது வரையில் ஆறு வருஷம் இப்படிக் காசிலிங்கத்தின் வாழ்க்கை உற்சாகமாகச் சென்றது. அவர் சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்திருப்பதை



அறிந்து அவருடைய குடும்பத்தாரும் ஒருவாறு ஆறுதல் பெற்றார்கள். "எங்கே யாவது போய் எப்படி யாவது பிழைத்து நன்றாயிருந்தால் சரி" என்று அவரைப் பற்றிக் கவலைப் படுவதை விட்டார்கள். சர்க்கஸ் கூட்டத்தார் ஊர் ஊராகச் செல்வது வழக்கம் அல்லவா? ஸாண்டோ சங்கரராம் கம்பெனியாரும் ஆறு வருஷ காலத்தில் சென்னை மாகாணத்தைச் சேர்ந்த பல பெரிய பட்டணங்களுக்குச் சென்று ஆட்டம் நடத்தினார்கள். பெங்களூர் மைசூர் முதலிய நகரங்களுக்கும் சென்றார்கள்.

கடைசியாக, அவர்கள் வேலூருக்கு வந்து ஆட்டம் நடத்திய போது தான் காசிலிங்கம் சந்திரமணியைச் சந்திக்கும் சந்தர்ப்பம் நேரிட்டது.

சந்திர மணியின் தாயார் பெரிய குடும்பத்தில் பிறந்தவர். பணத்திலும் பெரிய குடும்பம்; எண்ணிக்கையிலும் பெரியதுதான். சந்திரமணியின் மாமன்மார்கள் ஐந்து பேர். அவர்களுடைய தகப்பனார் வியாபாரத்தில் நிறையப் பணம் சேர்த்தார். சேர்த்த சொத்தை ஆறு பங்காகப் போட்டு, பிள்ளைகளுக்குப் பங்கு கொடுத்தது போலவே மகளுக்கும் ஒரு பங்கு எழுதி வைத்தார். மகளை நல்ல இடத்தில் கலியாணமும் செய்து கொடுத்தார்.

சந்திர மணியின் மாமன்மார்கள் ஐந்து பேரானாலும், பஞ்ச பாண்டவர்களைப் போல் நல்லவர்கள் அல்ல; குணத்தில் துரியோதனன் கூட்டத்தைச் சேர்ந்த வர்கள். சகோதரிக்குச் சொத்தில் சமபங்கு கொடுத்தது அவர்களுக்குப் பிடிக்க வில்லை. சகோதரியின் கணவரைப் படாதபாடு படுத்தி வைத்தார்கள். அவர் இவர்களுடைய தொல்லை பொறுக்க மாட்டாமல் ஊரை விட்டு ஓடிப் போய் விட்டார். வெகு காலத்துக்குப்பிறகு பர்மாவில் ஒரு பர்மிய மாதைக் கலியாணம்

செய்து கொண்டு குடும்ப வாழ்க்கை நடத்துகிறார் என்று தெரிய வந்தது.

சந்திர மணியின் தாயார் மனம் ஒடிந்து போய்த் தம் தந்தையின் வீட்டில் வாழ்ந்து வந்தார். மகள் சந்திரமணிக்காகவே அவர் உயிரை வைத்துக் கொண்டிருந்தார். வர வர அவருடைய உடல் நலம் குன்றி வந்தது. தாம் திடீரென்று மரணம் அடைய நேர்ந்தால், தம் குமாரியின் கதி என்னவென்று கவலைப் பட்டார். இந்தக் கவலையினால் அவர் நோய்ப் பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டார். தமது மகளை நன்றாய் வைத்துப் பாதுகாக்கக் கூடிய பிள்ளை ஒருவனுக்குக் கலியாணம் செய்து கொடுத்து விட்டுத் தாம் நிம்மதியாக இறக்க வேண்டுமென்று ஆசைப் பட்டார்.

ஆனால் சந்திர மணியின் மாமன்மார்களோ வேறு யோசனை வைத்திருந்தார்கள். அவர்கள் தந்தையின் சொத்தில் தங்களுக்குக் கிடைத்த பங்குகளைப் பல வழிகளில் தொலைத்து விட்டார்கள். சகோதரியின் சொத்து மட்டும் மேலும் வளர்ந்திருந்தது. அது தங்கள் கையை விட்டுப் போகக் கூடாதென்று எண்ணினார்கள். ஆகையால் தங்களில் ஒருவருக்கே சந்திரமணியை இரண்டாந்தாரமாகக் கட்டிக் கொடுத்து விடுவது என்று தீர்மானித்திருந்தார்கள். இதற்குச் சந்திரமணியின் தாயார் சம்மதிக்க மாட்டாளாதலால், அவள் கண்ணை



மூட்டும் என்று அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

சந்திரமணிக்கு வயது இருபது ஆகி விட்டது. தன் தாயாரின் நிலையையும் அவள் இறந்து விட்டால் தான் அடையக் கூடிய நிர்க்கதியான நிலையையும் அவள் அறிந்து கொண்டிருந்தாள். மாமன்மார் களின் யோசனையும் அவளுக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. ஆகையால், அடிக்கடி தாயாரின் பக்கத்தில் உட்கார்ந்து அழு வாள்; தாயார் அவளுக்குத் தேறுதல் வார்த்தைகள் கூறுவாள்.

அவர்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் சர்க்கஸ் கூட்டத்தாரில் சிலர்



இறங்கி யிருந்தார்கள். அவர்களில் காசி லிங்கமும் ஒருவர்.

அடுத்த வீட்டிலிருந்து ஒரு பெண்ணின் அழுகைக் குரலும், அவளுக்கு இன்னொரு வர் ஆறுதல் கூறும் குரலும் அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கவே, காசிலிங்கம் அதைப் பற்றிச் சிந்திக்கவும் இரக்கப் படவும் தொடங்கினார்.

ஒரு நாள் சந்திரமணி வீட்டு வாசலில் வந்து நின்று கொண்டிருந்த போது காசி லிங்கம் அவளைப் பார்த்தார். "இந்த வீட்டில் யாரோ அடிக்கடி அழுது கொண்டிருக்கிறார்களே? அது யார்? நீ இல்லையே?" என்று கேட்டார்.

சந்திரமணி வெட்கமும் பயமும் அடைந்து மறுமொழி சொல்லாமல் உள்ளே போய் விட்டாள். "இந்தப் பெண் தான் அழுகிறவளா யிருக்க வேண்டும்? இவளுக்கு என்ன துக்கமோ?" என்று காசிலிங்கம் பரிதாபப் பட்டார்.

அதற்குப் பிறகு இன்னும் சில தடவை சந்திரமணி வாசலில் வந்து நிற்பதும், காசிலிங்கம் அவளிடம் பேச்சுக் கொடுக்க முயல்வதும், சந்திரமணி தலையைக் குனிந்து கொண்டு உள்ளே போவதுமாக நடந்து வந்தது.

ஒரு நாள் சந்திரமணி தாயாரின் அநு மதி பெற்றுத் தன் சிநேகிதிகள் சிலருடன் சர்க்கஸ் பார்ப்பதற்குப் போனாள்.

சந்திரமணி வந்திருப்பதைக் காசி லிங்கம் கவனித்துக் கொண்டார்.

அவர் அன்று ஆகாச ஊஞ்சல்களில் ஒன்றிலிருந்து ஒன்று தாவும்போது ஒரு முறை கைநழுவி விட்டது.

பெண்கள் இருந்த பகுதியிலிருந்து "ஐயையோ!" என்று ஒரு பெண்ணின் கூக்குரல் கேட்டது.

காசிலிங்கம் கீழே விழும் போதே சாமர்த்தியமாகக் கரணம் போட்டுக் கொண்டு வந்து தரையில் ரப்பர் பந்து விழுவது போல் குதித்தார்.

அதைப் பார்த்தவர்கள் அனைவரும் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள்.

சர்க்கஸ் வித்தைக்காரர்கள் ஏதாவது அபூர்வமான வேலை செய்தால், சபை யோர் அமர்ந்திருக்கும் இடத்தின் அருகில் வந்து, வந்தனம் செலுத்தி, அவர்க ளுடைய கரகோஷப் பாராட்டுதலைப் பெறுவது வழக்கம்.

காசிலிங்கமும் இப்போது அவ்வாறே செய்தார். பெண்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அவர் வந்து, "இங்கே யார் 'ஐயையோ!' என்ற கூச்சல் போட்டது?" என்று சந்திரமணியைப் பார்த்துக் கொண்டே கேட்டார். சந்திரமணி தலை யைக் குனிந்து கொண்டாள். காசிலிங்கம் "எனக்குத் தெரிந்து போய் விட்டது!" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். சந்திரமணியின் தோழிகள் இதற்காக அவளைப் பரிகாசம் செய்தார்கள்.

இந்தச் சிறிய சம்பவம் சந்திரமணியின் மாமன்மார்களுக்குத் தெரிந்து விட்டது.

அவர்கள் சந்திரமணியைக் கண்டித் தார்கள். அத்துடன் நிறுத்தவில்லை. அடுத்த வீட்டின் சொந்தக்காரரிடம் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி அதில் ஜாகை வைத்திருந்த சர்க்கஸ் காரர்களைக் கிளப்பி விட்டார்கள்.

ஆனால் காசிலிங்கம் ஒன்றை நினைத் தால் எளிதில் அதைக் கைவிட்டு விடு கிறவர் அல்ல. சந்திரமணிக்கும் முன் னெப்போதுமில்லாத துணிச்சல் ஏற்பட்

டிருந்தது. அவர்கள் இருவரும் சந்தித்துப் பேசிக் கொள்வதை மாமன்மார்களால் தடை செய்ய முடியவில்லை.

சந்திரமணி தன் மாமன்மார்கள் இல்லாத சமயத்தில் காசிலிங்கத்தை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்தாள். தாயாரிடம் முன்னமே தன் மன விருப்பத்தை வெளியிட்டு அவளுடைய சம்மதத்தையும் பெற்றிருந்தாள். சந்திரமணியின் தாயார் காசிலிங்கத்தை உற்றுப் பார்த்து விட்டு, "நல்ல பிள்ளையாகத்தான் தோன்றுகிறது!" என்றாள். காசிலிங்கம், "அம்மா! நான் நல்லவர்களுக்கு நல்லவன்; பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவன்!" என்று சொன்னார்.

சந்திரமணியின் தாயாருடைய முகம் மலர்ந்தது. "அப்படித்தான் இருக்க வேண்டும், தம்பி! என்னைப் போலவும் இந்தப் பெண்ணின் அப்பாவைப்போலவும் சாதுவா யிருந்தால் இந்தப் பொல்லாத உலகத்தில் பிழைத்துக் கடைத்தேற முடியாது. எல்லாரும் ஓட ஓட விரட்டுவார்கள்!" என்றாள்.

பிறகு, "தம்பி! என் மகளை நீ கட்டிக்கொண்டால், பத்திரமாய்ப் பாதுகாப்பாயா? அவளுக்கு ஒரு தீங்கும் நேராமல் பார்த்துக் கொள்வாயா?" என்று கேட்டாள்.

"கண்டிப்பாய்ச் செய்வேன்! உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம்!" என்றார் காசிலிங்கம்.

"உனக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஏதோ கொஞ்சம் இருக்கிறது. ஆனால் என் சொத்தை நம்பி நீங்கள் உங்கள் மகளை எனக்குக் கொடுக்க வேண்டாம். என்னை நம்பித் தைரியமாகக் கொடுங்கள்!" என்றார் காசிலிங்கம்.

"உண்மைதான்; எனக்கு என் தந்தை சொத்து எழுதி வைத்தார். அதனால் என்ன பலனைக் கண்டேன்?" என்றாள் சந்திரமணியின் தாயார்.

"தம்பி! அப்படியானால் நீ இன்றைக்கே இந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு போய் விடு. எங்கேயாவது முருகன் கோயிலில் இவள் கழுத்தில் தாலியைக் கட்டிக் கலியாணம் செய்து கொள்! என்னிடமுள்ள நகைகளையெல்லாம் கொடுக்கிறேன். எடுத்துக் கொண்டு போங்கள்! பிறகு, உனக்குச் சாமர்த்தியமிருந்தால் என்னுடைய சொத்துக்களை இவளுடைய மாமன்மார்களிடமிருந்து கைப்பற்றிக் கொள்! இனி ஒருநாள் கூட இவளை இந்த வீட்டில் விட்டு வையாதே! நீ இங்கே வந்து போனது தெரிந்தால் இவள் மாமன்மார்கள் இவளைக் கொன்றே போடுவார்கள்!" என்றாள்.

"அப்படியா? இவளுடைய மாமன்மார்களுக்கு யம தர்மராஜன் தர்பாரில் உத்தியோகமோ?" என்று கேட்டு விட்டுக் காசிலிங்கம் சிரித்தார்.

"அம்மா! உங்கள் அநுமதி கிடைக்க வேண்டுமே என்றுதான் காத்திருந்தேன். இனி இவள்பேரில் ஒரு தூசி கூடப் படாமல் பார்த்துக் கொள்வேன்!" என்றார்.

காசிலிங்கம் பல ஊர்கள் சுற்றியவர்; உலக விவகாரங்களைக் கொஞ்சம் தெரிந்து கொண்டிருந்தார். சந்திரமணியின் தாயாருக்குச் சிறிது எழுதப் படிக்கத் தெரியும் என்று அறிந்து, அவள் கைப்படப் பின்வருமாறு கடிதம் எழுதி வாங்கிக் கொண்டார்:—

"என் மகள் சந்திரமணி காசிலிங்கத்தைக் கலியாணம் செய்து கொள்வது எனக்கு மனப்பூர்வமாகச் சம்மதம். என்னுடைய நகைகளை நானே என் மகளுக்குச் சீதனமாகக் கொடுத்து அனுப்புகிறேன். நான் இப்போது கொடுத்திருக்கும் நகைகளைத் தவிர எனக்குச் சொந்தமான சகல சொத்துக்களும் என் மகள் சந்திரமணிக்கே சேர வேண்டும்."

இப்படி ஒரு கடிதம் எழுதி வாங்கிக் கொண்ட பிறகு காசிலிங்கம், "சந்திரமணி! முருகன் கோவிலில் நாம் திருமணம் செய்து கொள்வது அப்புறம் இருக்கட்டும். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று சொல்லியிருக்கிறதல்லவா? உன் தாயாரின் சந்நிதியில் நமக்குக் கலியாணம் ஆகி விட்டது. அம்மாவுக்கு முதலில் நமஸ்காரம் செய்!" என்றார்.

இருவரும் நமஸ்காரம் செய்தார்கள்.

**கா**சிலிங்கம் உடனே சர்க்கஸ் கம்பெனி சொந்தக்காரர் சங்கர ராமிடம் போனார். செய்தியைச் சொன்னார்.

"அட பாவி! என் கம்பெனிக்கே கெட்ட பெயர் கொண்டு வந்து விட்டாயே? ஏற்கெனவே அந்தப் பெண்ணின் மாமன்மார்கள் சர்க்கஸ் கூடாரத்துக்கு நெருப்பு வைத்து விடுகிறோம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே!" என்றார் சங்கரராம்.

"ஐயா! உங்களுக்கு அப்படி யொன்றும் நேராமல் நானே விலகிக் கொண்டு விடுகிறேன்! என்னைக் கம்பெனியிலிருந்து தள்ளி விட்டதாகச் சொல்லி விடுங்கள்!" என்றார் காசிலிங்கம்.

"எனக்குப் பிறகு நீயே இந்தக் கம்பெனியை நடத்துவாய் என்றல்லவோ நம்பி யிருந்தேன்? இப்படிச் செய்து விட்டாயே? ஆறு வருஷம் பாடுபட்டதும் வீணாய்ப் போய் விட்டதே?" என்று அங்கலாய்த்தார் சங்கர ராம்.

"என்னுடைய உத்தேசம் அப்படியில்லை, ஐயா! இது என்ன வேலை? கரணம் தப்பினால் மரணம்! என்றைக்குப் புலி குரவளையைப் பிடிக்குமோ, சிங்கம் வெறி பிடித்து அறையுமோ என்று ஓயாமல் பீதி! இனி, இப்படிப் பட்ட அபாயங்களுக்கு நான் உட்பட முடியாது. ஒரு பெண்ணைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது!" என்றார் காசிலிங்கம்.

"ஆகா! பெண் மோகம் மிகப் பொல்லாதது. அதில் விழாதவர்கள் யார்? உன் தலைவிதி அவ்வளவுதான்!" என்றார் சங்கர் ராம்.

அன்றிரவே காசிலிங்கமும் சந்திரமணியும் புறப்பட்டுச் சென்று மறுநாள் திருத்தணியை அடைந்தார்கள். முருகன் வள்ளியை மணந்த புண்ணிய ஸ்தலத்தில் காசிலிங்கம் சந்திரமணியின் கழுத்தில் தாலியைக் கட்டினார்.

மாமன்மார்களின் கோபம் தீரும் வரையில் எங்கேயாவது அவர்களுக்குத் தெரியாத இடத்தில் இருக்க வேண்டுமென்று சந்திரமணி வற்புறுத்தினாள். சிலகாலம் சென்னை நகரில் இருந்தார்கள். பிறகு, காசிலிங்கத்தின் சொந்த ஊருக்கே போகலாம் என்று புறப்பட்டு வந்தார்கள். வருகிற வழியிலேதான் மோட்டார் பஸ் விபத்து நேரிட்டது.

* * *

இந்த விவரங்களை யெல்லாம் மந்திர மூர்த்திப் பண்ணையார் ஒவ்வொரு பகுதியாகச் சந்திரமணியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

கதை முழுதும் முடிந்து பிறகு சந்திரமணி "இனிமேல் எனக்கு அப்பாவும் அம்மாவும் நீங்கள்தான்!" என்றாள்.

"இரட்டை சந்தோஷம், சந்திரமணி! எனக்கும் மனைவி மக்கள் யாரும் இல்லை. நீயே எனக்கு மகனும் மகளும்!" என்றார்.

பிறகு சிறிது யோசித்து விட்டு, "அம்மா! உன்னை ஒன்று கேட்கட்டுமா?" என்றார் மந்திரமூர்த்தி.

"ஒன்று என்ன எத்தனை வேணுமானாலும் தாராளமாகக் கேளுங்கள். நீங்கள் கேட்கா விட்டால் வேறு யார் தான் என்னை என்ன கேட்கப் போகிறார்கள்?" என்றாள் சந்திரமணி.

"உன் வயிற்றில் பிறக்கும் குழந்தை ஆண் பிள்ளையாக இருந்தால் நான் சுவிகாரம் எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். அதற்கு நீ சம்மதிப்பாயா? உன் புருஷனையும் சம்மதிக்கச் செய்வாயா?" என்று கேட்டார்.

சந்திரமணி சிரித்து விட்டு, "நல்ல கேள்வி கேட்டீர்கள். எங்கள் ஊர்ப் பக்கங்களில் பசுமாடு விலைக்கு விற்றால் கன்றுக் குட்டியும் சேர்த்துக் கொடுப்பதுதான் வழக்கம். தானம் கொடுத்தாலும் அப்படித்தான். என்னையே தாங்கள் தத்து எடுத்துக் கொண்டிருக்கும் போது, என் குழந்தையும் சேர்ந்ததுதானே?" என்றாள்.

"சரி, சரி; அதைப்பற்றி இப்போது ஒன்றும் அவசரம் இல்லை. கடவுள் அருளால், நீ பெற்றுப் பிழைத்து, சௌக்கியமாக வேண்டும். நான் அந்தப் பேச்சை இப்போது எடுத்திருக்கவே கூடாது!" என்றார் பண்ணையார்.

* * *

குங்குமத் துறைக்கு வந்து அருவிக் கரைப் பங்களாவில் வசிக்கத் தொடங்கியதிலிருந்து என் பெற்றோர் இருவரும் சில காலம் உற்சாகமாக இருந்தார்கள். எட்டு மாத கர்ப்பிணியான என் தாயின் உதவிக்காக மந்திரமூர்த்தி சாலை யோரத்தில் இருந்த சத்திரத்து அம்மாளை அழைத்துக் கொண்டு வந்து விட்டார். அந்த அம்மாளுக்கு நிரம்பச் சம்பளம் கொடுப்பதாக வாக்களித்து முன் பணமும் கொடுத்தார். அந்த அம்மாளும் சந்தோஷமாக வந்து வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். என் அன்னையின் உத்தம குணம் அந்த அம்மாளை மிகவும் கவர்ந்து விட்டது. தன் சொந்த மகள் தலைப் பிரசவத்துக்காகப் பிறந்த வீட்டுக்கு வந்தால் எப்படிப் பார்ப்பாளோ, அவ்வளவு கவனமாகப் பார்த்து வந்தாள்.

காசிலிங்கம் வீட்டிலிருக்கும் போதெல்லாம் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருப்பார். மந்திர மூர்த்தியை அடிக்கடி அழைத்துக் கொண்டு வருவார்.

ஜமீன்தாருடன் வேட்டைக்குப் போகும் தினங்களில் சந்திரமணிக்குத் துணையாக மந்திரமூர்த்திப் பண்ணையார் அருவிக் கரை பங்களாவிலேயே இருக்க வேண்டும் என்று வற்புறுத்துவார்.

## புதிய மாடல்




# ஆக்பா ஸிலேட்

**... இன்னும் அதிக 35 mm மதிப்புள்ளது**



*
விலை ரூ. 244/-

ஆட்டோமாட்டிக் ஷட்டர் பொருத்தப்பட்டு புதிய பிராண்டர்-SVS 8-ஷட்டர் ஸ்பீடுகளுடன் கூடிய இது தாமதமான செய்கைகளையும் பிளாஷ் ஸிங்கர்னிசேஷனையும் கண்ட்ரோல் செய்கிறது. லிவரை Vல் பொருத்தினால் 7 செகண்டு தாமதித்த செய்கைகளை எடுக்கும் விதத்தில் தானாகவே பொருத்திக் கொள்ளும்; அல்லது X ஸிங்கர்னிசேஷன் உபயோகிக்கும் முறையிலும் அமையும். Xல் பொருத்தி நீங்கள் எலக்ட்ரானிக் பிளாஷால் எல்லா ஷட்டர் ஸ்பீடுகளிலும், பிளாஷ் பல்புகளில் 1/25 செகண்டிலும் எடுக்கலாம். லிவரை Mல் பொருத்தி எல்லா ஷட்டர் ஸ்பீடுகளிலும் பிளாஷ் பல்புகள் இணைத்து எடுக்கலாம். பிளாஷ் இல்லாமல் சாதாரண படம் எடுக்க லிவர் X அல்லது Mல் பொருத்தப் படவேண்டும்.



Xக்கும் Mக்கும் முழு ஸிங்கர்னிசேஷன் செய்யப்பட்டது
X ஸிங்கர்னிசேஷனையும் ஷட்டர் உள்ளது
புது ப்ராண்டர்-SVS 8-ஸ்பீடுகளோடு கூடிய ஷட்டர் உள்ளது
எல்லா அபர்ச்சர் ஸெட்டிங்போரில் பாசிடிவ் க்ளிக்-ஸ்டாப்புகள் உள்ளன

மற்றும் இந்த சிறந்த அம்சங்களுடன்

- ○ அழுத்தமான முன்பாகத்தை உடையது
- ○ ஆப்டிகல் வியூ பைண்டர்
- ○ f3.5/45 mm. ஆக்பா அப்போட்டார் கோட்டட் கலர் திருத்தம் செய்யப்பட்ட லென்ஸுகள்
- ○ வேகமாக பிலிம் சுற்றக் கூடிய லிவரும் ஆட்டோமாட்டிக் ஷட்டரும் கொண்டது
- ○ டபுள் எக்ஸ்போஷர் ஆகாதபடி தடுப்பு முறையுள்ளது
- ○ மேலிருந்தவாறே ஷட்டர் பொருத்தங்களைப் பார்த்துக்கொள்ளலாம்
- ○ பிலிம் ஸ்பீட் இண்டிகேட்டர் உள்ளது
- ○ டெப்த் ஆப் பீல்டு ஸ்கேல்
- ○ எடுத்த படங்களின் எண்ணிக்கையை தானாகவே கணித்துக்கொள்ளும் முறை
- ○ பாடி ரிலீஸ், கேபிள் ரிலீஸ் முதலியவைகளுடன் கூடியது

பிராண்டோ ஷட்டர் பொருத்திய B1/25 லிருந்து 1/200 ஸ்பீடுகளுள்ள லென்ஸ்படைமருடன் லிங்கரிஸன் செய்த ஆக்பா ஸிலெட் காமிரா ரூ. 188/★
E. R. உயர் ரக தோலினால் செய்த இரண்டு மாடல்களுக்கான உறை ரூ 35/★
E. R. புள்ளியிட்ட தோலில் செய்த இரண்டு மாடல்களுக்கான உறை ரூ 30/★
★ உள்ளூர் வரி தனி

முழு விவரங்களடங்கிய இலவச புத்தகத்திற்கு எழுதுக:

**ஆக்பா இந்தியா லிமிடெட்**

சி. எஸ். இலாக்கா

198, ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1
கிளைகள்: புது டில்லி-கல்கத்தா-மதராஸ்

**சிறந்த படங்கள் எடுக்க காமிராக்களில் ஆக்பா ஐஸோபான் பிலிம் போடுங்கள்**

# அந்த நாளை எதிர்பார்க்கிறேன்

**கனம் எம். பக்தவத்ஸலம்**

**ப**னியன் தொழில் மக்களின் சாதாரணத் தேவையைப் பூர்த்தி செய்வ தொன்றாகும். உடலைப் பாதுகாக்கும் வகையில், அதோடு ஒட்டினாற்போல் அணிந்து கொள்ளும் உடையைப் பனியன் என்றும் 'பாடி' என்றும்கூடக் கூறுவதுண்டு. கிராமங்களில் வேலை செய்யும் ஏழைத் தொழிலாளர்கள்கூட இதை அணிகின்றனர். பல்லாண்டுகளுக்கு முன்னும் பனியனை எல்லோரும் விரும்பி அணிந்தது எனக்கு நினைவு இருக்கிறது. ஆனால் அந்த பனியன் எல்லாம் அன்னிய நாட்டுத் துணியே. எனவே, அது வசீகரமாயிருந்தும், அது அன்னியத் துணியாயிருந்ததால் அதிலுள்ள ஆசையை நான் விட்டதும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆனால் இன்று நம் நாட்டில் பல ரகங்களில் பனியன் உற்பத்தி செய்யப்பட்டு, அன்னிய நாட்டுத் துணிகளுக்கு ஈடாக இருப்பது மிகுந்த திருப்தியை அளிக்கிறது. இனி, பனியன் வேண்டுகின்றவர்கள் அன்னிய நாட்டை எதிர்பார்க்க வேண்டியதில்லை. இந்தத் தொழிலின் நிலை நம் நாட்டுத் தொழில் வளர்ச்சியை எடுத்துக் காட்டுகிறது. அதிக மூதல் இல்லாமல் இந்தத் தொழிலை நடத்தலாம். இது பல தொழிலாளர்களுக்கு வேலையையும் அளிக்கிறது. ஆனால் இது இன்னும் அதிக அபிவிருத்தி அடைவதற்கு இடம் இருக்கிறது. நம் நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்து அன்னிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யக் கூடிய வளர்ச்சியைப் பனியன் தொழில் அடையவேண்டும். அந்த நாளை நான் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

காசிலிங்கம் வேட்டைக்குப் போவது சந்திரமணிக்கும் பண்ணையாருக்கும் அவ்வளவாக விருப்பமில்லை. ஆனால் அவரைத் தடுத்து நிறுத்துவதற்கும் அவர்களுக்குத் தைரியம் வரவில்லை.

சுருசுருப்பு வாய்ந்தவரான காசிலிங்கம் எப்போதும் வீட்டிலேயே இருந்து கொண்டிருந்தால், ஒன்று கிடக்க ஒன்று நேரிடலாம் என்ற பயமும் இருந்தது.

அவருடைய விரோதிகளை நினைத்துக் கொண்டு இரைச்சல் போட ஆரம்பித்து விடலாம். "கொன்று விடுகிறேன்; குத்தி விடுகிறேன்" என்று சத்தம் போட்டால், தப்பித் தவறி அந்தப் பக்கம் வருகிறவர்கள் என்னமோ, ஏதோ என்று நினைத்துக் கொள்வார்கள் அல்லவா? சிற்சில தினங்கள் வேட்டைக்குப் போய் விட்டு வருகிறபடியால், வீட்டில் வந்து இருக்கும்போது நிம்மதியாகவும் உற்சாகமாகவும் இருக்கிறார். விரோதிகளைப் பற்றிய பேச்செல்லாம் ஜமீன்தாருடனேயே பேசித் தீர்த்து விடுகிறார் போலிருக்கிறது! இதுவும் ஒரு நன்மைக்காகத்தான்! — இவ்வாறு மந்திரமூர்த்தியும் சந்திரமணியும் தங்களுக்குள் பேசித் திருப்திப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

பிரசவ காலம் நெருங்கியபோது, பண்ணையார் மந்திர மூர்த்தி அதற்கு வேண்டிய முன் ஜாக்கிரதை யெல்லாம் செய்திருந்தார். ஒன்பதாவது மாதம் பிறந்தவுடனேயே மருத்துவச்சியை வரவழைத்து விட்டார். தேவைப்பட்டால் ஸ்திரீ டாக்டரை அழைத்து வருவதற்கும் ஏற்பாடு செய்திருந்தார்.

* * *

**இ**டியும் மின்னலுமாகக் கோடை மழை பெய்து கொண்டிருந்த ஒரு நாள் இரவு நான் பிறந்தேன். என் தாயாருக்குச் செய்ய வேண்டிய சிகிச்சைகளைச் செய்த பிறகு, மருத்துவச்சி அம்மாள் என்னை எடுத்துக் கொண்டு போய் வெளி அறையில் காத்திருந்த காசிலிங்கத்துக்கும் மந்திர மூர்த்திக்கும் காட்டினாள்.

என் சொந்தத் தந்தை உற்சாகத்தினால் குதி குதி என்று குதித்தார். பிறந்தது பெண் குழந்தை என்று தெரிந்ததும் என் தந்தையின் உற்சாகம் அதிகமாயிற்று.

"நான்தான் சொன்னேனே, ராஜகுமாரிதான் பிறக்கப் போகிறாள் என்று! பாருங்கள், ஐயா, புருஷன் சொன்னால் மனைவி கேட்பது என்பது இந்தக் காலத்தில் இல்லாமற் போய் விட்டது. நான் 'பெண் பிறக்கும்' என்றால், 'இல்லை; பிள்ளைதான் பிறக்கும்' என்று சந்திரமணி ஏட்டிக்குப் போட்டியாய்ச் சொல்லிக் கொண்டிருந்தாள். யார் சொன்னது பலித்தது? பெயர் என்ன வைப்பது என்று கூட முடிவு செய்து வைத்திருக்கிறேன். 'இந்து மதி' என்ற பெயர் எப்படி? உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?" என்று பண்ணையார் மந்திர மூர்த்தியைக் கேட்டார்.

"ஆகா! ரொம்ப நல்ல பெயர்! சந்திர மணியின் மகள் இந்துமதி! சந்திரமணியின் முகம் ஒரு சந்திரனுக்கு இணை என்றால், குழந்தையின் முகம் இரண்டு பூரண சந்திரர்களைப் போல அல்லவா பிரகாசிக்கிறது! ரொம்ப ரொம்பப் பொருத்தமான பெயர்! மிகவும் சந்தோஷம்!" என்றார் மந்திரமூர்த்தி.

ஆனால் அவர் உள்ளத்தில் நான் பிள்ளையாய்ப் பிறக்கவில்லையே என்ற சிறிது ஏமாற்றம் இருக்கத்தான் இருந்தது. இதை என் தாய் அறிந்திருந்தாள்.

சில தினங்களுக்குப் பிறகு மந்திரமூர்த்தியைத் தனியாகப் பார்த்த போது, "பிள்ளைக் குழந்தையாகப் பிறக்கவில்லையே என்று உங்களுக்குக் குறை தானே?" என்று கேட்டாள்.

"அதற்கென்ன, அம்மா! அடுத்தாற் போல் பிறக்கும் குழந்தை பிள்ளையாகப் பிறந்து விட்டுப் போகிறது!" என்றார்.

அவருடைய வாக்குப் பலிக்கவில்லை; ஆசையும் நிறைவேறவில்லை. எனக்குப் பிறகு என் அன்னைக்குக் குழந்தையே பிறக்கவில்லை. வேறு என்ன வெல்லாமோ சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன.

கடவுளே! நான் மட்டும் பிள்ளைக் குழந்தையாகப் பிறந்திருந்தால், எத்தனை பேருக்கு எவ்வளவு கஷ்டங்கள் இல்லாமற் போயிருக்கும்?

அத்தியாயம் 10

# இயற்கை சிரித்தது!

நான் பிறந்தபோது என் அன்னையை மிகவும் கஷ்டப்படுத்தி விட்டேனாம். இரண்டு நாள் அவள் வேதனைப்பட்டுத் துடித்ததாக அறிந்தேன். நான் பிறந்த பிறகும் அவளுடைய கஷ்டம் தீரவில்லை. மூன்றாம் நாள் கடுமையான சுரம் வந்து விட்டது. டாக்டர் உள்பட எல்லாருக்குமே கவலையாகப் போய் விட்டது. நல்லவேளையாக ஒரு வாரத்துக்குப் பிறகு என் தாயின் சுரம் தணிந்தது; உடம்பும் குணம் அடைந்தது.

பிறகு ஏறக்குறைய இரண்டு மாத காலம் எங்கள் வீட்டில் அமைதி குடி கொண்டிருந்தது. எல்லாரும் குதூகலமாயிருந்தார்கள். என் முகத்தைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தார்கள். என் உதடு அசைந்தால், "குழந்தை சிரிக்கிறது!" என்று கூவிக் களித்தார்கள். நான் கண்களைத் திறந்து கொண்டிருந்தால் ஒரு அழகு என்றும், நான் கண்ணிமைகளை மூடிக் கொண்டு தூங்கினால் அது ஒரு அழகு என்றும் வர்ணித்தார்கள்.

மந்திர மூர்த்தியின் மனத்தில் நான் பிள்ளைக் குழந்தையாகப் பிறக்கவில்லை என்று முதலில் உதித்த ஏக்கம் விரைவிலேயே மறைந்து விட்டது. மூதற் குழந்தை பெண் குழந்தையாகப் பிறப்பதிலுள்ள அனுகூலங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினார். "வீட்டுக்கு மூதற் குழந்தை பெண்ணாகப் பிறந்தால், அப்புறம் பிறக்கும் குழந்தைகளை வளர்ப்பதற்கு அன்னைக்கு ஒத்தாசையாக இருப்பாள். ஆண் பிள்ளையாக இருந்தால், தாயாருக்கும் பயன்பட மாட்டான்; தொந்தரவாகவே இருப்பான்!" என்றார். பொதுவாகப் பெண் குலத்தின் பெருமையைப் பற்றியே பேசி வந்தார்.

மந்திர மூர்த்திக்குச் சொந்தக் குழந்தைகள் பிறந்தபோது, அவருடைய மாமியாரின் சர்வாதிகாரம் குடும்பத்தில் குடிகொண்டிருந்தது. குழந்தைகளைக் கவனித்து வளர்ப்பதற்கு இவருக்கு வசதி ஏற்படவே யில்லை. காலஞ் சென்ற அவருடைய மனைவி, மாமியார் இவர்களுடைய அறியாமையினாலும் அஜாக்கிரதையினாலுமே அவருக்குப் பிறந்த குழந்தைகள் அற்பாயுளில் இறந்து போயின என்று உறுதியாக நம்பினார். "விளக்கெண்ணெய் போட்டியே குழந்தைகளைக் கொன்று விட்டார்கள்!" என்று அடிக்கடி அவர் சொல்வதுண்டு.

மந்திரமூர்த்திப் பண்ணையார் பல விஷயங்களைப் பற்றிப் படித்தும் சிந்தித்தும் ஆராய்ச்சி செய்தும் முடிவு கட்டி வைத்திருந்தது போலக் குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பது பற்றியும் சில கொள்கைகளை வைத்திருந்தார். அவற்றை யெல்லாம் இப்போது என்னை வளர்க்கும் விஷயத்தில் பயன்படுத்தினார். என் தாயாரும் அவர் கூறியவற்றை யெல்லாம் மிகுந்த சிரத்தையுடன் கேட்டு அவ்விதமே செய்து வந்தாள்.

சித்திரத்து அம்மாள் காந்திமதி அண்ணி ஒருவாறு எங்கள் குடும்பத்திலேயே நிலைத்து விட்டாள். பண்ணையார் அந்த அம்மாளை 'அண்ணி' என்று அழைக்கத் தொடங்கவே, மற்றவர்களும்

அவ்வாறே அழைத்து வந்தார்கள். அந்த அண்ணியும் மந்திர மூர்த்திப் பண்ணை யார் சொல்லுவதற்கெல்லாம் "அதுவே சரி!" என்று ஆமோதித்து வந்தாள்.

என் சொந்தத் தந்தையோ, குழந்தை வளர்ப்பு விஷயத்தில் சிறிதும் சிரத்தை காட்டவில்லை. என் அன்னையின் உடம்பு சீக்கிரம் குணமடைந்து முன்போல் பலம் பெற்று நடமாடத் தொடங்க வேண்டும் என்பதிலேயே அதிகக் கவலை காட்டினர். வருங் காலத்தைப் பற்றி அவர் மனத் திற்குள் என்ன திட்டம் போட்டிருந் தாரோ, தெரியாது. அதற்குச் சந்திரமணி தேக பலம் பெறுவது அவசியமா யிருந் தது போலும்.

குங்குமத்துறைக்குச் சமீபத்தில் ஒரு கிராமத்தில் முறிந்த எலும்பைக் கட்டிக் குணப்படுத்தும் திறமை வாய்ந்த வைத்தி யர் ஒருவர் இருந்தார். இந்தச் சிகிச்சை யில் அவர் இங்கிலீஷ் டாக்டர்களை விடக் கெட்டிக்காரர் என்று பெயர் வாங்கிய வர். மந்திரமூர்த்தி நான் பிறப்பதற்கு முன்னுலேயே ஒருநாள் அவரை அழைத் துக் கொண்டு வந்தார். வைத்தியர் என் அன்னையின் இரண்டு கால்களையும் பரி சோதித்து விட்டு, இடது காலில் நரம்பு பிசகி யிருக்கிறது என்றும், அதைச் சுலப மாகக் குணப்படுத்தி விடலாம் என்றும் கூறினர். வலது காலில் ஆஸ்பத்திரியில் இங்கிலீஷ் டாக்டர்கள் செய்த எலும்பு வைத்தியம் சரியில்லை யென்றும், எலும் புகள் சரியாகச் சேரவில்லை யென்றும் தெரிவித்தார். "நல்லபடியாகப் பிரச வம் ஆகட்டும்; இரண்டு மாதத்துக்குப் பிறகு நான் வருகிறேன். மறுபடியும் சரியாகச் சேர்த்துக் கட்டி விடுகிறேன். பத்து நாளில் நன்ருகக் குணமாகி விடும். முன் போலவே ஓடியாடி எல்லாக் காரி யங்களும் செய்யலாம்!" என்ருர்.

நான் பிறந்து இரண்டு மாதத்துக்குப் பிறகு அந்த வைத்தியரை அழைத்து வரலாமா என்று யோசிக்கத் தொடங் கினர்கள். "இன்னும் சிலநாள் போகட் டும்!" என்ருள் என் அன்னை. "எதற் காக நான் போக வேண்டும்? சீக்கிரம் அழைத்து வந்து விடுவதே நல்லது!" என்ருர் என் தந்தை.

இரண்டு பேருக்கும் பொதுவில் மந்திர மூர்த்தி, "நீங்கள் எப்படிச் சொல்கிறீர் களோ, அப்படிச் செய்கிறேன். உடனே அழைத்து வந்தாலும் வரலாம். இன்னும் பத்து நாள் அல்லது இரண்டு வாரம் பொறுத்திருந்தாலும், அதனல் பாதகம் ஒன்றுமில்லை!" என்ருர்.

அன்றிரவு சந்திரமணி தன் மனத்தில் இருந்த கவலையை மந்திர மூர்த்திப் பண்ணையாரிடம் தெரிவித்தாள்.

"அப்பா! இன்னும் சில காலம் நான் உடம்பு நன்ருய்க் குணமாகாமல் படுத் திருந்தாலே நல்லது என்று நினைக்கிறேன். கால் சரியாகப் போய் விட்டால் இவர் இந்த ஊரை விட்டுக் கிளம்பலாம் என்று சொல்வாரோ என்று கவலையாக இருக் கிறது. இங்கே வந்தது முதல் என் மனம் நிம்மதியாக இருக்கிறது. இவரும் அதிக மாகக் கோபதாப மில்லாம லிருக்கிருர். ஆனல் வெளியில் காட்டாமலிருக்கிருரே தவிர, உள்ளுக்குள் குமுறிக் கொண் டிருப்பதாகத் தோன்றுகிறது. ஏதோ திட்டம் போட்டு மனத்துக்குள் வைத்துக் கொண்டிருக்கிருர். ஜமீன்தாரோடு வேட்டைக்குப் போகிருர் அல்லவா? அப்பொழுதெல்லாம் அவர்கள் கூடிக் கூடிப் பேசி ஏதோ யோசனை செய்து வருவதாகக் காணப்படுகிறது. இந்த ஜமீன்தார் சிநேகிதம் இவருக்கு என்னத் திற்கு? தங்களுடைய அன்பு ஒன்றே போதாதா?" என்ருள்.

"அதனல் என்ன, அம்மா! ஜமீன்தார் சிநேகத்தினல் நமக்கு அப்படி என்ன கெடுதல் வந்து விடும்? ஒன்றும் வராது! பாவம்! அவர் இந்தப் பக்கம் எட்டிப் பார்ப்பதுகூட இல்லையே? வேட்டைக் குப் புறப்படும்போது சொல்லி அனுப்பு கிருர். உன் கணவனுக்கு ஏதாவது வேலை வேண்டும் அல்லவா? பொழுதும் போக வேண்டும் அல்லவா?" என்ருர் பண்ணையார் மந்திர மூர்த்தி.

ஜமீன்தார் சிநேகத்தைப் பற்றிப் பண்ணையாருக்கு வேறு விதமான பயம் முன்னே ஏற்பட்டிருந்தது. அவர் வாழ்க்கை நெறி ஒழுங்கானதாக இல்லை என்பது இவருடைய அபிப்பிராயம். ஜமீன்தார் அடிக்கடி இந்த வீட்டுக்கு வருவது என்று வைத்துக் கொண்டால், அதனல் பல தொல்லைகள் விளையலாம் என்று பயப்பட்டார்.

ஆனல் ஜமீன்தார் இந்தத் தம்பதிகள் விஷயத்தில் நடந்து கொண்ட முறை பண்ணையாருக்கு மிக்க திருப்திஅளித்தது. குழந்தை பிறந்தது பற்றி விசாரிப்ப தற்கு ஒருநாள் இந்த வீட்டுக்கு வந்து போனது தவிர, மற்றப்படி அவர் இந்தப் பக்கமே வருவது கிடையாது.

பண்ணையாரின் வார்த்தைக்குப் பதி லாகச் சந்திரமணி, "ஆமாம்; இவருக்கு ஏதாவது நிரந்தரமான கௌரவமான உத்தியோகம் கிடைத்தால் நல்லது. சம்

ளம் சொற்பமா யிருந்தாலும் போதும். அப்போதுதான் இவர் சரியாக இருப்பார். இல்லாவிடில் திடீரென்று ஒரு நாள் ஏதாவது ரகளை செய்ய ஆரம்பித்தாலும் ஆரம்பித்து விடுவார்!'' என்றாள்.

சந்திரமணி இவ்விதம் கூறிச் சிறிது நேரத்துக்குள், அவளுடைய வாக்குப் பலித்து விட்டது! வீட்டில் முதல் ரகளை ஆரம்பமாகி விட்டது!

• • •

**நா**ன் பிறந்த அன்று இரவு இடி மின்னலுடன் மழை பெய்தது போல் அன்றும் பெய்து கொண்டிருந்தது. மழையுடன் பெருங் காற்றும் அடித்துக் கொண்டிருந்தது. மரங்கள் அதிகமாக உள்ள மலை அடிவாரங்களில் காற்றும் மழையும் சேர்ந்து அடிக்கும் போது எழும் ஓசை மிகப் பயங்கரமாக இருக்கும். மரங்களின் மீது காற்று அடிக்கும் போது உண்டாகும் ஓசையும், மரக்கிளைகள் ஒன்றோடொன்று மோதும்போது எழும் ஓசையும் சேர்ந்து, ஆயிரம் பதினாயிரம் பூதங்கள் 'ஆஹா! ஓஹோ!' என்று அலறி அழுவது போலிருக்கும். இரவு நேரங்களில் அம்மரங்கள் ஆடும் காட்சியைப் பார்த்தால் பெரிய கரிய பூதங்கள் தலையை விரித்துப் போட்டுக் கொண்டு ஆடுவது போலவே தோன்றும். இடியும் மின்னலும் மழையும் சேர்ந்து விட்டாலோ, கேட்க வேண்டியதில்லை.

அன்றிரவு அத்தகைய இரவாகவே இருந்தது. ஆனால் அருவிக்கரை பங்களாவுக்குள் இருந்தவர்கள் கதவுகளையும் ஜன்னல்களையும் இறுக்கி மூடியிருந்த படியால், வெளியில் நிகழ்ந்து கொண்டிருந்த பயங்கர கோலாகலங்களை அதிகமாகக் கவனிக்கவில்லை.

''வேட்டைக்குப் போனவர் இன்னும் திரும்பி வரவில்லையே? இந்தக் காற்றிலும் மழையிலும் எங்கே அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிறாரோ?'' என்று சந்திரமணி கவலைப்பட்டாள்.

''அதெல்லாம் இல்லை. ஜமீன்தாருடன் அவருடைய அரண்மனைக்கு வந்து தங்கியிருப்பார். மழை சிறிது நின்றதும் இங்கே வந்து விடுவார்!'' என்றார் மந்திர மூர்த்திப் பண்ணையார்.

இப்படி அவர் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே வாசற் கதவைத் தடதட வென்று இடிக்கும் சத்தம் கேட்டது. உட்புறம் சரியாகத் தாளிடாதபடியினால் தானோ, என்னமோ, யாரும் போய்த் திறப்பதற்குள் கதவு திடீரென்று தானாகவே திறந்துகொண்டது. இடி, மின்னல், காற்று மழை எல்லாம் வீட்டுக்குள் புகுந்தன. அவற்றுடன், காசிலிங்கமும் புகுந்தார். அந்த நேரமும் அவர் வந்த விதமும் மழையில் நனைந்திருந்த ஆடைகளும் அவர் கையில் வைத்திருந்த வேட்டைத் துப்பாக்கியும் அவர் முகத்தில் தோன்றிய கடுகடுப்பும் கோபமும் வீட்டுக்குள்ளே யிருந்தவர்களுக்கு ஒரு விதப் பயத்தை உண்டாக்கின.

திறந்த வாசற் கதவைக்கூட மூடாமல் காசிலிங்கம் வேகமாக நடந்து சந்திர மணியும் மந்திரமூர்த்திப் பண்ணையாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த இடத்தை நோக்கி வந்தார்.

பண்ணையார் அவரைப் பார்த்து, ''மழையும் காற்றும் இடி மின்னலுமாயிருக்கிறதே! இந்த நேரத்தில் எப்படி வந்தாய்? ஜமீன்தாரின் வண்டியில் வந்திருக்கக் கூடாதா?'' என்றார்.

உடனே காசிலிங்கம் உரத்த குரலில் பேசத் தொடங்கினார்:— ''பண்ணையாரே! இந்த மழையும் காற்றும் என்ன செய்கின்றன தெரியுமா? என்னைப் பார்த்துச் சிரிக்கின்றன! வானம் இடி இடித்து மின்னல் மின்னி என்னைப் பார்த்துச் சிரிக்கின்றது! மரங்கள் தலை விரி கோலமாக ஆடி என்னைப் பார்த்துச் சிரிக்கின்றன! காசிலிங்கத்தைப் பார்த்து இயற்கை சிரிக்கிறது! இரவு சிரிக்கிறது! மலை சிரிக்கிறது! மலையிலிருந்து விழும் அருவி சிரிக்கிறது! உலகமெல்லாம் சிரிக்கின்றது! 'அடே, பைத்தியக்காரா! அடி முட்டாள் பயலே! இந்தப் பண்ணையார் மந்திரமூர்த்தியை நம்பினாயே? அவர் இப்படி உனக்குத் துரோகம் செய்து விட்டாரே? இப்போது என்ன செய்யப்போகிறாய்?' என்று சொல்லிச் சொல்லிச் சிரிக்கின்றன. ஆம், ஐயா! உம்மை நான் நம்பினேன். என் சொந்தத் தந்தையைக் காட்டிலும் அதிக அன்பு உம்மிடம் வைத்தேன். நீர் எனக்குத் துரோகம் செய்து விட்டீர்! ஏன் இந்த நம்பிக்கைத் துரோகம் செய்தீர்?......''

இவ்வாறு காசிலிங்கம் வெறி கொண்டவர் போலப் பேசிக் கொண்டே போன போது, மந்திரமூர்த்தி நடுநடுங்கிப் போய் விட்டார். ''இது என்ன விபரீதம்? இந்தப் பைத்தியக்காரனிடம் நாம் அகப்பட்டுக் கொண்டோமே?'' என்று தவித்துப் போனார்.

காசிலிங்கத்தின் சுபாவத்தை நன்கு அறிந்திருந்த சந்திர மணியும் சிறிது

# இன்றே பாருங்கள்

தேனாம்பேட்டை
காங்கிரஸ் மைதானத்தில்
ஸ்டேஜ் அளிக்கும்
நவாப் ராஜமாணிக்கத்தின்
ஸ்ரீ முருகன் திரு அவதாரமாகிய

# குமார விஜயம்

புதிய முறையில் தயாரிக்கப் பட்டது.
இந்நாடகத்தின் அற்புத சம்பவங்களை
வேறு எங்கும் கண்டதில்லை என்று
உங்கள் மனமே உங்களுக்கு உறுதி
அளிக்கும் என்பதற்கு ஐயமில்லை.

இத்துடன்

சாமர நடனம் - நவசக்தியர் நடனம்
குறவர் கூட்டத்தாரின் ஆனந்த நடனம்
குறவன், குறத்தி சிருங்கார நடனம்
முதலிய நடனங்களும் மனதைக் கவரும்

**தினசரி மாலை 6-30 மணிக்கு**

காலை 9 மணி முதல் ஸீட் ரிசர்வ் செய்யலாம்




டயபெப்ஸின்

அவளது நீண்ட நாள் அஜீரணக்
கோளாறுகளை நீக்கியது.

**யூனியன் டிரக் கம்பெனி லிமிடெட்**

மதராஸ் டிப்போ: 12, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

# வியாபாரிகளுக்கு வேண்டுகோள்

**சிம்கோ**



எங்களிடம் தினம் குடிசைத் தொழிலாகத் தயாராகும் 5 லட்சம் தீப்பெட்டிகளும் எங்கள் டிப்போவில் செலவாகி விடுகிறது. புது டிப்போக்கள் திறப்பதற்கு சரக்கு இல்லை. வியாபாரிகள் பக்கத்து டிப்போக்களில் தேவைக்கு எடுத்துக் கொள்ளக் கேட்டுக் கொள்கிறோம்.

டிப்போக்கள்:

திருச்சி - மங்களூர் - கண்ணனூர்
தலைச்சேரி - கள்ளிக்கோட்டை
மாயூரம் - கும்பகோணம் - மன்னார்குடி
திருத்துறைப்பூண்டி - சேலம்

கல்கத்தாவில் கிடைக்குமிடம்:
சிங் பிரதர்ஸ், 50, தர்மதோலா தெரு

**சதர்ன் இந்தியா மாட்சி கம்பெனி** சிவகாசி S.I.

போன் 63. தந்தி: "SIMCO"



ஹெர்க்குலிஸ் - இந்தியா சைக்கிள்
ஆயுட்காலத்திற்கான ஒரு பரிசு !

உங்கள் மகனின் கலாசாலை ப்ரவேசத்தை முன்னிட்டு, அவனுக்கு ஒரு ஹெர்க்குலிஸ் - இந்தியா சைக்கிள் பரிசளியுங்கள். மற்றெல்லாப் பரிசுகளையும்விட இதைப் பெரிதும் விரும்புவதோடல்லாமல் உங்கள் முன்யோசனையையும் அவன் வருஷக் கணக்கில் நினைவிருத்துக் கொள்வான். உறுதியான அமைப்புக்கும் கச்சிதமான தோற்றத்திற்கும் பெயர்போன ஹெர்க்குலிஸ் - இந்தியா சைக்கிள் அவனுக்கு நிரந்தரமாகத் திருப்தியாக உழைக்கும்.

சொந்தமாகவே உங்களுக்கு ஒரு சவாரி
வண்டி வைத்துக் கொள்ளுங்கள்.



ஒரு

# ஹெர்க்குலிஸ்-இந்தியா

வாங்குங்கள்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள் :
டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்.
எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்.



# போற்றி வளர்க்க வேண்டும்

கனம் சி. சுப்பிரமணியம்

அரசியல் சுதந்திரம் அடைந்து விட்ட நம் நாடு பொருளாதார சுதந்திரமும் பெற்றுச் சிறக்க வேண்டுமானல், நாட்டின் உயிர் நிலையான கிராமங்கள் சீர்திருந்தி முன்னேற வேண்டும். கிராம ராஜ்யமே ராம ராஜ்யத்துக்கு வழி காட்டும் என்ற உண்மையை அறிவுறுத்தியவர் காந்தி அடிகள். பண்டைக் காலம் முதல் நம் நாட்டில் ஓங்கி வளர்ந்து, இடைக்கால அரசியல் விபரீதங்களால் அசட்டை செய்யப்பட்டுக் குன்றிய குடிசைத் தொழில்களைக் கிராம மக்கள் மீண்டும் போற்றிப் பேணத் தொடங்கினல் தான், தங்களை வறுமையிலிருந்து விடுவித்துக் கொள்வதுடன், தங்கள் சுய மரியாதையையும் மீட்க முடியும்.

இத்தகைய சிறு கைத் தொழில்களில் ஒன்ருக விளங்குகிறது, பனியன் நெசவுத் தொழில். நம் ராஜ்யத்தில் ஆயிரக் கணக்கான மக்கள் இந்தப் பனியன் தொழிலை நம்பி வாழ்ந்து வருகின்றனர்.

இவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களில், இவர்களுடைய கடுமையான உழைப்பின் முத்திரையையும் வேலைத் திறனையும் நாம் காண்கிறோம். அன்ருட வாழ்க்கைக்குத் தேவையான இப் பொருள்களுக்குக் கூட அயல் நாடுகளையோ, ஆலைப் பொருள்களையோ நம்பி நிற்காமல் இந்தச் சிறு கைத் தொழில் மூலம் தங்கள் வாழ்வுக்கும் நாட்டின் நன்மைக்கும் அடிகோலும் ஆயிரக் கணக்கான பனியன் சம்பந்தமான தொழிலாளரை ஆதரிப்பது, அறிவுடையோர்க்கு அழகு.

மனிதன் உழைப்பை உறிஞ்சிச் சுரண்டி அவனை அடிமையாக்கி விடாமல், அவன் உழைப்பை மிச்சப்படுத்தி எளிதாக்க உதவும் இயந்திரங்களுக்குத் தாம் விரோதி அல்ல என்று காந்தி அடிகள் கூறினுர்கள். மனைவி தையல் வேலையில் படும் கஷ்டத்தைக் கண்டு இரங்கி, அவள் உழைப்பை மிச்சப் படுத்தும் நோக்கத்துடன் கண்டு பிடிக்கப் பட்ட தையல் இயந்திரம், உண்மையில் அன்பின் சின்னம் என்று காந்தி மகான் கூறி யுள்ளார். அத்தகைய சிறு இயந்திரங்களைக் கொண்டு பெரும் கஷ்டங்களுக் கிடையே உழைத்துப் பனியன் துணிகளை உற்பத்தி செய்து வரும் இத் தொழிலாளர்களை ஆதரிப்பது நமது கடமை.

பயந்து போனுள். காசிலிங்கத்துக்குத் திடீரென்று கோப வெறி வருவது போலவே, திடீரென்று தணிந்தும் போய் விடும் என்பதைச் சந்திரமணி அறிந்திருந்தாள். அவருடைய கோபத்தைத் தணிக்கும் வழி வகைகளையும் கண்டு பிடித்து வைத்திருந்தாள்.

ஆனல் இன்றைக்குச் சந்திரமணிக்கே திகைப்பாகப் போய்விட்டது. சாந்தமான குரலில், "ஏன் இவ்வளவு படபடப்பாகப் பேசுகிறீர்கள்? ஈரத் துணிகளைக் களைந்து விட்டு, வேறு துணிகளை உடுத்திக் கொண்டு வாருங்கள். சாவகாசமாகப் பேசலாம். அதற்குள் ஒன்றும் முழுகிப் போய் விடாது!" என்ருள்.

"என்ன சொல்கிருய், சந்திரமணி! முழுகிப் போய் விடாது என்ரு சொல்கிருய்? தலைக்கு மேலே வெள்ளம் பிரளயமாகப் போய்க் கொண்டிருந்தாலும் இப்படித்தான் நீ சொல்லுவாய்! ஆகா! நான் தெரிந்து கொண்டேன். நீயும் இவருடன் சேர்ந்து பேசித்தான் இந்தத் துரோகம் செய்திருக்கிறீர்கள். இவருக்கு மட்டும் அவ்வளவு தைரியம் வந்திராது. இரண்டு பேரும் சேர்ந்து சதி செய்து என் மானத்தை வாங்கி விட்டீர்கள்! வேண்டும், வேண்டும்! இந்த அசட்டுக் காசிலிங்கத்துக்கு இதுவும் வேண்டும்! இன்னமும் வேண்டும்!"

இவ்வாறு காசிலிங்கம் மேலும் பேசிக் கொண்டே போன போது, பண்ணையாருக்கும் சந்திரமணிக்கும் நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொண்டது.

அவ்வளவு அமர்க்களத்திலும் பயமோ, கவலையோ இல்லாமலிருந்தவள் நான்தான் என்று பிற்காலத்தில் அறிந்தேன். என் தந்தை சொட்டச் சொட்ட நனைந்தபடி வந்து நான் படுத்திருந்த இடத்தின் அருகில் நின்று கொண்டு, காச்சு மூச் சென்று கத்தியதை யெல்லாம் ஏதோ வேடிக்கை யென்று நினைத்துப் பார்ப்பது போல் நான் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தேனும்!

"இந்து! அன்றைக்கு உன்னுலேதான் விபரீதம் எதுவும் நேராமல் போயிற்று! நானும் உன் அன்னையும் தப்பிப் பிழைத்தோம்!" என்று மந்திரமூர்த்தி அடிக்கடி சொல்லுவதுண்டு. (தொடரும்)

# பனியன் தொழிலின் எதிர்காலம்

திரு கருமுத்து தியாகராச செட்டியார்

நம் நாட்டில் இன்று சட்டை அணியாத மக்களைக் காண்பது அரிது. நாட்டுப் புறங்களில் வயல் வரப்புகளில் சேற்றில் வேலை செய்யும் உழவர், ஆடு மாடு மேய்க்கும் சிறுவர் சிறுமிகள் முதல் நகர்ப் புறங்களிலுள்ள தொழிலாளர் கைவண்டி இழுப்பவர், தொழில் நிலையங்களில் வேலை செய்யும் அலுவலர்கள் வரை யாவரும் பனியன் அணிவதைப் பார்க்கலாம். சுருக்கமாகச் சொன்னால் முதலாளிகளும் தொழிலாளிகளும் அரசியல் அதிகாரிகளும் யாவரும் வெளியே எத்தகைய சட்டை அணிந்திருந்தாலும் உள்ளே பனியன் அணியாமலிருப்பதைக் காண முடியாது. அதனால் இதுவரை ஆடை வகைகளை செய்யும் தொழிலில் ஈடுபட்டவர்கள் இனி பனியன் பின்னும் வேலையில் கருத்தைச் செலுத்துவது பயன் தருவதாகும்.



நமது இந்திய நாட்டில் பனியன் தொழில் இப்போது குடிசைத் தொழிலாகவும் பெரியதொரு ஆலைத் தொழிலாகவும் தோன்றி வளர்ந்து வருகிறது. பெரிய தொழிற்சாலைகள் மதுரை, கள்ளிக்கோட்டை, கல்கத்தா முதலிய நகரங்களிலும், குடிசைத் தொழிலாகத் திருப்பூர், சேலம் வட்டாரங்களிலும் நடைபெறுகின்றன. நாட்டின் தேவையை நோக்கப் பனியன் தொழில் இன்னும் தொடக்க நிலையிலேயே இருக்கிறது என்பது இனிது விளங்கும்.

பனியன்கள் விலை குறைவான உடை வகையைச் சேர்ந்தவை. இவைகளைக் கொண்டு பல வகையான சட்டைகளும் செய்து கொள்ளலாம். நமது நாட்டின் தட்ப வெப்ப நிலையும் மக்களின் பொருளாதாரமும் பனியன் தொழில் மேன்மேலும் வளர்ச்சியுறத் தக்கவாறு உள்ளன. வியர்வை சொட்டச் சொட்ட வேலை செய்யும் எவருக்கும் அதனை உடனுக்குடன் உறிஞ்சி இறுக்கத்தைப் போக்குவதில் பனியன் பேருதவியாக இருப்பதால் இதன் மேல் மக்களுக்கு விருப்பம் பெருகி வருவதும் இத் தொழிலுக்கு ஊக்கம் தருகிறது.

ஒரு பின்னல் யந்திரமும், சிறிய தையல் யந்திரமும் இருந்து விட்டால் எவரும் இந்தப் பனியன் தொழிலை எளிய குடிசைத் தொழிலாக மேற்கொண்டு செய்ய முடியும் என்பது தெளிவாகும்.

பனியன் பின்னுவதற்கு ஏற்றவை முறுக்குக் குறைந்த நூல்களே. அவைதான் வியர்வையை உறிஞ்சுவதற்கும் சிறிது விரிந்து கொடுப்பதற்கும் தக்கனவாகும். இந்த நூல்கள் ஆலைகளில் நூற்கப்பட்டுப் பட்டைகளில் சுற்றிக் கொடுக்கப்படுகின்றன. ஆயினும் பனியன் குடிசைத் தொழிலில் ஈடுபட்டவர்கள் பொருளாதாரக் குறைவினால் போதுமான நூலைப் பெற முடிவதில்லை. இதனைப் பார்த்துச் சேலம் முதலிய இடங்களில் உள்ள பனியன் உற்பத்தியாளர்கள் தமக்குள் கூட்டுறவு முறையில் ஒன்றுபட்டு நூல்களை மொத்தமாக ஆலைகளிலிருந்து வாங்கித் தங்களுக்குள் வழங்கிக் கொள்கிறார்கள். இது மிகவும் செம்மையான முறை என்றே தோன்றுகிறது.

மேற்சொன்ன கூட்டுறவு முறையைப் பின்பற்றிப் பிற வட்டாரங்களிலுள்ள பனியன் தொழிலாளர்கள் கூட்டுறவு சங்கங்கள் ஏற்படுத்தி அவற்றின் வாயிலாக நூல் ஆலைகளுடன் ஒப்பந்தங்கள் செய்து கொண்டு அதிகப்படியான அளவில் நூல்களைப் பெற்றுத் தங்கள் தங்களுக்கு வேண்டிய அளவு வழங்கிக் கொள்ளலாம். இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள் உறுப்பினராகிய தொழிலாளிகளுக்கு நூல்களைக் கடனுக்குக் கொடுத்து அதனைச் சில தவணைகளில் திரும்பப் பெற்றுக் கொள்வது ஒரு முறை. ஆனால் பனியன் செய்யும் தொழிலாளிகளே பனியன்களை விற்க வேண்டிய நிலைக்கு உள்ளாகின்றார்கள். விற்பனைக் கடமையையும் கூட்டுறவுச் சங்கங்களே மேற்கொள்ளுமானால் பனியன் செய்யும் தொழில் தங்கு தடையின்றி வளர்ந்து வரும். இதனால் பனியன் குடிசைத் தொழிலும் நயமும், வளர்ச்சியும் பெறுவதற்கு நல்ல வாய்ப்பு உண்டாகிறது.

கூட்டுறவுச் சங்கங்களே விலை உயர்ந்த பனியன் பின்னும் இயந்திரம், சுருக்கங்கள் நீக்கும் யந்திரம், வெளுக்கும் யந்திரம், சாயம் காய்ச்சும் யந்திரம், முதலான சாதனங்களையும் வாங்கிக் குறைந்த கட்டணங்களில் அந்தந்த வட்டாரங்களிலுள்ள தொழில்களுக்குக் கொடுத்து உதவலாம்.

இவ்வாறெல்லாம் அரசியலார் தக்க ஆதரவும் ஊக்கமும் அளிப்பார்களானால் நம் நாடு பனியன் தொழில் துறையிலும் பொன்றாப் புகழ் பெற்றுப் பொருள் வளம் பெருகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

## உழைப்பின் பெருமை

மெள்ள மெள்ள நூலிழைகள்
மேலும் கீழும் திரிந்த பின்னே
அள்ள அள்ள அணி அணியாய்
அரண்போல் வட்ட மிட்டதம்மா!
கள்ள மில்லாக் கடும் - உழைப்பால்
கண்முன் நின்றது வெண்பனியன்
உள்ளக் களிப்பை என்னென்பேன்
உழைப்பின் பெருமை கண்டீரோ?—லால்குடி கிருஷ்ணமூர்த்தி

சென்னை ராஜ்ய உருளைக் கிழங்கு வியாபாரிகளின் சங்கத் தலைவர் ஸ்ரீ என். ஆர். பாலகிருஷ்ண நாயுடு அவர்களின் புதல்வி சௌ. இந்திராபாய்க்கும் ஸ்ரீ கே. வரதராஜுலு நாயுடு அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி கே. வி. பக்தவத்சலத்திற்கும் செப்டம்பர் மாதம் 9ம் தேதி சென்னையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. முகூர்த்தத்துக்கும் அன்று மாலையில் நடந்த வரவேற்புக்கும் பிரமுகர்கள் பலர் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்!

# முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்ட சுதேசி சோப்புத் தொழிலின் வரலாறு

*காங்கிரஜியின் கொள்கையின்படி இத் தொழிலை இந் நூற்றண்டின் ஆரம்பத்தி லிருந்தே சுதேசித் தொழில் எனலாம். ஏனெனில் அது முற்றிலும் இந்திய நிர்வாகத்திற்கு உட்பட்டிருந்தது. அதிகப் படி அந்நிய நாட்டு சோப்புகளின் இறக்கு மதி மற்றும் இதர இடையூறுகளுக்கு மிடையே பாதுகாப்பின்றி தலை தூக்கி கின்றதோடு, அந்நிய நாட்டு சோப்பு களைப் போன்று நல்லவைகளாகவும், குறைந்த விலை யுள்ளவைகளுமான சோப்புகளை - யுத்த காலத்தில்கூட - நம் நாட்டுக்கு வேண்டிய அளவில் தயாரித்தது. அது நியாயமான முறையில் விளம்பரம் செய்கிறது.*

## பிற்போக்கு நிலைமை

*இதர தேசங்களிலுள்ள தேசியத் தொழில்களைப் போலவே நம் நாட்டுத் தொழிலும் அபிவிருத்தி அடைந்திருக்கும். ஆனல் 1935 லிருந்து நிலைமை மோசமாகியது. ஏனெனில் - நாட்டிற்குள்ளேயே - இந்தத் தொழில் ஓர் மாபெரும் உலக ஸ்தாபனத்தின் சமமற்ற போட்டியை எதிர்க்க நேரிட்டது. அந்த ஸ்தாபனம் இப்பொழுது அதன் வசமிருக்கும் 50%க்கும் அதிகமான நம்முடைய வியாபாரத்தை (குடிசைத் தொழிலின் வியாபாரம் உள்பட) நேராகவோ அல்லது முரண்பாடான உபாயங்களாலோ பிடிக்கக்கூடும்.*

நம் நாட்டின் சுய தேவைக்கு மேல் மிகவும் அதிகமான அளவுக்கு உற்பத்தி செய்யக் கூடிய உற்பத்திச் சக்தி-70% வீணுகிறது. திட்டக் கமிஷன் நிர்ணயித்தபடி அவ்வாறு <u>வீணுகும்</u> சக்தியை பயன்படுத்திக் கொள்ள உடனேயே <u>விசாரணை</u> நடத்த வேண்டும்.

*கீழ்க்கண்ட சுதேசி சோப்புகளை <u>வாங்கி</u> நம் நாட்டை சுதந்திரமாக்குவதுடன் சுகாதாரத்தையும் அபிவிருத்தி செய்யுங்கள்.*

அஸ்கோ ஸ்பெஷல் மற்றும் பார்
பங்கஜலக்ஷ்மி நீம் மற்றும் மில்கைட்
பி. ஸி. பி. டபிள்யூ. கார்பாலிக் மற்றும் கிளிஸிரின் சோப்புக்கள்
பெல்ஸ்-ரேனு டாய்லட்
பி. வி. பி. - 303
சார்தினி வாஷிங்
கோத்ரெஜ் நெ. 1 - வத்னி
குஜராத் 101 - நெப்கோ பார்
ஹமாம் - 501
ஹிமானி ஸ்னோ - மினர்
கைலாஸ் ஸாண்டல் - 108 வாஷிங்
காமினியா மற்றும் டில்பஹார் டாய்லட்
காந்தி - ஸ்வஸ்திக் பெர்ப்யூம்
காஸ்டர் ஆயில்
கீர்த்தி - 205
மார்கோ - மலேயா ஸாண்டல்
மை - யுனிவர்ஸல்
மைசூர் ஸாண்டல்
நந்தி வாஷிங்
ரூபா வாஷிங்
ஸிப்பாய் கார்பாலிக் மற்றும் ஹவுஸ்ஹோல்ட்
ஸ்வைகா மற்றும் நவ்ராஜ் ஹவுஸ்ஹோல்ட்
டீரோஸ் - டாப் வாஷிங்
டெக்ஸ்னோ டாய்லெட் மற்றும் ஸேப்டி
வசந்த் டாய்லட் மற்றும் லாண்டரி
வீர்மணி மஞ்சித் மற்றும் ஜோதி

மற்றும் 17 இதர அங்கத்தினர்களின் சோப்புகள்

தென்னிந்திய சோப்பு தயாரிப்பாளர் சங்கம் (இணைக்கப்பட்டது)

உயர்ந்த ரக டாய்லெட் மற்றும் சலவை சோப்புக்களை வாங்குவதற்கு இந்த ஜாபிதாவை கைவசம் வைத்திருங்கள். அளவிற்கு உட்பட்ட மூலதனம் காரணமாக தொடர்ச்சியாக விளம்பரம் செய்ய முடியாத நிலைமையில் இருக்கிறோம்.

ஒன்றுபட்டால் உண்டுவாழ்வு; ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு.

**I** இந்தியன் **S** சோப் **T** டாய்லட்ரீஸ் **M** மேக்கர்ஸ் **A** அஸோஸியேஷன்

இந்திய நிர்வாகம்—மூலதனம்—உழைப்பு

# தே. வி. தேவரானார்!

குமரி முனையிலிருந்து காற்று அலைகளிலே களி நடனம் புரிந்து வந்த இனிய கவிதைக் குரலோசை நின்று விட்டது.

கவி யுலகிலே கனிந்த பழமாக விளங்கி வந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் ஊனுடல் மறைந்து விட்டது. தே. வி. இம் மண்ணுலகை நீத்து விட்டார். தேவருலகம் சென்று தேவருடன் தேவராகி விட்டார்.

தமது பத்தொன்பதாவது வயதில் ஆரம்பப் பள்ளி ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிய கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, திருவாங்கூர் சர்வ கலாசாலையில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து 1931-ம் ஆண்டில் அப் பதவியிலிருந்து விலகினார். அதன் பிறகுதான் அவரது உயர்வைத் தமிழ் மக்கள் அறிந்து கொள்ளச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அதன் பின்னர்தான் கவிதை உலகில் அவருக்குப் புகழும் பெருமையும் ஏற்படலாயின.

கவிமணியின் கவித் திறனுக்கு எடுத்துக் காட்டாகப் பல ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலியில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. சிறந்த தமிழ் அறிஞரான வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் எண்பதாவது ஆண்டு விழா அந் நகரில் நடந்த போது, அவ்வைபவத்தை ஒட்டிப் பல வாழ்த்துப் பாக்கள் வந்திருந்தன. அவற்றில் ஒரு வாழ்த்துப் பாவை எழுதியவர் யார் என்று மேற்படி விழா நிர்வாகிகளுக்குத் தெரியவில்லை. "எண்பதாண் டான இளைஞனே........" என்று தொடங்கிய அந்தப் பாட்டை ஒரு பிரமுகர் வாசித்தார். "இதை எழுதியவர் யார் என்பது தெரியவில்லை" என்று கூறினார். உடனே அருகில் வீற்றிருந்த ரசிகமணி டி. கே. சி. அவர்கள் பாடலை வாங்கிப் பார்த்து விட்டு, "தமிழ் நாட்டில் தேசிக விநாயகம் பிள்ளை ஒருவரால்தான் இத்தகைய பாடலை எழுத முடியும்" என்று கூறினார்கள். அதை எழுதியவர் கவிமணிதான் என்பது பின்னர் தெரிய வந்தது! கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் மேதைமையும் கவித் திறனையும் தமிழ்நாடு மூதன் முதலாக அறிந்து கொள்ளும்படி செய்த பெருமை ரஸிகமணி டி. கே. சி. அவர்களுக்கு உரியது.

"மருமக்கள் வழி மான்மியம்", "மலரும் மாலையும்", "ஆசிய ஜோதி", "உமர் கய்யாம்" முதலிய பல கவிதைகளை எழுதிய கவிமணி, பல அருமையான கீர்த்தனங்களும் இயற்றி யுள்ளார். சின்னஞ் சிறு குழந்தைகள் முதல் பிரபல சங்கீத வித்வான்கள் வரையில் அவருடைய கீர்த்தனங்களைப் பாடி வருகிறார்கள்.

சென்ற ஆண்டில் ரஸிகமணி டி. கே. சி. மறைந்த போது கவிமணி பெருந் துயரத்துக்கு உள்ளானார். "ரஸிகர் போய் விட்டார்; இனி இக் கவிஞன் இருந்து என்ன பயன்!" என்றார்.

ரஸிகமணி சென்று ஓராண்டு பூர்த்தியாவதற்குள் கவிமணியும் போய் விட்டார். சென்ற இடத்தில் இருவரும் சந்திப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை.

அமரத் தன்மை வாய்ந்த கவிமணியின் கவிதைகள் என்றென்றும் அவரது திருநாமம் மறையாமல் பாதுகாத்து வரும்.

"உள்ளத் துவகை பொங்கியெழ
உரைகள் சொல்லப் பொருளேறத்
தெள்ளத் தெளிந்த கவியமுதம்
தீயில் வெந்து பொடியாமோ?"

கவிமணி அவர்களின் மனைவிக்கும் அவரது குடும்பத்தாருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# விதி வென்றது!

தமிழ் நாட்டில் ஒரு பெரும் யோகாசன நிபுணராக விளங்கிய அன்பர் திரு வி. என். குமாரசாமி செப்டம்பர் 24உ வெள்ளிக்கிழமை இரவு விண்ணுலகு எய்தினார்.

அன்பர் குமாரசாமி இவ்வுலக வாழ்வை நீத்த போது அவருக்கு வயது ஐம்பத்தைந்து. இந்த ஐம்பத்தைந்து ஆண்டுகளில் கடந்த இருபது ஆண்டுகளாக அவருக்குத் தலைவலிகூட வந்தது இல்லை. யோகாசனப் பயிற்சியின் மூலம் தம் உடலை நோய் அணுகா வண்ணம் காத்து வந்தார். தம்மைப் போலவே மக்கள் எல்லோரும் நோயற்ற வாழ்வு வாழ வேண்டும் என்று தமிழ் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று யோகாசனக் கலையைப் பற்றிப் பிரசாரம் செய்தார். 'கல்கி'ப் பத்திரிகையில், "ஆரோக்கிய ரகசியம்" "யோகாசனச் சிகிச்சை" என்ற தலைப்புக்களில் சென்ற நாலு ஆண்டுகளாகத் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வந்ததை நேயர்கள் அறிவார்கள்.

அவர் வீடு தேடிச் சென்று அவரிடம் ஆசனம் பயின்று நோய் நீங்கிச் சுகம் பெற்றவர் எத்தனையோ பேர். வீடு தேடி வருபவர்களை இனிய முகத்துடன் வரவேற்று அவர் கூறும் குறைகளை ஆதரவுடன் கேட்டு அதற்கேற்ப ஆசனங்களைப் பயிற்றுவிப்பார்.

அவரைப் போலவே அவர் மனைவி திருமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி அவர்களும் யோகாசனப் பயிற்சி பெற்றவர். கணவர், மனைவி இருவரும் நீண்ட காலமாகக் காங்கிரஸ் மகா சபை மூலம் தேச சேவை செய்தவர்கள். காங்கிரஸ் ஆரம்பித்த இயக்கங்களில் ஈடுபட்டுத் தியாகம் செய்து சிறை சென்றவர்கள். சென்னை நகரில் நடை

பெறும் எந்தப் பொதுக் காரியங்களிலும் இருவரும் பங்குபற்றித் தொண்டாற்றுவார்கள்.

1925-ம் ஆண்டு மதுரையிலிருந்து சென்னைக்கு வந்து சேர்ந்து, சாயத் தொழிலும் நூல் வியாபாரமும் நடத்தி வந்தார். அத்துறைகளில் தம்முடைய சொந்த உழைப்பால் உயர்ந்தார். சாயத் தொழில் வளர்ச்சிக்காக மாகாண சங்கம் நிறுவப் பாடுபட்டு அதில் பெரும் வெற்றி கண்டார்.

திரு குமாரசாமி ஆரிய சமாஜத்தில் சேர்ந்து புரிந்த தொண்டுக்கு ஓர் அளவில்லை. கடைசியில் அதன் தலைவராகத் திகழ்ந்து சமாஜத்தின் வளர்ச்சிக்கு அரிய பணியாற்றி வந்தார்.



தமிழகத்தின் நாலா பக்கங்களுக்கும் சென்று யோகாசனப் பிரசாரம் செய்து வந்த ஆரோக்கியக் குன்று மறைந்து விட்டது! நண்பர் உலகம் பெறற்கரிய ஒரு நண்பரை இழந்து விட்டது!

வேறு எந்த சக்தியைக் காட்டிலும் விதியின் சக்தி பெரிது என்பதைத் திரு வி. என். குமாரசாமியின் மரணம் நிரூபித்து விட்டது.

"நூறு ஆண்டு நான் உயிர் வாழ்ந்திருப்பேன். நோய் நொடியில்லாமல், வைத்தியரைக் கூப்பிடாமல், வாழ்ந்திருப்பேன். என்னைப் போலவே எல்லாரும் நோய் நொடியில்லாமல் நூறு ஆண்டு வாழ்ந்திருக்கலாம்!" என்று திரு வி. என். குமாரசாமி அடிக்கடி சொல்லுவார்.

அவரைப் பார்த்தவர்களும், அவர் பேச்சைக் கேட்டவர்களும் அதைப் பூரணமாக நம்பினார்கள்.

அவருடைய மரணம் நிகழ்ந்த அன்று மாலையிலேகூட அவர் வெளியிலே சென்று வந்தார். மனைவி மக்களுடன் உற்சாகமாகப் பேசிக் கொண்டு, உணவு அருந்தினார். உணவு அருந்தியபிறகு கணவரும் மனைவியும் மாடிக்குச் சென்றார்கள். சிறிது நேரம் பொழுது போக்குக்காகச் 'சொக்கட்டான்' ஆடினார்கள்.

திடீரென்று திரு வி. என். குமாரசாமி "என்னமோ போல் வருகிறதே!" என்றார். மயக்கமுற்று மனைவியின் பேரில் சாய்ந்தார். அவர் மரணமுற்றார் என்பது அவர் மனைவியினால் எண்ண முடியவே யில்லை. "மயக்கம் தெளிந்து எழுந்திருப்பார்!" என்றே எண்ணினார்.

சிறிது நேரம் கழித்து டாக்டர் வந்து பார்த்தார். "உயிர் பிரிந்து அரை மணி நேரம் ஆயிற்று!" என்றார்.

விதியின் வலிமையை நிரூபிக்க இதைக் காட்டிலும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

செப்டம்பர் 26உ ஞாயிற்றுக் கிழமை காலை பத்து மணிக்கு ஆயிரக்கணக்கான மக்கள் மழைத் தூறலையும் லட்சியம் செய்யாமல் திரு குமாரசாமியின் இறுதி யாத்திரை ஊர்வலத்தில் கலந்து கொண்டு அவருக்குத் தங்கள் இறுதி மரியாதையைத் தெரிவித்துக் கொண்டனர்.

திரு வி. என். குமாரசாமி பணியாற்றிய துறைகளில் எல்லாம் தாமும் பணியாற்றி, அவர் தம் வாழ்க்கைக்கு உற்ற துணையாக அமர்ந்த திருமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி அவர்களின் துயரைப் போக்கத் தக்க மருந்தும் உண்டோ! தந்தையைப் பிரிந்து நிற்கும் அவருடைய மக்களின் துயரத்துக்குத்தான் என்ன ஆறுதல் சொல்ல முடியும்! திருமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி அவர்களுக்கும், அவருடைய அருமைக் குழந்தைகளுக்கும் "எல்லாம் ஆண்டவன் செயல்" என்று கூறி, நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## காதில் விழுமா?

நாம் பலவித பொருள்களுக்குப் பிரசாரம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் சோப்பு வகையில் மட்டும் பிரசாரம் செய்து கொள்ளத் தேவை இல்லை. இந்த விஷயத்தில் சோப்புத் தொழிலதிபர்கள் நம் பாராட்டுக்குரியவர்கள்.

சோப்பு உற்பத்தி நம் நாட்டில் வீட்டுத் தொழிலாகவும் விளங்கி வருகிறது. சிறு முதல் போட்டுப் பலர் பல இடங்களில் நடத்தி வருகிறார்கள்.

மைசூர் என்றாலே சில ரஸிகர்களுக்கு மைசூர் சந்தன சோப்பின் நறுமணம் அவர்கள் நினைவுக்கு வரும். அந்த மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த பங்களூரில் வாசனைப் பொருள் சங்கத்தின் இருபதாவது ஆண்டு விழா சென்ற செப்டம்பர் 20-ந் தேதி வெகு சிறப்பாக நடைபெற்றது மிகப் பொருத்தமே யல்லவா?

மைசூர் முதன் மந்திரி ஸ்ரீ கே. ஹனுமந்தய்யா அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைத்தார்கள்.

இந்த மகாநாட்டுக்குத் தலைமை வகித்த, டாக்டர் ஜே. எஸ். படாமி, இந்திய சர்க்கார், சோப்புத் தொழில் பூராவுக்கும் அபிவிருத்திக் கவுன்ஸில் ஒன்றை நியமிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

மைசூர் தொழில் மந்திரி ஸ்ரீ எச். சித்தவீரப்பா, "தோல்வி மனப்பான்மையைக் கைவிட்டுச் சோப்புத் தொழிலுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியை நாம் ஏற்றுக்கொண்டு, பரஸ்பர ஒத்துழைப்பு, கூட்டு முயற்சி மூலம் இதைச் சமாளிக்க வேண்டும்" என்றார்.

மேற்படி சங்கத்தின் புதிய தலைவரான திரு என். எச். டாடா அவர்களும் மகாநாட்டுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பி யிருந்தார்.

# சிறந்த பனியன்களின் சின்னங்கள்




உற்பத்தியாளர்கள்—

# பத்மா ஹோஸயரி ஒர்க்ஸ்

கோர்ட் தெரு, திருப்பூர். (தென்னிந்தியா)

# பத்தாயிரம் பேர் பனியன் செய்து

எங்கு பார்த்தாலும் வேலை யில்லை!'' ''வேலை யில்லை!'' என்ற ஓலக் குரல்கள் கேட்கின்றன.

பள்ளிப் படிப்பு முடித்தவர்களுக்கு வேலை யில்லை! பல்கலையும் பயின்று பட்டம் பெற்றவர்களுக்கும் வேலை யில்லை! படிக்காத பாமரர்களுக்கும் வேலையில்லை! வேலையில்லை!! வேலையில்லை!!

இதைப் பார்த்துப் பூமிதேவி சிரிக்கிறாள்! பூமிதேவி மட்டும்தானா சிரிக்கிறாள்! அவள் படைத்த காடு சிரிக்கிறது; மாடும் மற்ற மிருகங்களும் சிரிக்கின்றன! செடியும் கொடியும் சிரிக்கின்றன! இன்னும் உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் ''வேலை யில்லை!'' என்று அழுது கொண்டிருப்பவர்களைப் பார்த்துச் சிரிக்கின்றன.

ஊக்கமும் உள்வலியும் உழைக்க விருப்பமும் உள்ளவர்கள் ''வேலை யில்லை!'' என்று அழ வேண்டிய அவசியம் இல்லை என்பதைச் செப்டம்பர் மாதக் கடைசியில் திருப்பூர் நகரத்துக்குச் சென்றிருந்தபோது தெரிந்து கொள்ள முடிந்தது.

திருப்பூர் நகரில் சிறு கைத்தொழிலாகப் பனியன் செய்யும் தொழில் நடந்து வருகிறது. சின்னஞ் சிறு இயந்திரத்தின் உதவியைக் கொண்டு பனியன் துணி செய்கிறார்கள். பனியன் துணி செய்யும் இயந்திரம் ஓடும்போது அதன் நூற்றுக் கணக்கான ஊசிகள் ஆடிக் கொண்டு வந்து நம் காதில் எதையோ இசையோடு ஓதுவது போலிருக்கிறது!

திருப்பூரில் பல்வேறு இடங்களில் உள்ள நூற்றுக்கணக்கான பனியன் செய்யும் இயந்திரங்களைப் பார்த்தேன். ஒவ்வொரு இயந்திரமும் ஓடும்போது அதன் ஊசிகள் ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தன. அந்தப் பாட்டைத் தெரிந்து கொள்ள முடியவில்லையே என்று சங்கடப்படும்படி யிருந்தது!

கடைசியில் மனச் சங்கடம் நிவர்த்தியாயிற்று. அந்தப் பனியன் யந்திரத்தின் ஊசிகள் ஆடிக் கொண்டே பாடிய வார்த்தைகள் என்ன என்பதையும் அறிந்து கொள்ள முடிந்தது.

'' இயந்திரங்கள் பல வருத்திடுவீரே!
இழைகள் கோத்து நல்பனியன் நெய்வீரே!''

என்பதைத்தான் திரும்பத் திரும்ப அந்த யந்திரங்களின் ஊசிகள் பாடிக் கொண்டிருக்கின்றன என்பதை ஒருவாறு புரிந்து கொள்ள முடிந்தது.

** ** **

நமது இந்தியா தேசத்திலேயே நல்ல முறையில் நடந்து வரும் பனியன் செய்யும் தொழிலில் தமிழ்நாடுதான் முதன்மை ஸ்தானம் வகிக்கிறது என்றால் நேயர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். அதிலும் திருப்பூர் என்னும் சிறிய பட்டணத்தில் இந்தத் தொழில் சாதாரணக் கைத்தொழிலாக நடந்து வருகிறது என்றால் சிலர் நம்பக்கூட மாட்டார்கள். அதை நேரில் பார்க்கும் வரையில் எனக்கும் அதே சந்தேகம்தான் இருந்தது.

திருப்பூர் பனியன் செய்யும் தொழிலிலும் அது சம்பந்தமான துணைத் தொழிலிலும் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் மொத்தம் பத்தாயிரம் பேராவது இருப்பார்கள்.

அவர்களில் படித்தவர்கள், படிக்காதவர்கள், ஆண், பெண், இந்து, முஸ்லிம் என்ற வித்தியாச



# உழைக்கின்றார்கள்! குவிக்கின்றார்கள்!

யில்லாமல் எல்லா இனத்தவர்களும் சேர்ந்து உற்சாகமாக வேலை செய்து வருகிறார்கள்.

திருப்பூர் கதர் உற்பத்திக்குப் பெயர்போனது. முற்காலத்தில் நம் பாரத நாட்டைப் பிரிட்டிஷ்காரர்கள் ஆண்டு கொண்டிருந்தபோது நடந்த கொடிப் போராட்டத்தில் உயிர்த்தியாகம் செய்த தேச ஊழியரான குமரனின் ஊர் என்பதினாலும் திருப்பூர் பிரசித்தி அடைந்திருந்தது. அதே திருப்பூரில் இன்று பனியன் செய்யும் தொழிலும் மிகச் சிறந்த முறையில் நடந்து வருவதால் உலகம் அறிந்த ஊராகத் திகழ்ந்து வருகிறது.

திருப்பூர் பட் [illegible] வீடுகளில் கை ராட்டின [illegible] தக [illegible] களில் நூல் சுற்றிக் [illegible] ர்கள்.

திருப்பூ [illegible] பல [illegible] ராமங்களில் உள்ள மக் [illegible] களை வாங்கிக் [illegible] ண்டு போகிறார்கள். தங்கள் வாங்கிச் செ [illegible] கட்டு நூலை வீட்டு வேலை செய்த நேரம்போ [illegible] இதர நேரங்களில் கைராட்டினத்தின் மூலம் த [illegible] குழல்களில் சுற்றி அந்தக் குழல்களைக் கொ [illegible] டு வந்து கொடுத்து விட்டுப் போகிறார்கள். [illegible] காட்சிகளைப் பார்க்கும்போது ஓரளவு விய [illegible].

தகரக் குழ [illegible] வதற்கும் பனியன் தொழிலுக் [illegible] சம்பந்தம்!

இப்படிச் சுற்றிக் கொண்டு வந்து கொடுப்பதில் அவர்களுக்கு எவ்வளவு கூலி கிடைக்கப்போகிறது!

இவ்வாறு அதிசயப் பட்டதற்கெல்லாம் வெகு எளிதில் விளங்கும்படி திருப்பூர் பனியன் தொழில் உற்பத்தியாளர்கள் விளக்கிக் கூறியதுடன் பனியன் தொழிற்சாலைகளுக்கும் அழைத்துச் சென்று பனியன் செய்யும் விசித்திர யந்திரங்களையும் அதன் நுணுக்கங்களையும் காண்பித்தனர்.

** ** **

பனியன் தொழிலுக்கு நூல்தான் முதல் தேவைப் பொருள். நூல் என்றால் சாதாரண துணிகள் செய்வதற்கு உபயோகப்படுத்தும் நூல் அல்ல. பனியன் செய்வதற்கென்றே பிரத்தியேகமாகத் தயாரிக்கப் படுகிறது. பனியன் செய்வதற்கு வேண்டிய நூல் மிக மிருதுவாகவும், அதிக முறுக்கில்லாமலும் இருக்கிறது.

இந்த நூலைப் பனியன் செய்யும் இயந்திரத்துக்கு உபயோகப் படுத்துவதற்குத்தான் தகரக் குழல்களில் கைராட்டினத்தின் உதவியைக் கொண்டு சுற்றச் செய்கிறார்கள். இப்படித் தகரக் குழலையில் நூலைச் சுற்றிக் கொடுப்பதின் மூலம் ஒரு பெண்மணி நாள் ஒன்றுக்குத் தன்னுடைய ஓய்வு நேரத்திலேயே முக்கால் ரூபாயிலிருந்து ஒரு ரூபாய் வரையில் சுலபமாகச் சம்பாதிக்கலாம்.



இவ்வாறு ஏழை மக்களிடம் கொடுத்துத் தகரக் குவளையில் சுற்றுமல் இயந்திரத்தின் உதவியைக் கொண்டு 'கோன்'களில் சுற்றிய நூலையும் வாங்கி உபயோகிக்கிறார்கள். அதாவது மிட்டாய்ப் பொட்டலம் போன்ற சிறிய குழாயில் நூல் சுற்றப் பட்டிருக்கிறது.

இந்தக் 'கோன்' நூல் கண்டையோ, அல்லது தகரக் குவளையில் சுற்றிய நூல் கண்டையோ பனியன் செய்யும் யந்திரத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்கிறார்கள். நூல் கண்டுகளைச் செருகிய பனியன் இயந்திரம் பார்ப்பதற்கு வெகு அழகாகக் காட்சி அளிக்கிறது.

அந்தச் சிறு பனியன் செய்யும் இயந்திரத்தின் அமைப்பு ஒரு விசித்திரம். இரும்புக் கால்களால் ஆன முக்காலி போன்ற பீடத்தில் பெரிய இரும்பு வளையம் போன்ற ஒன்றைப் பொருத்தியிருக்கிறது. அந்த வளையத்தின் மூலையில் சுழலும் சக்கரம் போன்ற வளையம் ஒன்று இருக்கிறது. அந்தச் சுழலும் வளையத்தைச் சுற்றிலும் நெருக்கமாக ஊசிகள் பொருத்தி வைத்திருக்கின்றன. அந்த ஊசிகளின் முனைகள் தூண்டில் முள்ளைப்போல் மிகச் சிறிய அளவில் வளைந்திருக்கின்றன. அவ்வளைந்த முனைக்கும் ஊசிக் கம்பிக்கும் உள்ள மிகச் சிறிய இடை வெளியில் திறந்து மூடிக் கொள்வது போன்ற ஒரு கம்பி அமைந் திருக்கிறது.

ஊசிகள் பொருத்தப் பட்டுள்ள சுழலும் வளையத்துக்கு மேலே சுமார் ஒரு அடி உயரத்தில் வட்ட வடிவமான இரும்பு வளையம் இருக்கிறது. அந்த வளையத்தைச் சுற்றிலும் 'கோன்' நூல் கண்டுகளைச் செருகுவதற்கு வசதியாக கம்பிகள் நீட்டிக் கொண்டிருக்கின்றன. அந்தக் கம்பிகளில் நூல் கண்டுகளைச் செருகி அதன் நூலை எடுத்து வந்து இரும்பு வளையத்தில் உள்ள நூற்றுக் கணக்கான ஊசிகளின் முனைகளில் பிணைத்து விடுகிறார்கள்.


ஸ்ரீ எஸ். ராம ராவ்

மின்சாரத்தின் உதவியால் யந்திரம் சுழல ஆரம்பிக்கிறது. அப்படிச் சுழலும்போது நூற்றுக் கணக்கான ஊசிகளும் ஏறி இறங்க ஆரம்பிக்கின்றன. அவ்வாறு ஏறி இறங்கும்போது ஊசிகள் நூலை வாங்கிப் பின்னல் போட்டு விட்டு விடுகின்றன. சிலந்திப்பூச்சி கூடு கட்டுவது போல ஊசிகள் வெகு விரைவாக நூலை வாங்கிப் பின்னுகின்றன. ஊசிகள் நூலை வாங்கிப் பின்ன இரும்பு வளையத்தின் உட்பகுதியில் பனியன் துணி மெதுவாகக் கீழே இறங்கி அங்குள்ள உருளையில் சுற்றிக் கொள்கிறது. சாதாரணத் தறியில் நீளமான பாவு நூலும் குறுக்கே செல்லும் ஊடை நூலுமாக இரண்டு நூல் இருக்கிறதல்லவா! அந்தப் பாவும் ஊடையும் இந்தப் பனியன் இயந்திரம் ஒரே நூலைக் கொண்டு பின்னி விடுகிறது. சாதாரண தறியில் அகலமான துணி மட்டும் தான் நெய்வார்கள். பனியன் துணியோ தலையணை உறை போலக் குழாய் உருவில் இருக்கிறது.

பனியன் குழாய்த் துணிகளைப் பிறகு சலவை செய்கிறார்கள். அந்தத் துணிகளுக்கு வர்ணம் போட வேண்டும் என்றால் சாயப் பட்டறைக்காரர்களிடம் கொடுத்து வேண்டிய சாயம் போட்டுக் கொள்கிறார்கள்.

பனியன் செய்யும் தொழிலுக்குப் பெரிய துணைத் தொழிலாகச் சலவைத் தொழில் நிகழ்ந்து வருகிறது. இத்தொழிலில் நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள் ஈடுபட்டு உழைக்கிறார்கள். முதலில் பனியன் துணிகள் 'காஸ்டிக் சோடா' மாவில் எட்டு மணி நேரம் வேகிறது. அப்படி வெந்த துணிகளை "பிளீச்சிங் பவுடர்" கலந்த தண்ணீரில் சில மணி நேரம் ஊற வைக்கிறார்கள். பிறகு சுத்தமான தண்ணீரில் அலசி விடுகிறார்கள். அப்படி அலசிய பிறகு நீலம் கலந்த தண்ணீரில் போட்டு எடுத்து நிழலில் காய வைக்கிறார்கள். அப்படிக் காய்ந்த துணிகள் தும்பைப் பூவைப் போல் துல்லியமாக இருக்கின்றன.

சலவைத் தொழிலின் சுத்தத்துக்குத் திருப்பூர் தான் பெயர் போனதாம். திருப்பூர் தண்ணீரிலேயே ஒரு தனி விசேஷம் இருக்கிறதாம். அதனால் சுற்று வட்டாரத்தில் பல இடங்களில் இருந்து கூடச் சலவைக்குத் துணிகளைத் திருப்பூருக்கே அனுப்பி வைக்கிறார்கள்.

சலவை செய்யப்பட்ட துணிகள் சுருக்கமாக இருக்குமல்லவா! அப்படிச் சுருக்கமாக இருந்தால் அத் துணிகளை வெட்டித் தைப்பதற்கு வசதியாக இருக்குமா! சுருக்கங்களை நீக்குவதற்காகத் தனி இயந்திரம் ஒன்று இருக்கிறது. இதைக் "காலண்டர் மிஷின்" என்று சொல்கிறார்கள். இந்தக் காலண்டர் இயந்திரத்தில் சலவை செய்த பனியன் குழாய்த் துணிகளைக் கொடுத்துச் சுருக்கம் நீக்கி 'ரோல்' 'ரோலா'கச் சுற்றி வைத்துக் கொள்கிறார்கள்.

அந்த 'ரோல்' துணிகள் பிறகு தையல் தொழில் நிபுணர்களிடம் போகின்றன. அவர்கள் தங்கள் கைவண்ணத்தால் விதம் விதமான பனியன்களாக வெட்டித் தைக்கிறார்கள்.

சாதாரண துணிகள் தைக்கும் தையல் இயந்திரத்தில் பனியன்களைத் தைப்பதில்லை. பனியன் துணிக்கு ரப்பர் போன்று நீண்டு சுருங்கும் தன்மையிருக்கிறது. ஆகையால் அதை எவ்வளவு ஜாக்கிரதையாகக் கத்தரிக்கோலால் வெட்டினாலும் துணிகளின் ஓரங்கள் ஒழுங்காக இருப்பதில்லை. பிசிர் பிசிராகத்தான் இருக்கின்றன. அப்படி இருக்கும் பிசிர்களை ஒழுங்காகக் கத்தரித்துக் கொண்டே பனியன் தைக்கும் இயந்திரம் தைக்கிறது. ஒரே சமயத்தில் தையலும் துணியின் பிசிர்களை வெட்டுவதும் நடக்கின்றன. பார்ப்பதற்கு இந்திர ஜாலம் போல் இருக்கிறது.

பனியன் துணிகள் நீண்டு சுருங்கும் இயல்புடையதாக இருப்பதால் பனியனின் தையலும் நீண்டு சுருங்கும் தன்மையுடையதாக இருக்க வேண்டியிருக்கிறது. அதற்காக அந்தத் தையல் இயந்

# ஸ்பைடர் பனியன்கள்



TRADE  MARK



ஒரு தேசத்தின் முன்னேற்றத்துக்கு
உற்பத்தியாளர்கள் செய்ய வேண்டிய
கடமைகளில் முதன்மை யானவை

- குறைந்த லாபம்
- சிறந்த தயாரிப்பு
- நிறைந்த உற்பத்தி
- திருப்திகரமான விநியோகம்

இவைகளை லட்சியமாகக் கொண்டுள்ள
எங்கள் ஸ்பைடர் பனியன்களைப்
பரீட்சித்துப் பாருங்கள்.



## SPIDER KNITTING COMPANY

TIRUPUR



ஸ்ரீ ஆர். நாராயணசாமி ராஜு, தலைவர், திருப்பூர் ஹேண்ட் & பவர் நிட்டிங் ஒர்க்கர்ஸ் யூனியன்



ஸ்ரீ பி. துக்காராம், தலைவர், பனியன் பாக்டரி அஸோஸியேஷன்.



ஸ்ரீ கே. சி. நாராயணசாமி, தலைவர், திருப்பூர் ஹொஸைரி மானிபாக்சர்ஸ் அஸோஸியேஷன்.

திரத்தில் இன்னொரு விசேஷ அமைப்பும் இருக்கிறது. மூன்று ஊசிகளும் மூன்று நூல் கண்டுகளும் கொண்டதாகவும், மிகவும் வேகமாகத் தைக்கும் ஆற்றல் படைத்ததாகவும் பனியன் தையல் இயந்திரம் இருக்கிறது. அந்த இயந்திரங்கள் மின்சாரத்தின் உதவியால் ஓடுகின்றன. கண்மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் மணி மணியாகச் சங்கிலிப் பின்னல் தொடர் போலத் தைத்துக் குவித்து விடுகிறது.

தைத்த பனியன்களை, எந்தத் தொழிற்சாலையில் தயாராகிறதோ அந்தத் தொழிற்சாலையின் விலாசத்தைப் போட்டு, அழகாக மடித்து இஸ்திரி போட்டு வைக்கிறார்கள். அப்படி மடிக்கப்பட்ட பனியன்கள் அதற்கென்றே தயாரிக்கப்பட்ட அட்டைப் பெட்டிகளில் அரை டசனாகவும் ஒரு டசனாகவும் அடுக்கிச் சரி பார்க்கப்படுகின்றன. பிறகு அந்த அட்டைப் பெட்டிகளைப் பெரிய கள்ளிப் பெட்டிகளில் குரோஸ் குரோஸாக அடுக்கி உலகம் முழுவதற்கும் அனுப்புகிறார்கள்.

பனியன் துணியை நெய்வதற்கு மட்டும்தான் இயந்திரங்களை உபயோகிக்கிறார்கள். அந்த இயந்திரங்களும் காந்தி மகான் வகுத்த லட்சியத்துக்கு ஏற்ற சின்னஞ் சிறு இயந்திரங்கள்தான். அந்த இயந்திரம் ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆள் அவசியம் வேண்டும். அதைத் தவிர இதர எல்லா வேலைகளும் தனிப்பட்ட மனிதர்களின் உழைப்பால்தான் நடக்கிறது.

சலவைத் தொழில் செய்பவர்கள் பொதுவாக ஒரு குறிப்பிட்ட குலத்தையே சேர்ந்தவர்களாக இருப்பது வழக்கம் அல்லவா! திருப்பூரில் பனியன் சலவை செய்யும் தொழிலில் எல்லாச் சாதியாரும் சேர்ந்து ஈடுபட்டு உழைத்து வருகிறார்கள். திருப்பூரில் தொழில்களுக்குத்தான் மதிப்புக் கொடுக்கிறார்களே ஒழியச் சாதிகளுக்கு மதிப்புக் கொடுப்பதில்லை. அதனால் எல்லாரும் எல்லாத் தொழில்களையும் செய்கிறார்கள். தொழில் செய்பவர்களை மக்கள் கண்யமுள்ளவர்களாகக் கருதுகிறார்கள். தொழிலில் ஏற்றத் தாழ்வையே அவர்கள் காண்பதில்லை. அதனால்தான் திருப்பூரில் பனியன் தொழில் வளர்ந்து வருகிறது என்று பெருமையோடு கூறிக் கொள்கிறார்கள்.

இப்படிப்பட்ட அற்புதமான கைத்தொழிலைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்தவரைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புவது இயல்பல்லவா! அவர் சேலத்தில் இருப்பதாக அறிந்து அவரைப் பார்க்கச் சேலத்துக்குச் சென்றேன்.

## யந்திரம் கண்ட மேதாவி

சேலம் வியாசராவ் மடத்துக்குள் இருந்த ஒரு அறைக்கு எதிரில் வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர் சாய்வு நாற்காலி ஒன்றில் அமர்ந்திருந்தார். அந்த நாற்காலியும் வயது முதிர்ந்து காணப்பட்டது. அந்தப் பெரியவரின் மெலிந்த உருவமும், முகத்தில் வெள்ளை வெளேர் என்று காட்சியளித்த நீண்ட தாடியும் ஒளிவீசும் கண்களும் கவி தாகூரை நினைவூட்டிக் கொண்டிருந்தன. அவருடைய கையில் 'நிட்டிங் தொழில்' சம்பந்தமான நூல் ஒன்றும் இருந்தது.

எங்களைப் பார்த்தவுடன் அந்தப் பெரியவர், தமக்கு எதிரில் உள்ள ஆசனத்தில் அமரும்படி சொன்னார். நாங்கள் வந்த காரியத்தைச் சொன்னவுடன் பனியன் தொழிலின் வரலாற்றைப் பற்றியும் அதைத் தமிழ் நாட்டில் பரப்புவதற்குத் தாம் பட்ட கஷ்டங்களைப் பற்றியும் ஸ்ரீ ராமராவ் கூறத் தொடங்கினார்.

அவருடன் பேசிக் கொண்டு இருந்தபோது பனியன் தொழில் மூலம் கணக்கற்ற ஏழை மக்களுக்கு வேலை கொடுக்கலாம், மிகக் குறைந்த விலையில் நாகரிகமான ஆடைகள், நமது நாட்டின் சீதோஷ்ண நிலைக்கு ஏற்றபடி தயாரிக்கலாம் என்ற திடமான அபிப்பிராயமும் ஏற்பட்டது. அதே சமயத்தில் தமிழ் நாட்டில் இரண்டு பேர் சேர்ந்து தொழில் செய்யும்போது ஒருவரைக் கண்டு ஒருவர் பொறாமைப்படும் அருவருக்கத் தக்க காரியத்தால் தொழில்கள் வளராமல் தடைப்பட்டுச் சிதறும் கோலத்தையும் தெரிந்து கொள்ள முடிந்தது. அவர் கைஜாடையும், வயோதிக வயதில் வாலிபத் துடிப்புடன் பேசிய பேச்சும் அவருக்குப் பனியன் தொழிலில் உள்ள ஆர்வத்தை எடுத்துக் காட்டின.

சேலம் கல்லூரியில் உள்ள சயன்ஸ் உபாத்தியாயர் ஒருவரின் வேண்டுகோளுக்கு இணங்க

ஸ்ரீ எஸ். ராமராவ் பனியன் தொழிலில் ஈடுபட்டார். இங்கிலாந்தில் உள்ள பனியன் இயந்திரம் உற்பத்தி செய்யும் கம்பெனி ஒன்று அவருக்குப் பனியன் இயந்திரமும் அந்தத் தொழில் சம்பந்தமான நூல்களும் இலவசமாகக் கொடுத்து உதவியது. அந்த நூலைத் தாமே படித்து உணர்ந்து இயந்திரத்தையும் இயக்கிப் பனியன் செய்யும் தொழில் நிபுணர் ஆனார்.

சுமார் ஏழு ஆண்டுகள் சிரமப்பட்டுப் பனியன் தொழிலில் வெற்றி கண்டார். ஆனால் அந்தக் காலத்தில் மக்கள் பனியனைப் போட்டுக்கொள்ள விரும்பவில்லை. பனியனை அணிவது அநாகரிகம் என்று கருதினர். பனியனை உற்பத்தி செய்து விட்டு அதை விற்பதற்கு வேண்டிய 'மார்க்கெட்' கிடைக்காமல் ஸ்ரீ ராமராவ் தவித்தார்.

1914-ம் ஆண்டு அதற்கும் ஒருவழி கண்டு பிடித்து அதிலும் வெற்றி கண்டார். சுமார் ஆயிரம் பனியன்களை எடுத்துக் கொண்டு சென்னைக்கு வந்தார். பிரஸிடென்ஸி கல்லூரி மாணவர்களுக்கும், கிறிஸ்தவக் கல்லூரி மாணவர்களுக்கும் பனியன்களை இலவசமாக வழங்கி உடுத்திக் கொள்ளச் செய்தார். மாணவர்களுக்குப் பனியன் அணிந்து கொள்வதில் விசேஷ மோகம் உண்டாயிற்று. அவர்கள் கடை வீதிக்குச் சென்று தாங்கள் அணிந்திருப்பது போன்ற பனியனைக் கேட்க ஆரம்பித்தனர். அதன் பிறகு ஒரே வாரத்தில் சென்னை வியாபாரிகளிடமிருந்து மட்டும் இருபதினாயிரம் ரூபாய்களுக்குப் பனியன் வேண்டும் என்று 'ஆர்டர்' வந்தது.

பனியன்கள் நல்ல வியாபாரம் ஆக ஆரம்பிக்கவே ஸ்ரீ ராமராவ் அவர்களைப் பணம் படைத்தவர்கள் பலர் நெருங்கி அதிக மூலதனத்தில் பனியன் கம்பெனியை ஆரம்பித்து நடத்தலாம் என்று யோசனை கூறினர். அந்த யோசனையை முதலில் மறுத்த ஸ்ரீ ராமராவ் பிறகு நண்பர்களின் வற்புறுத்தலுக்கு இணங்க ஏற்றுக் கொண்டார். பலர் பணம் கொடுத்துப் பனியன் கம்பெனியில் பங்குதாரர்களாகச் சேர்ந்தனர்.



ஸ்ரீ சவுண்டப்பச் செட்டியார்

சேலம் பனியன் கம்பெனி ஒன்பது ஆண்டுகள் மிகுந்த லாபகரமாக நடந்தது. பணம் போட்ட முதலாளிகள் மேலும் மேலும் பணம் சேர்க்க ஆசைப்பட்டனர். யாருடைய அறிவையும் மதிப்பையும் கொண்டு பனியன் கம்பெனி ஆரம்பித்து நடத்தி வந்தார்களோ அவரையே கண்டு பொறாமைப்பட ஆரம்பித்தனர். ஸ்ரீ ராமராவ் இல்லாமலேயே கம்பெனியை நடத்தத் திட்டமிட்டனர். அது முடியாமல் போகவே கம்பெனியை மூடி விடும்படி நேரிட்டது. சுமார் 4,000 ரூபாய் மூலதனத்தில் ஆரம்பித்த பனியன் கம்பெனி ஐந்து ஆண்டுகளுக்குள் இரண்டு லட்ச ரூபாய்க்குமேல் பெறுமானமுள்ள கம்பெனியாக வளர்ந்து விற்கப்பட்டது என்று ஸ்ரீ ராமராவ் கூறினார்.

அந்தக் காலத்தில் பனியன் தொழில் நுணுக்கம் தெரிந்த நிபுணர்கள் இல்லாததால் பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் மதிப்புள்ள நூற்றுக்கணக்கான பனியன் செய்யும் இயந்திரங்கள் கேட்பாரற்றுத் துருப்பிடிக்க ஆரம்பித்தன.

சில ஆண்டுகளுக்குப்பின் அந்த இயந்திரங்களில் சிலவற்றை மிகக் குறைந்த விலைக்கு வாங்கிப் போய்த் திருப்பூரில் பனியன் பின்னும் தொழிலைப் பலர் ஆரம்பித்தனர். அப்படி ஆரம்பித்த பனியன் தொழில்தான் சென்ற மகா யுத்தத்தின் போது வளர்ந்து இப்போது நல்ல முறையில் சிறந்த கைத்தொழிலாக நடந்து வருகிறது.

இமயம் முதல் குமரிமுனை வரையில் உள்ள பல மாகாணங்களைச் சேர்ந்த வாலிபர்கள் ஸ்ரீ ராமராவிடம் வந்து பனியன் பின்னும் தொழிலைப் பயின்று சென்றிருக்கின்றனர். அப்படி அவரிடம் தொழில் பயின்று சென்றவர்கள்தான் இன்று பஞ்சாப் மாகாணத்தில் பனியன் செய்யும் இயந்திரங்களையும் அதற்கு வேண்டிய சாமான்களையும் உற்பத்தி செய்யும் தொழிலில் ஈடுபட்டு வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள். கள்ளிக்கோட்டை, திருப்பூர் முதலிய பனியன் தொழில் நடக்கும் பல ஊர்களிலும் பனியன் தொழில் நுணுக்கங்களைத் தெரிந்து தொழில் நடத்துபவர்களில் பலர் ஆதியில் சேலத்தில் தொழில் பயின்று சென்றவர்கள்தான்.

இந்த விவரங்களை யெல்லாம் ராமராவ் கூறிவிட்டு, சுமார் மூன்னூறு ரூபாய்க்குள்ளாகவே பனியன் செய்யும் இயந்திரத்தை நாமே தயாரிக்கலாம் என்றார். ஒவ்வொரு வீட்டிலும் அந்த இயந்திரத்தைக் கொண்டு பனியன் செய்யலாம். அதன் மூலம் நாள் ஒன்றுக்கு ஐந்து ரூபாயிலிருந்து பத்து ரூபாய் வரையில் அலட்சியமாகச் சம்பாதிக்கலாம் என்றார்.

நாட்டின் நலம் கருதித் தொழில் பயில வேண்டும் என்று ஆர்வத்துடன் யார் வந்தாலும் இத்தொழிலை இலவசமாகவே கற்றுக்கொடுப்பதாக ஸ்ரீ ராமராவ் கூறுகிறார்.

ஒருவித இயந்திரமும் இல்லாமல் இரண்டு ஊசிகளை வைத்துக்கொண்டு பெண்மணிகள் ஓய்வு நேரத்தில் கம்பளி பனியன்கள் — ஸ்வெட்டர்கள் செய்யலாம். கடைகளில் பதினைந்து ரூபாய்க்கு விற்கும் கம்பளி பனியன்களை நாலு ரூபாயில் பின்னி விடலாம். இதன் மூலமாகக் குடும்பப் பெண்மணிகள் தினம் இரண்டு ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கலாம் என்றார் ஸ்ரீ ராமராவ்.

"அது சரி; இந்தப் பனியன் பின்னும் சிறு இயந்திரத்தை யார் கண்டு பிடித்தது!" என்று கேட்டு வைத்தார் என் அருகில் இருந்த உற்சாகி ஒருவர்.

"கேளுங்கள் அந்த மேதாவியின் சோகக் கதையை" என்று ஆரம்பித்துப் பனியன் இயந்திரத்தைக் கண்டு பிடித்தவரைப் பற்றிக் கூறினார்.

* * *

1589-ம் ஆண்டு. குளிர் காலம். இங்கிலாந்து நகரம் அமைதியாக இருக்கிறது. குளிர் தாங்காது மக்கள் தங்கள் தங்கள் வீட்டில் அமர்ந்து வேலை செய்து கொண்டிருக்கின்றனர். குளிரிலிருந்து உடலைப் பாதுகாத்துக் கொள்ள

# பனியன் யந்திரங்கள்

1. கைத்தறி ஓட்டுவது போல கைவிறல் அடித்து நெய்யும் பனியன் இயந்திரம். "பிளாட் மிஷின்". இந்த இயந்திரத்தைக் கொண்டுதான் முதலில் பனியன் தொழில் ஆரம்பித்தனர்.

2. இயந்திரத்தின் உதவியினால் 'கோன்'களில் சுற்றப்படுகிறது.

3. 'இண்டர் லாக்கிங்' என்னும் உயர்ந்த ரக பனியன் நெய்யும் இயந்திரம்.

4, 5. வலை பனியன் நெய்யும் இயந்திரம்.

6. விதம் விதமான பூவேலைப்பாடுகளுடன் நெய்யும் வசதி படைத்த பனியன் இயந்திரம். மழை காலத்துக்கு உபயோகிக்கக்கூடிய கம்பளி ஸ்வெட்டர்களும், படத்தில் இருப்பது போன்ற நால் ஸ்வெட்டர்களும் நெய்யக்கூடிய விசேஷ அமைப்புக்களுடன் கூடியது.




RKC

RKC



வேண்டி அணிந்து கொள்ளும் கால் உறைகளை ஒரு பெண்மணி பின்னிக் கொண்டிருக்கிறாள்.

அடாடா! அவள் கைகள் தான் எவ்வளவு வேகமாகப் பின்னுகின்றன. அது அசைந்து ஆடித் துடித்துப் பின்னும் அழகை அவள் கணவன் வில்லியம் லீ பார்த்துக் கொண்டிருக்கிறான். இப்படி ஒவ்வொரு நாளும் அவள் பின்னிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதில் அவனுக்கு அளவற்ற ஆசை.

இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது அவன் மனத்திலே "ஏன் இந்த விரல்களைப்போல் வேகமாக இயங்கிப் பின்னக் கூடிய ஒரு இயந்திரத்தைக் கண்டு பிடிக்கக் கூடாது!" என்ற எண்ணம் உண்டாகிறது.

பல ஆண்டுகள் கஷ்டப்பட்டுக் கால் உறைகள் பின்னும் இயந்திரத்தைக் கண்டு பிடித்தான். அந்த யந்திரத்தின் மூலம் பின்னிய முதல் கால் உறைகளை அப்போது இங்கிலாந்தில் இருந்த ராணிக்குப் பரிசளித்தான். இந்தமாதிரி ஒரு அற்புத இயந்திரத்தைக் கண்டு பிடித்ததற்காக ராணி வில்லியம் லீக்குப் பாராட்டுரை வழங்கவில்லை; பரிசும் அளிக்கவில்லை. அதற்குப் பதிலாக அவனுக்கு அந்த நாட்டிலே இருந்து வாழ முடியாதபடி பல கொடுமைகள் செய்தாள்.

பனியன் பின்னும் அற்புத இயந்திரத்தைக் கண்டு பிடித்த மேதாவி தாம் கண்டு பிடித்த இயந்திரங்களைத் தூக்கிக் கொண்டு பிரஞ்சு நாட்டுக்கு ஓடினான். பிரஞ்சு நாட்டு மன்னன் அவன் மேதையைப் புகழ்ந்து பாராட்டி அவனுக்கு உதவி செய்வதாக வாக்களித்தான். வில்லியம் லீ மனம் மகிழ்ந்தான். ஆனால் அந்த மகிழ்ச்சி அவனுக்கு நீடிக்கவில்லை. வில்லியம் லீக்கு உதவி புரிய இசைந்த மன்னன் கொலையுண்டு மடிந்து விட்டான்.

வில்லியம் லீயின் எதிர்காலம் இருண்டு விட்டது. எஞ்சியிருந்த தன் வாழ்நாள் எல்லாம் சாப்பாட்டுக்குக் கூட இல்லாமல் கஷ்டப்பட்டுப் பாரிஸ் நகரில் நடுத் தெருவில் செத்தான்.

இன்றைய தினம் எத்தனையோ லட்சக் கணக்கான மக்களுக்குப் பிழைப்பும் சிக்கனமான செலவில் நாகரிகமான உடையும் அணிந்து கொள்ள வழி வகுத்த மேதை வில்லியம் லீ தன் வாழ்நாளில் பட்டினியோடும் பசியோடும் போராடி அனாதையாகச் செத்தான்.

ஆனால் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னால், 1892-ம் ஆண்டில், வில்லியம் லீ பிறந்த கால்பர்ட்டன் என்ற கிராமத்தில் அவன் வசித்த வீட்டை வாங்கி அவன் உருவச்சிலையை அமைத்து, அவனுக்கு ஞாபகார்த்த மண்டபம் கட்டி மரியாதை செய்தார்கள்.

வில்லியம் லீ பனியன் நெய்யும் தொழிலுக்குப் பாடுபட்டது போலவே தமிழ் நாட்டில் ஸ்ரீராமராவ் அவர்களும் பாடுபட்டிருக்கிறார். இந்த உலகில் வாழ்ந்த மேதைகள் அனேகர் தம்முடைய வாழ்நாளில் தாங்கள் கொண்ட உன்னத லட்சியத்துக்காகக் கஷ்டப்பட்டவர்கள் தானே!



ஜனாப் எஸ். ஏ. காதர்

# தமிழகத்தில் பனியன் தொழில்

திருப்பூர் பட்டணத்தில் மூன்று பனியன் உற்பத்தியாளர் சங்கங்கள் இருக்கின்றன. இந்தச் சங்கங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையில் பனியன் தொழிலுக்குச் சேவை செய்திருக்கிறது. குறிப்பாக யுத்த காலத்தில் நூல் கிடைக்காத சமயத்தில் ஒவ்வொரு பனியன் உற்பத்தியாளரும் நூல் பெறுவதற்கு வேண்டிய வழி வகைகள் செய்வதில் அரும் பாடுபட்டு உழைத்திருக்கின்றன. இப்பொழுது அச் சங்கங்களுக்கு வேலை ஒன்றும் இல்லையென்றாலும், மூன்று சங்கங்களும் ஒன்றாகச் சேர்ந்து ஐக்கியத்துடன் பனியன் தொழில் வளர்ச்சிக்குப் பாடுபட வேண்டும் என்று பனியன் தொழில் உற்பத்தியாளர்களே சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லிக் கொண்டிருப்பதைச் செயலில் கொண்டு வந்து உழைத்தால் அவர்களுக்கு உள்ள சில்லறைத் தொந்தரவுகளையும் போக்கிக் கொள்ளலாம். அத்துடன் பனியன் தொழிலையும் நல்ல முறையில் வளர்த்து வரலாம்.

திருப்பூர் பனியன் தொழில் வளர்ச்சிக்குச் சங்கங்கள் பாடுபட்டிருப்பதைப் போலவே சில தனிப் பட்டவர்களும் பொருள் உதவி புரிந்து வளர்த்து வந்திருக்கிறார்கள். "திருப்பூர் ஹொசைரி உற்பத்தியாளர் சங்கத்"தின் துணைத்தலைவர் ஸ்ரீ சவுண்டப்பச் செட்டியார் பல பனியன் கம்பெனிகளுக்குப் பிரதிபலனை எதிர்பாராமல் பண உதவிபுரிந்து பனியன் தொழிலுக்கு ஊக்க மளித்திருக்கிறார். திருப்பூரில் இன்று நல்ல முறையில் நடந்து வரும் பனியன் கம்பெனிகளில் சில அவருடைய உதவியால் முன்னுக்கு வந்தவை. இன்னும் அவர் பனியன் தொழில் வளர்ச்சிக்காக அத் தொழிலுக்கு நடுநடுவே ஏற்படும் இடையூறுகளை நீக்க அரும் பாடுபட்டு வருகிறார்.

பனியன் தொழில் நடத்துபவர்கள் எல்லாம் ஏழைகள். மிகக் குறைந்த செலவில் மூலதனம் வைத்துத் தொழில் நடத்தி வருகிறவர்கள். அன்றாடம் தங்கள் தேவைக்கு வேண்டிய நூலைச் சில்லறை வியாபாரிகளிடம் கடனாக வாங்குபவர்கள். இதைப் பயன்படுத்திக் கொண்டு சில்லறை வியாபாரிகள் நூலை அதிக விலைக்கு அவர்களிடம் கடனாகக் கொடுக்கிறார்கள். அதிக விலை கொடுத்து நூல் வாங்குவதால் உற்பத்தியாளர்கள் குறைந்த விலைக்குப் பனியன்களைத் தயாரிக்க முடிவதில்லை. அதனால் பலப் பல ஏழைகள் தங்கள் தொழிலை மூடியிருக்கின்றனர்.

இப்படிப்பட்ட நல்ல தொழிலுக்குச் சர்க்கார் விவசாயிகளுக்குக் கடன் வசதி அளிப்பதுபோல் அளித்தால் பனியன் கைத்தொழில் வளர்ச்சிக்கு ஊக்கமூட்டுவதுடன் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் குறைக்கலாம் என்று ஸ்ரீ சவுண்டப்பச் செட்டியார் உணர்ச்சியுடன் கூறினார்.

பனியன்களை உற்பத்தி செய்து விட்டால் மட்டும் போதுமா! அவைகளை நாணயமாகவும்

நல்ல முறையிலும் விற்க வேண்டாமா! அப்படிச் செய்தால்தானே தொழில் வளர்ச்சியுறும்! இந்தக் காரியங்களை ஜனாப் காதர் மிகத் திறமையுடன் செய்து வருகிறார்.

ஜனாப் காதர் மிகச் சிறந்த தேசபக்தர். காங்கிரஸ் மகாசபை ஆரம்பித்து நடத்திய ஒவ்வொரு போராட்டங்களிலும் ஈடுபட்டுச் சிறை சென்ற தியாகி. பல நூற்றுக் கணக்கான ஏழை எளிய மக்களுக்குப் பிழைப்பளிக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடனேயே பனியன் தொழிலை ஆரம்பித்து நடத்தி வருகிறார். பனியன் தொழிலுக்கு ஒரு சிறந்த மாதிரித் தொழிற் சாலையாக அவருடைய தொழிற்சாலை விளங்கி வருகிறது.

தொழிலாளர்கள் மத்தியில் நல்ல பண்புகள் வளரவேண்டும். தொழில் வளர்ச்சியே தேசத்தின் வளர்ச்சி என்று ஒவ்வொரு தொழிலாளரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகப் பல சிறந்த முறைகளைக் கையாண்டு வருகிறார்.

தொழிலாளர்கள் தாங்கள் செய்யும் வேலைக்காகப் பெறும் சம்பளத்தைவிடத் திறமைக்காக வேறு அதிகம் பெறுகிறார்கள். வாழ்க்கையில் ஒழுக்கமும் பண்பும் உள்ள தொழிலாளர்களுக்கு அதாவது புகை பிடிக்காதிருத்தல், வேலைக்கு வரும் போது நாகரிகமாக உடையணிந்து வருதல், செய்யும் வேலையைச் சுத்தமாகச் செய்தல் ஆகியவைகளுக்காக விசேஷ பரிசுகள் அளித்து உற்சாக

## சாதாவா? சாண்டோவா?



மூட்டி வருகிறார். பொதுச் சேவையில் அவருக்கு உள்ள ஆர்வம் காரணமாகத் தமக்குள்ள பல தொழில் சம்பந்தமான வேலைகளுடன் திருப்பூர் நகர சபையின் துணைத்தலைவர் பொறுப்பையும் ஏற்றுத் திறம்பட நடத்தி வருகிறார்.

தம்முடைய ஸ்தாபனத்தில் தயாராகும் பனியன்களை வாங்கி விற்கும் ஏஜண்டுகளை ஆண்டுதோறும் தம்முடைய செலவிலேயே திருப்பூருக்கு வரவழைத்துப் பெரிய பெரிய மகாநாடு நடத்துகிறார். பனியன்களைப் பற்றி மக்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள முயலுகிறார். பனியன் விற்பனையில் அதிக ஊக்கம் காட்டியவர்களுக்கு அவர்கள் செய்துள்ள விற்பனை விகிதத்துக்குத் தகுந்தபடி 'போனஸ்' வழங்கி வருகிறார். இதனால் எல்லாம் வியாபாரிகள் பனியன் விற்பனையில் அதிக ஊக்கம் காட்டி வருகிறார்கள்.



பனியன் உற்பத்தியை நம் நாட்டில் செய்ய முடியுமா? என்ற கேள்வியைத் தூக்கி எறிந்து விட்டு ...... ஏராளமான பனியன்களை மக்களுக்கு இறக்குகிறார்கள்.

பனியன் தொழில் அதிபர்கள் என்னதான் நல்ல முறையில் பனியன்கள் உற்பத்தி செய்தாலும் அதில் நேர்மையும் நியாயமும் இல்லாவிட்டால் தொழில் வளர முடியாது. ஒரு சில குறிப்பிட்ட அளவுள்ள பனியன்கள் தயாரிக்கும் இயந்திரங்கள்தான் திருப்பூரில் இருக்கின்றன. பனியன் தொழில் உற்பத்தியாளர்கள் வியாபாரத்துக்கு ஆசைப்பட்டு 32 அங்குல அகலமுள்ள பனியனையே 36 அங்குல அளவுள்ள பனியன் என்று முத்திரை போட்டு விற்று வருகிறார்கள். இப்படிச் செய்வதால் பனியன் உற்பத்தியாளர்களுக்கு ஏதோ இடைக் காலத்துக்கு லாபகரமாகத் தோன்றினாலும் மக்களை ஏய்ப்பதாகுமே

பட்ட நூலையும் தங்கள் ஏஜண்டுகள் மூலம் விற்கிறார்கள். அவர்கள் பெரிய வியாபாரிகளுக்குக் கொடுக்கிறார்கள். பெரிய வியாபாரிகளிடமிருந்து சில்லறை வியாபாரிகள் நூலைப் பெறுகிறார்கள். வியாபாரிகள் தங்கள் லாபத்திலேயே கண்ணாக இருக்கிறார்கள். நூல் விலை ஏறிக்கொண்டிருக்கும் போது நூலை வாங்கி முடக்கி வைத்துக் கொள்கிறார்கள். பிறகு அதிக விலைக்கு விற்கிறார்கள். இதனால் பாதிக்கப் படுவது மிகச் சிறந்த கைத்தொழிலான பனியன் தொழில்; அதை நம்பி வாழும் ஆயிரக் கணக்கான ஏழை எளிய மக்கள்.

ஆகையால் நூல் கை மாறாமல் அடக்க விலைக்கு மில்லிலிருந்து நேரே பனியன் தொழில் உற்பத்தியாளர்களுக்குக் கிடைக்கும்படியான வழிவகைகள் செய்ய வேண்டும்.

படித்தவர்கள், பட்டம் பெற்றவர்கள் எல்லா

நிபுணர்களோ வேண்டியதில்லை. சின்னஞ்சிறு இயந்திரத்தின் உதவியைக் கொண்டே சிறு சிறு கைத் தொழிலாக இந்த ஊசிகளைச் செய்யலாம். திருப்பூர் பட்டணத்தில் மட்டும் சுமார் இரண்டு லட்சத்துக்கும் அதிகமான ரூபாய்கள் மதிப்புள்ள பனியன் நெய்யும் ஊசிகள் ஆண்டு தோறும் செலவாகின்றன என்று பனியன் தொழில் உற்பத்தியாளர்கள் கூறுகிறார்கள்.

பனியன் இயந்திரத்துக்கு வேண்டிய சில முக்கிய சாமான்கள் வெளி நாட்டிலிருந்து வர வேண்டியிருக்கிறது. ஒரு சிலருக்கு மட்டும் 'லைசென்ஸ்' வழங்கி அவர்கள்தான் இந்தியாவுக்கு இயந்திர சாமான்களை வரவழைக்கலாம் என்று சர்க்கார் உத்தரவு இட்டிருக்கிறார்களாம். அந்த வியாபாரிகள் கைத் தொழில் வளர்ச்சியில் ஊக்கமில்லாதவர்கள். தங்கள் லாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தொழில் நடத்துகிறார்கள். அதனால் அவசியமான சமயத்தில் அவசரமான சில சிறு சாமான்களை 'லைசென்ஸ்' பெற்றுள்ள வியாபாரிகள் வரவழைத்துக் கொடுப்பதில்லை. இதனால் சிறு மூலதனம் வைத்துப் பனியன் தொழில் நடத்துபவர்கள் தங்கள் யந்திரங்களை ஓட்ட முடியாமல் தவிக்கிறார்கள். ஆகவே இந்த ஏகபோக முறையையும் ஒழித்து இயந்திரத்தின் சொந்தக்காரர்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களைத் தாங்களே நேரில் வரவழைத்துக் கொள்ள சர்க்கார் வசதிகள் செய்து கொடுத்தால் சிறு கைத் தொழில் வளர்ச்சிக்கு எவ்வளவோ உபகாரமாக இருக்கும் என்று பனியன் உற்பத்தித் தொழிலில் கஷ்டப்பட்டு அநுபவித்த தொழில் அதிபர்கள் முறையிட்டார்கள்.

இப்போது பஞ்சாப் மாகாணத்தில் லூதியானாவில் உற்பத்தி செய்யும் பனியன் செய்யும் யந்திரங்களைத் தமிழ் நாட்டிலேயே செய்யலாம். சேலத்தில் உள்ள இரும்பையும் வடலூரில் உள்ள பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்தையும் உபயோகப் படுத்தினால் மிகக் குறைந்த விலையில் நவ நவமான சிறு இயந்திரங்களை நாமே உற்பத்தி செய்து கைத் தொழில் வளர்க்கலாம். இதன் மூலம் கோடிக்கணக்கான ரூபாய்களை வெளி நாடுகளுக்குச் செல்லாமல் தடுக்கலாம். வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்கலாம்.

திருப்பூரில் கைத் தொழில் மூலம் உற்பத்தியாகும் பனியன்கள் வட நாட்டில்தான் அதிகமாக வியாபாரம் ஆகிறது. பனியன் விலையில் கால் பாகத்துக்கு மேல் ரயில் சத்தத்துக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதனால் பனியன் தொழில் உற்பத்தி தடைப்படுகிறது. கைத்தறித் துணிகளுக்கு உள்ளதுபோல் ரயில் சத்தத்தில் சலுகைகள் கொடுத்தால் இன்னும் குறைந்த விலையில் ஏராளமான பனியன்களை உற்பத்தி செய்து மேலும் ஆயிரக்கணக்கான ஏழை எளியவர்களுக்குப் பிழைப்புக் கொடுக்கலாம் என்று

என்று சர்க்கார் உத்தரவு இட்டிருக்கிறார்களாம். அந்த வியாபாரிகள் கைத் தொழில் வளர்ச்சியில் ஊக்கமில்லாதவர்கள். தங்கள் லாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தொழில் நடத்துகிறார்கள். அதனால் அவசியமான சமயத்தில் அவசரமான சில சிறு சாமான்களை 'லைசென்ஸ்' பெற்றுள்ள வியாபாரிகள் வரவழைத்துக் கொடுப்பதில்லை. இதனால் சிறு மூலதனம் வைத்துப் பனியன் தொழில் நடத்துபவர்கள் தங்கள் யந்திரங்களை ஓட்ட முடியாமல் தவிக்கிறார்கள். ஆகவே இந்த ஏகபோக முறையையும் ஒழித்து இயந்திரத்தின் சொந்தக்காரர்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களைத் தாங்களே நேரில் வரவழைத்துக் கொள்ள சர்க்கார் வசதிகள் செய்து கொடுத்தால் சிறு கைத் தொழில் வளர்ச்சிக்கு எவ்வளவோ உபகாரமாக இருக்கும் என்று பனியன் உற்பத்தித்



பம்பாய் உயர்நீதி மன்றம் முன்னாள் சூப்பிரண்டான ஸ்ரீ ஆர். வி. நாதனின் குமாரத்தி செல்வி கமலோசனாவுக்கும், சுப்ரீம் கோர்ட் அட்வகேட் ஸ்ரீ பி. ஆர். நரசிம்மனின் குமாரர் செல்வன் ராம சேஷனுக்கும் பம்பாயில் உள்ள மணமகன் இல்லத்தில் செப்டம்பர் ஒன்பதாம் தேதி வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

இதனாலும் பனியன் தொழில் வளர்ச்சி தடைப்படுகிறது. தேசத்தின் நல்வாழ்வை விரும்பும் ஜனநாயக சர்க்கார், கைத் தொழில் வளர்ச்சியில் கவனம் செலுத்தி ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கும் சர்க்கார், இது போன்ற சிறு கைத் தொழில்களின் வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கலாம். தனி மனிதர்கள் உற்பத்தி செய்யும் பனியன்களை வெளி நாடுகளில் விற்பனைக்கு அனுப்புவதற்கோ, அல்லது உள் நாட்டிலேயே நியாயமான விலைகளுக்குப் பனியன்கள் கிடைக்கும்படி செய்வதற்கோ கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் அமைத்துக் கொடுத்தோ பனியன் தொழிலை அபிவிருத்தி செய்யலாம். பனியன்களின் தரத்தை உயர்த்தத் தொழில் நிபுணர்கள் கொண்ட ஆராய்ச்சிக் கூடங்கள் அமைக்கலாம். வளர்ந்து வரும் சுதந்திர பாரத நாட்டுக்கு உடனடியாக வேண்டியது இது போன்ற சிறு கைத் தொழில்களின் வளர்ச்சிதான் என்று சொல்ல வேண்டியதில்லை.

தமிழ்நாட்டில் திருப்பூரைப் பொறுத்த வரையில் பனியன் தொழில் மூலமாக அந்த ஊரை வளம் கொழிக்கும் ஊராக மாற்றி வளர்ப்பதற்கு வேண்டிய வழி இருக்கிறது.

தற்சமயம் திருப்பூரில் சுமார் 600 பனியன் பின்னும் இயந்திரங்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. சுமார் எழுபதினாயிரம் பனியன்கள் தினம்



பம்பாய் உயர்நீதி மன்றம் முன்னாள் சூப்பிரண்டான ஸ்ரீ ஆர். வி. நாதனின் குமாரத்தி செல்வி கமலோசனாவுக்கும், சுப்ரீம் கோர்ட் அட்வகேட் ஸ்ரீ பி. ஆர். நரசிம்மனின் குமாரர் செல்வன் ராம சேஷனுக்கும் பம்பாயில் உள்ள மணமகன் இல்லத்தில் செப்டம்பர் ஒன்பதாம் தேதி வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

இதனாலும் பனியன் தொழில் வளர்ச்சி தடைப்படு




1. பனியன் துணிகள் 'பிளீச்சிங் பவுடர்' கலந்த தண்ணீரில் சலவை செய்யப்படுகின்றன. 2. சலவை செய்யப்பட்ட பனியன் துணிகளைக் காய வைப்பதற்கென்றே அமைக்கப்பட்டுள்ள பந்தலுக்குள் வெய்யில் படாமல் காய்கின்றன. 3. சலவை செய்யப்பட்ட பனியன்களின் சுருக்கங்கள் நீங்குவதற்காகக் 'காலண்டர் மிஷினி'ல் விட்டு ரோல், ரோலாகச் சுற்றப்படுகிறது.

இன்னொரு இடத்துக்கு யந்திரத்தை மாற்றி வைத்துவிட்டால் மாற்றிய இடத்துக்கு மின்சாரம் கிடைப்பது குதிரைக் கொம்புதான். பண வசதியும் செல்வாக்கும் உள்ளவர்கள்தான் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்துக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடிகிறது என்று திருப்பூரில் உள்ள எல்லா பனியன் தொழிலதிபர்களும் உடைந்த உள்ளத்துடன் குறைப்படுகிறார்கள்.

இடம் விட்டு இடம் பெயர்த்து இயந்திரம் வைக்கப் போக மின்சார இலாகா காலத்தில் மின்சாரம் கொடுக்காமல் அதனால் கடன்பட்டுப் பனியன் இயந்திரத்தை விற்று நடுத் தெருவில் நிற்கும் ஏழை பனியன் உற்பத்தியாளர்களும் திருப்பூரில் இருக்கிறார்கள்.

பனியன் தொழிலுக்கு ஊக்கமளிக்கா விட்டாலும் அதற்குப் பாதகம் விளைவிக்காமலாவது இருக்கக் கூடாதா! என்று கேட்கிறார்கள். திருப்பூர் பனியன் உற்பத்தியாளர்களின் இந்த பரிதாபக் குரல் மின்சார இலாகா அதிகாரிகள் காதில் இதுவரை விழாவிட்டாலும் இனியாவது விழும் என்று எதிர்பார்க்கலாமா!

** ** **

திருப்பூரிலிருந்து திரும்பியவுடன் மதுரைமாநகரில் சிறந்த முறையில் பெரிய அளவில் பனியன் தொழில் நடந்து வருவதாக அறிந்து மதுரைக்குச் சென்றேன். மதுரையில் மிகப் பிரபல தொழிலதிபரான திரு கருமுத்துத் தியாகராஜ செட்டியார் அவர்களின் பேராதரவுடன், "மதுரை நிட்டிங் கம்பெனி" என்னும் பனியன் தொழில் ஸ்தாபனம் நடந்து வருகிறது. இந்தத் தொழில் ஸ்தாபனத்தை ஆரம்பித்தவர் ஸ்ரீ வி. எஸ். கே. முத்துராம ஐயர். எத்தனையோ கஷ்டத்தையும் நஷ்டத்தையும் பொருட்படுத்தாமல் இவர் தளரா முயற்சியுடன் பனியன் தொழிலை வளர்க்கப் பாடுபட்டார். "முயற்சி திருவினையாக்கும்" என்பது பொய்யாமொழி அல்லவா!

மதுரை நிட்டிங் கம்பெனி தொழிற்சாலை நூற்றுக் கணக்கான இயந்திரங்களையும் ஆயிரக் கணக்கான தொழிலாளர்களையும் கொண்ட மிகப் பெரிய ஆலைத் தொழிலாக நடந்து வருகிறது. நாள் ஒன்றுக்குச் சுமார் பன்னிரண்டாயிரம் பனியன்களை உற்பத்தி செய்கிறார்கள். மதுரை நிட்டிங் கம்பெனி பனியன்கள் அளவிலும் தரத்திலும் உலகப் புகழ் பெற்று விளங்குகின்றன. இந்தியாவிலேயே பெரிய பனியன் தொழில் ஸ்தாபனம் மதுரை நிட்டிங் கம்பெனிதான். அப்பேர்ப்பட்ட தொழில் ஸ்தாபனம் தமிழகத்தில் இருப்பது குறித்துத் தமிழ் மக்கள் பெருமைப்பட வேண்டும்.

** ** **

இடையிடையாக ஒரு விஷயம். சாதாரணமாகத் தொழில் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் வருவாய் ஒன்றையே கருதித் தொழில் நடத்துவார்கள். நஷ்டம் நஷ்டம் என்று கூறித் தொழிலை வளரவிட மாட்டார்கள். தொழிலாளர்களுக்குப் போதிய சம்பளம் அளிக்க மாட்டார்கள். இம்மாதிரியான பாதகச் செயல் மூலம் எத்தனையோ இடங்களில் எவ்வளவோ சிறு கைத்தொழில்கள் வளராமலே நசித்துப் போய் இருக்கின்றன.

திருப்பூர் பனியன் உற்பத்தியாளர்கள் இது விஷயத்தில் நேர்மை யுள்ளவர்கள். வருவாயை அதிகமாக எதிர்பாராமல் நாட்டில் தொழில் வளம் பெருக வேண்டும் என்ற நோக்கத்துடனேயே தொழில் நடத்தி வருகிறார்கள். பனியன் அணிவது ஒவ்வொருவருக்கும் அவசியம் என்ற அளவுக்கு அது வளர்ந்து வருகிறது. சாதாரண பனியனை அணிந்து கொண்டே நாகரிகமாக வாழ்ந்து வர முடியும் என்ற நிலைமை மக்கள் மத்தியில் உருவாகிக் கொண்டிருக்கிறது. அதனால் வளர்ந்து வரும் திருப்பூர் பனியன் தொழில் மூலம் தமிழ் நாடே மேன்மையடைய வழி இருக்கிறது! வளர்க பனியன் தொழில்; வாழ்க கைத்தொழில்கள்.

பட்டினி லாடையும் பஞ்சிலுடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்!
கட்டித் திரவியங்கள் கொண்டு வருவார்
காசினி வணிகருக் கவை கொடுப்போம்!

Grams: "CLOTH" Phone: 97

# The Dhanalakshmi Knitting Co.

KUMARAN ROAD, TIRUPUR




அழகிற்கும் நீடித்த உழைப்பிற்கும் எமது பனியன்கள், காலர் ஷர்ட், T-ஷர்ட்டுகள், ஸ்வெட்டர் ரகங்களை உபயோகியுங்கள்.

ஸ்ரீ தனலெக்ஷ்மி நிட்டிங் கம்பெனி

110/8, குமரன் ரோடு, திருப்பூர்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

எஸ். சித்தப்ப செட்டியார் (சிலோன்) லிட்., கொழும்பு & கண்டி

வி. எஸ். நாச்சிமுத்து செட்டியார், சிக்பேட்டை, பெங்களூர் சிடி



(PROP: MADURA ENVELOPE FACTORY, MATHURAI)

பேப்பர் & போர்டு வியாபாரம்

29, சுப்பையா முதலியார் தெரு, த. பெ. 29, கோயமுத்தூர்

நாங்கள் பனியன் தொழிலுக்கும், நூல் நூற்கும் மில்களுக்கும் தேவையான **Arvind Mills Straw Boards, Colour Grey Boards, Gujarat Paper Mills Grey Board, Rohtas Industries Grey Board, White & Colour Duplex Board**களும், மற்றும் கிராப்ட் பேப்பர்களும், கலர் கிளேஸ், கலர் கிராப்ட் பேப்பர்களும், அயல் நாடுகளிலிருந்து நேரடியாக இறக்குமதி செய்தும், சுதேசி மில்களிலிருந்து தருவித்தும், மொத்தமாகவும் சில்லறையாகவும் சகாயமான விலைக்கு விற்பனை செய்கிறோம்.

என்றும் தொழில் அதிபர்களுடைய தொடர்ந்த ஆதரவைக் கோருகிறோம்.

தலைமை ஆபீஸ்: மதுரை - கிளை ஆபீஸ்கள்: சென்னை, சிவகாசி, திருநெல்வேலி

★ ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் உள்ளத்தில் நிலைபெருன இடம் பெற்றிருந்த அன்பர்களில் பிராயத்திஞல் இளையவர் ஸ்ரீ எம். பி. சோமசுந்தரம் ('சோமு') பதினுறு ஆண்டுகளுக்கு முன்ஞல் மாணக்கரா யிருந்த காலத்திலேயே இலக்கியத் துறையில் பிரபலம் அடைந்தார். "ஆனந்த விகடன்" பத்திரிகை நடத்திய இரண்டு இலக்கியப் போட்டிகளில் வெற்றி பெற்று, பாரதியார் தங்கப் பதக்கமும் சிறுகதைப் போட்டியில் முதற் பரிசும் அடைந்தார். தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் சிறந்த தமிழ்க் கவிதை நூலுக்காக அளிக்கும் 500 ரூபாய் பரிசும் அவருக்குக் கிடைத்தது.

★ ஸ்ரீமான் எம். பி. சோமசுந்தரம் (சோமு) பல்லாண்டுகளாக அகில இந்திய ரேடியோவின் நிர்வாகத்தில் முக்கிய பங்கு வகித்து அரும்பணி ஆற்றி வந்திருக்கிருர். சங்கீதம், நாடகம், கதை, கிராம நிகழ்ச்சிகள், கவி அரங்கம், பேச்சு, விழா வர்ணனைகள் முதலிய பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டிருக்கிருர். இப்படி ரேடியோவின் பல துறைகளில் அனுபவப்பட்ட ஸ்ரீ சோமு வானெலி மண்டலத்தைப் பற்றித் தொடர்ந்து ஐந்து வாரங்கள் எழுதுவார். இதோ முதல் கட்டுரை:—

# காற்றினிலே வரும் கீதம்

சோமு

பொதுவாக ஒரு நாட்டின் பண்பாடும், மக்களின் உணர்வும் அந்த நாட்டின் கலைகளிலேயே பிரதிபலிக்கின்றன. எனவே, 'ஆய கலைகளை' வளர்க்கும் ஒலிபரப்பு ஸ்தாபனங்களை நாட்டின் கலா நிலையங்கள் என்றே சொல்வதுண்டு.

நாட்டின் பண்பாடும், நாட்டு மக்களின் இதய உணர்ச்சிகளும் மற்ற எல்லாக் கலைகளையும்விட இசையிலேதான் விசேஷமாகப் பிரதிபலிக்கின்றன. அதிலும் நமது பாரத நாட்டின் பண்பையும், பேருணர்வையும் அற்புதமாக வெளியிடுகிற கலை, நமது இந்திய சங்கீதந்தான். இதை யொட்டியே, அகில இந்தியா ரேடியோவின் ஒலிபரப்புக்களில் நூற்றுக்கு அறுபது பங்குக்கு மேல் இசை நிகழ்ச்சிகளாகவேநடைபெறுகின்றன.

இப்படிச் சொல்லும் போது, உடனே இசைத் தட்டுக்களின் நினைவு எழக்கூடும். "இசைத்தட்டுச் சங்கீதம்" என்ற பகுதிக்கு ரேடியோவில் முக்கியமான பங்கு இருப்பினும், ஒரு விஷயத்தை நாம் மறந்துவிடக் கூடாது. இசைத்தட்டு என்பது 'ரெடிமேட்' சட்டையைப் போல! ஏற்கெனவே பாடகர், வாத்தியக்காரர், ஒலியைப் பதிவு செய்கிறவர் எல்லாருமாகச் சேர்ந்து ஒத்துழைத்துச் செய்து முடித்துவிட்ட ஒரு காரியம் அது. புதிதாக அதில் நாம் நுழைப்பதற்கோ அல்லது ஆக்குவதற்கோ ஒன்றும் இல்லை. இதை வைத்துக் கேட்பதற்கு ஒரு கிராமபோன் போதும். பலர் கேட்க வேண்டுமென்ருல் அந்தக் கிராமபோனேடு ஒரு ஒலிபெருக்கியை இணைத்து விட்டால், முடிந்தது வேலை! ஒருபெரிய நிர்வாகம் அவசியமேயில்லை. லட்சக்கணக்கான பொருள் செலவில் ஏகப்பட்ட நிபுணர்களையும், சிப்பந்திகளையும் அமர்த்தி அவர்களைக் கொண்டு நடத்தி வரும் ஒரு பெரிய ஸ்தாபனத்தை நாம் வெறும் கிராமபோன் இயந்திரமாக மாற்றிவிடக் கூடாது! அந்த நிலையத்துக்கு என்று ஒரு வடிவமும், அதன் நிகழ்ச்சிகளுக்கு என்று ஒரு தனியான கலைப் பண்பும், உணர்ச்சியும்-ஏன்-ஒரு இதயமுமே, இருக்க வேண்டும். புதிது புதிதான இசைக் கற்பனைகளையும், மங்கிய மரபுகளுக்கு அளிக்க வேண்டிய புத்துயிரையும், அந்த ஸ்தாபனத்திடமிருந்து எதிர்பார்க்க நியாயம் உண்டு. இந்த வகையிலேதான் இசை யுலகுக்கு ரேடியோ செய்யும் சேவையை நாம் முக்கியமாகக் கணிக்க வேண்டும்.

இசை யென்றதும், மரபு வழி வந்த இசை என்றும், நவீன இசை என்றும், மெல்லிசை என்றும் எத்தனையோ நாமங்கள் சொல்லக் கேட்கிருேம். எந்த நாமம், எந்தப் பெயராயிருந்தால் என்ன? நல்ல இசையாக இருக்க வேண்டும் என்பதே முக்கியம்!

ஆனல், "நல்லது" எது என்பதைத் திட்டவட்டமாக வர்ணித்துவிட முடியாது. இனிமையாக யிருப்பது மட்டும் நல்ல சங்கீதமாக ஆகி விடுமா? தரம் என்றும் ஒன்று இருக்கிறதே! அதிலும் நாட்டுக்குச் சேவை செய்கிற ஒரு அரசாங்க இலாகாவாக நமது ரேடியோ இருப்பதனல், நிச்சயம் தரம் உள்ளதாகவும், பயன் உள்ளதாகவும் கூடிய நிகழ்ச்சிகளையே இந்த ஸ்தாபனத்திலிருந்து எதிர்பார்க்க நமக்கு உரிமை உண்டு. இவ்வகையில் ரேடியோ இதுவரை இசைத்துறையிலே என்ன செய்திருக்கிறது?

சாதாரணமாக முன்பெல்லாம் பெரிய வித்வான்களுடைய பாட்டோ அல்லது வாத்ய இசையோ, இல்லை, பெரிய ஊர்வல நாதஸ்வரக் கச்சேரியோ கேட்க வேண்டும் என்ருல், கோவில் திருவிழாக்களுக்கும், கல்யாண வீடுகளுக்குந்தான் போக வேண்டும். இல்லை, சபை விழாக்களுக்குப் போக வேண்டும். ஆனல் இவை யெல்லாம் ஆண்டு முழுவதும் நடைபெறுமா? இல்லை. ஆனல், இப்பொழுது ரேடியோ வந்த பிறகோ?—சங்கீத வித்வான்கள் பலரும் நம்முடைய வீட்டு ரேடியோப் பெட்டிக் குள்ளேயே இருக்கிருர்கள். 'வானெலி'யைப் புரட்ட



**வாரந்தோறும் சனிக்கிழமை இரவு புது டில்லியிலிருந்து ஒலி பரப்பப்படும் தேசிய இசை நிகழ்ச்சியில் கலந்து கொண்டு ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் செப்டம்பர் 11உ இரவு அற்புதமான கச்சேரி செய்தார்.**

வேண்டியது, சுவிட்சைப் போட வேண்டியது;—நம்முடைய வீட்டுக்கு உள்ளேயே உயர்தரக் கச்சேரி கேட்கலாம்.

சங்கீத வித்வான்கள் விஷயத்திலும் ரேடியோவினால் ஒரு சௌகரியம் ஏற்பட்டிருக்கிறது. கல்யாணங்களும் விழாக்களும் வருஷம் முழுதும் நடக்குமா? நடந்தாலும் எல்லா வித்வான்களும் எப்பொழுதும் கலந்து கொள்ள முடியுமா? அதிலும் எடுத்ததுமே இளம் வித்வான்களை எத்தனைபேர் கூப்பிடுவார்கள்? இந்தக் குறையை ஒரு பெரும் அளவில் ரேடியோ பூர்த்தி செய்திருக்கிறது. கடந்த பதினாறு வருஷ காலத்தில் ரேடியோ நிகழ்ச்சிகளின் மூலம் முன்னணிக்கு வந்ததாகப் பெருமையோடு கூறிக் கொள்ளும் வித்வான்களும், சாகித்ய கர்த்தாக்களும் ஒரு சிலராவது நிச்சயம் நம்மிடையே இருக்கிறார்கள். சிலர் இந்த ஈடுபாடு காரணமாக, ரேடியோத் தேதியில் வேறு கச்சேரிகள் வந்தாலுங்கூட, ஆதாயத்தைப் பொருட்படுத்தாமல் ரேடியோவுக்கே வந்து ஒலி பரப்பிய சந்தர்ப்பங்களும் உண்டு.

ரேடியோவினால் ஏற்பட்ட இன்னொரு முக்கிய வளர்ச்சி நமது சாகித்யங்களின் விஷயத்திலாகும். வழக்கத்திலிருந்து மறைந்தும் மங்கியும் போன சில அருமையான பழம் கீர்த்தனங்களும், பதங்களும், ஒலி பரப்பு மூலம் புத்துயிரும் புதிய வேகமும் அடைந்திருக்கின்றன.

நமது சங்கீத-பரம்பரையும் இசையின் மரபும் தாழ்ந்து விடாமல் பேணி வளர்க்கும் முறையிலே, நேஷனல் புரோகிராம் என்று சொல்லும் அகில இந்திய நிகழ்ச்சிகள் சனிக்கிழமைகளில் நடைபெறுகின்றன. இந்தக் கச்சேரிகளின் நோக்கம் நமது இசைமரபின் எழிலும், அதன் மகத்தான பெருமையும், அது ஆளப்படுகிற சிறப்பான முறையும் நன்கு துலங்க வேண்டும் என்பதே.

பூர்விகமான இந்த இசைப் பணியைத் தவிர, 'மெல்லிசை' என்ற வகையில் சமீபத்தில் பல புதிய முயற்சிகள் நடை பெற்று வருகின்றன. எளிமையான சொற்களும், எளிய யாப்பும், வண்ண வடிவமும் கொண்ட இசைப் பாடல்கள் பல தெலுங்கிலும் தமிழிலும் இந்த நிகழ்ச்சிகளில் சென்னையிலிருந்து ஒலிபரப்பாகி வருகின்றன. எதிர்காலத்தில் சங்கீத மறு மலர்ச்சியின் வளர்ச்சிக்கு இந்த நிகழ்ச்சிகள் பெரிதும் துணை செய்யும் என்று எண்ண இடமுண்டு.

ரேடியோவினால் முக்கியமாக வளர்ச்சி பெற்ற மற்றொன்று வாத்ய கோஷ்டியாகும். தென்னாட்டு இசையில் "பல்லிய முறை" என்பதைத் தமிழ் இலக்கியங்களிலே பார்க்கிறோம். என்றாலும், இக்காலத்திய கோஷ்டி வாத்யமுறை வளர்ச்சி பெற்றதற்குத் திரைப் படங்களும் ரேடியோவுமே முக்கிய காரணமாகும். ரேடியோவைப் பொறுத்த மட்டில், பெரிய நிலையங்களில் எல்லாம் வாத்யங்களுக்கு என்றே தனியான வித்வான்கள் இருந்து, அன்றாடம் புதிது புதிதானகோஷ்டி இசை நிகழ்ச்சிகளை வழங்கி வருகிறார்கள். சங்கீத ஒலியை எழுத்திலே எழுதி, அதைப் பார்த்துக் கொண்டே பல வாத்ய வித்வான்களும் ஒன்று சேர்ந்து வாசிக்கிற இந்த முறை, ரேடியோவினால் பெரிதும் வளர்ச்சி அடைந்திருக்கிறது. இந்தக் கோஷ்டியார் கீர்த்தனங்கள் வாசிப்பதோடு, தனியான இசைக் கற்பனைகளையும், கதை நிகழ்ச்சிகளையுமே சொல்லின்றி இசைக் கருவிகளின் துணையினாலேயே நடத்துகிறார்கள்.

ரேடியோவின் இசை இலாக்கா இம்மாதிரி நிகழ்ச்சிகளை அமைப்பதற்கும், புதிது புதிதாக வித்வான்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் உதவி செய்ய என்றே ஆலோசனை சபைகள் இருக்கின்றன. இந்த ஆலோசனை சபைகளின் ஒத்துழைப்பினால் நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்தப் பாடுபடுகிறார்கள். இந்த முயற்சியில் குறைகள் நேரலாம். ஆனால் அப்படி நேரும்போது அந்தக் குறைகளையும், அவற்றை நீக்குவதற்கான காரிய சாத்தியமான யோசனைகளையும், நேயர்கள் நிர்வாகிகளுக்குத் தெரிவிக்க வேண்டும்.

ரேடியோ என்பது பல்வேறுபட்ட மன இயல்புகளைக் கொண்ட பல்லாயிரக் கணக்கான நேயர்களையும் ஒவ்வொரு வகையில் திருப்தி செய்ய வேண்டிய ஒரு பொது ஸ்தாபனம். எல்லா நிகழ்ச்சிகளும் எல்லாருக்கும் எப்பொழுதும் பிடித்திருக்குமாறு அமைய முடியாது. ஆனால் ஒவ்வொரு நேயருக்கும் பிடிக்கக் கூடிய ஒரொரு நிகழ்ச்சி நிச்சயம் இருக்கவேண்டும் என்பது மிக மிக அவசியம். இந்த அவசியத்தை நிறைவேற்றுவதிலே தான் ரேடியோவின் வெற்றி இருக்கிறது.

# குருவிக் குடிசை



தில்லைவாசி

சித்திரை மாதம் பிறந்து விட்டது. பள்ளிக் கூடத்துக்குக் கோடை விடுமுறை.

மூத்துவுக்கு ஒரே குதூகலம். சுற்றியலைந்து விளையாடலாம்; ஊர்ப் பயணம் போகலாம்; தாத்தாவின் கிராமத்துக்கும் போகலாம். எவ்வளவு நிம்மதியாகப் பொழுது போகும்!

மூத்து பன்னிரண்டு வயதுச் சிறுவன். அந்த ஆண்டு மூன்றுவது பாரத்தில் பரீட்சை எழுதியிருந்தான். கெட்டிக்காரப் பயல் அவன். பாஸாகும் என்பதைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை.

அவன் கவலையெல்லாம் கோடை விடுமுறையை எப்படிக் கழிப்பது என்பது பற்றித்தான். உள்ளூரிலேயே வீணாகச் சுற்றியலைந்து திரிய அவனுக்கு இஷ்டமில்லை.

ஆமாம், தாத்தாவின் கிராமம் எப்படியிருக்கும்? மூத்து அம்மாவிடம் ஓடினான். "அம்மா, தாத்தாவின் கிராமத்துக்கு நான் போனதில்லையே! நீயும் அழைத்துப் போகவில்லை. இந்த விடுமுறையில் நான் அங்குதான் போகப் போகிறேன்" என்றான்.

அவன் தாய் வள்ளியம்மைக்கு வாய் எல்லாம் பல்லாகி விட்டது. தன் அருமை மகன் அவன் தாத்தா ஊருக்குப் போக விழைகிறான்! இப்போது தான் முதல் தடவையாக! அதுவும் அவனுக்கு நினைவு தெரிந்த பிறகு. அவன் பாட்டி பொன்னி பேரனை வைத்துக் கொஞ்சுவாள்; தன் அன்பு மழையை அவன் மீது பொழிவாள்; கண்ணான பேரனைக் கருத்துடன் பார்த்துக் கொள்வாள்! மகனின் ஆவலைப் பூர்த்தி செய்யவே விழைந்தாள்.

"கண்ணு! நீ அங்கே போனால், அதிசயப் பொருள்களையும் காணலாம்" என்றாள். என்ன அதிசயம் என்று மகனும் கேட்கவில்லை; தாயும் அதைச் சொல்லவில்லை.

சிங்காரம் என்பவர்தான் மூத்துவின் தாத்தா. அவர் பணக்காரர்; கிராமத்தில் நல்ல சொத்துக்காரர். தம் சுய முயற்சியிலேயே முன்னுக்கு வந்தவர். பூமிதேவியை வணங்கினர். உழைப்பில் கவனம் செலுத்தினர். தகப்பன் விட்டுப்போன இரு காணி நிலத்தில் சோர்வில்லாது வேலை செய்தார். மண்ணைக் கொத்தி வளம் படுத்தினர். பொன்னைத் தானிய மணியை வரையிலாது வழங்கும் நிலமாக்கி விட்டார். உழைப்பு வேண்டிய பொருளைக் கொடுத்தது. தம் முயற்சியில் நிலமும் வாங்கினர். விவசாயத்தில் கருத்தைச் செலவழித்தார். அவர் தொட்டது துலங்கியது. சிறுகச் சிறுகச் சம்பாதித்தியத்தைப் போட்டு அரை காணி, ஒரு காணி என்று மேலும் நிலங்களாக வாங்கிக் கொண்டிருந்தார். இப்போது அவருக்கு இருபது காணி நிலம். கிராமத்தில் அழகான பெரிய கல் வீடு வேறு.

சிங்காரத்துக்கு ஒரே குழந்தை; அதுவும் பெண். அவள்தான் வள்ளியம்மை! மூத்துவின் அருமை அன்னை!

மகளிடம் சிங்காரத்துக்கும் அவர் மனைவி பொன்னிக்கும் சொல்ல முடியாத அன்பு! ஒரே அருமைப் பெண் இல்லையா!

வள்ளியம்மையை மூப்பது மைலுக்கு அப்பாலிருந்த சிறிய பட்டணத்தில் படித்து, உத்தியோகத்திலிருக்கும் மாப்பிள்ளையாகப் பார்த்துக் கொடுத்திருந்தார்கள். வள்ளியின் கணவன் வடிவேலுவுக்குத் தாலுக்கா ஆபீஸில் குமாஸ்தா உத்தியோகம். ஏதோ சமயத்துக்குச் சமயம் கிடைக்கும் மாமனர் வீட்டு உதவியினல் மானத்துடன் அவனல் வாழ முடிந்தது. அவ்வளவுதான்.

வள்ளியம்மைக்குப் பெற்றோர்களைப் பார்க்கக் கிராமத்துக்குப் போக நிமித்தமே ஏற்படவில்லை. சிங்காரமும் பொன்னியும் அடிக்கடி வந்து தங்கள் அருமை மகளைப் பார்த்து விட்டுப் போவார்கள். அதுவும் பேரன் மூத்து பிறந்த பின் அவர்கள் அப்படி வருவது அதிகமாகவே ஆகி விட்டது.

மூத்து பிறந்த புதிதில், கைக்குழந்தையோடு ஒரு முறை அவள் கிராமத்துக்குப் போயிருப்பாள்.

அவ்வளவுதான். இப்போது மகனின் தூண்டுதலி ஞல் மீண்டும் ஒருமுறை போகிருள்!

"பிள்ளையைக் கொண்டு விட்டு, இரண்டு நாட்கள் இருந்து விட்டு வந்து விடுகிறேன்" என்று கணவனிடம் சொல்லிய பின் வள்ளியம்மை ஊருக்குக் கிளம்பி விட்டாள்.

பஸ் பிரயாணம்! நகரத்து எல்லையைத் தாண்டிக் கிராமச் சூழ்நிலையில் பஸ் ஓடிக் கொண்டிருந்தது. சாலையின் இரு பக்கமும் பசுமையான மரங்கள்! இயற்கைக் காட்சிகள் முத்துவுக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தன.

கடைசியில் தாத்தாவின் கிராமமாகிய அந்த அழகிய ஊருக்கே வந்து விட்டான் முத்து.

தாத்தாவும் பாட்டியும் முத்துவை அன்போடு அணைத்துக் கொண்டனர்.

இந்த உபசரிப்பு முத்துவுக்குப் பிரமிப்பை ஊட்டியது. அவனுக்குத் தலைகால் புரியவில்லை. குளுமையான கிராமச் சூழ்நிலைக்கு வந்திருந்தது வெகு ஆனந்தமாகவே யிருந்தது.

வள்ளியம்மை மகனை அங்கேயே விடுத்து ஊருக்குத் திரும்பி விட்டாள்.

முத்து தாத்தாவோடு எங்கும் போனுன். சிங்காரமும் முகம் கோணமல் எல்லா இடங்களுக்கும் பேரனை அழைத்துப் போனுர். பார்ப்பவர்களிடமெல்லாம் "இவன் தான் என்னுடைய பேரன், கெட்டிக்காரப் பயல்" என்று பிரமாதமாகப் பெருமையடித்துக் கொள்வார்.

முத்து தாத்தாவோடு வயல் வெளிக்குப் போனுன். தோப்பு துரவுக்குப் போனுன்; குளத்து மேட்டுக்குப் போனுன்; அவன் போகாத இடமே பாக்கி யில்லை. புல் தரையில் நடந்தான். மணலில் துழாவி விளையாடினுன். குளத்தில் குளித்தான். ஆற்றுக்குச் சில சமயம் போய்க் குளித்து விட்டு வந்தான். அவனுக்குக் கிராமம் ஒரு இன்ப லோகமாகவே யிருந்தது.

சிங்காரம் பேரனுக்கு இளநீர் வெட்டிக்கொடுத்தார். நுங்கவை மாம்பழங்கள் கொண்டு வந்து கொடுத்தார். இன்னும் ஏதேதோ முத்துவுக்குப் பேரன்புடன் கொடுத்தார். அவனும் சளைக்காமல் உண்டான். தாத்தாவை நெஞ்சார வாழ்த்தினுன். தாத்தாவோடு இப்படியே இருந்து விட வேண்டும் என்று கூட அவன் எண்ணி விட்டான்.

சிங்காரம் அவர் வீட்டுக்கு அருகில் ஒரு குடிசையைப் பூட்டி வைத்திருந்தார். அவசியமான சமயத்தில்தான் அதை அவர் திறப்பது வழக்கம். இதை வருஷத்துக்கு ஒரு முறை புதுப்பித்து விடுவார் அவர்.

குடிசை பார்ப்பதற்குப் பரிசுத்தத்துடன் அழகுற விளங்கியது.

ஒருநாள் முத்து "தாத்தா! அங்கு குடிசையில் என்ன இருக்கு! என்னை அழைத்துக் கொண்டு போய்க் காட்ட மாட்டீரா!" என்று கேட்டான்.

"உனக்குக் காட்டாமல் இருப்பேனடா, கண்ணு" என்று அப்பொழுதே அவனை அங்கு அழைத்துப் போனுர் சிங்காரம்.

குடிசையினுள்ளே கீழேயும், மேலேயும் எதுவுமிருக்கவில்லை. அங்கே சுவரில் ஆணியில் ஒரு கோட்டு மாட்டித் தொங்கிக் கொண்டிருந்தது. அது காக்கி நிறக் கோட்டு! பழங் காலத்துக் கோட்டு என்பது அதைப் பார்த்ததுமே தெரிந்தது; மக்கி மடிசலாகி இருந்தது!

முத்து கிட்ட நெருங்கி, கோட்டை உற்றுக் கவனித்தான். அங்கே ஒரு அதிசயம் அவனுக்குக் காத்திருந்தது. அதனுடைய பெரிய கீழ்ப் பையில் தூக படிந்திருந்தது. பஞ்சு, தேங்காய் நார், சிறு சிறு குச்சிகள் அதில் தலையை நீட்டிக் கொண்டிருந்தவை அவன் கவனத்தைக் கவர்ந்தன. அது என்ன! குருவிக் கூடுபோல் தோன்றியது. பையில் குருவிக்கூடா! ஆச்சரியம்தான்!

முத்து கையை விட்டு அவைகளை வெளியில் இழுத்துவிட முயன்ருன்.

"முத்து! அதை ஒன்றும் செய்யாதே! இது குருவிக்கூடு. கலைத்து விடாதே!" என்ருர் தாத்தா.

"குருவிக்கூடு ஏன் இங்கே இருக்க வேணும்! சொன்னுல்தான் நான் வருவேன்!" என்று பிடிவாதம் செய்தான் முத்து.

"சரி சொல்கிறேன்" என்று தாத்தா குருவிக் கதையைத் தொடர்ந்தார் :—

"முத்து நான் சொல்லப் போவது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முந்திய சம்பவம். அப்போது உன் அம்மா வள்ளியம்மை கைக் குழந்தை!......இப்போது நடந்து முடிந்ததே யுத்தம், இது இரண்டாவது யுத்தம். இதற்கு முந்தியே ஒரு யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் நானும் சிப்பாயாக இருந்திருக்கிறேன்.

"சண்டை நாலு வருஷங்கள் நடந்தது. யுத்தம் முடிந்து ஊருக்குத் திரும்பினேன். கால், கை எதுவும் பங்கப்படாமல் திரும்பியது என் அதிர்ஷ்டம்! யுத்த சேவையை மெச்சி ஆயிரம் ரூபாய் கையில் கொடுத்தார்கள். பட்டாளத்துக்காரன் என்ற பெருமை பிடிபட வில்லை எனக்கு. ராணுவ உடையை உடுத்திக் கொண்டு 'தாட், பூட்' என்று ஊர் சுற்றி வருவதுதான் வேலை. பட்டாளத்துக்காரனுக்கு ஆபீஸ் அறை வேண்டாமா! குடிசையில் முடியவில்லை. பக்கத்திலேயே இந்தக் குடிசையைக் கட்டிப் போட்டேன். இதுதான் ஓழிந்த வேளையில் தங்குமிடம்; ஆபீஸ் அறை எல்லாமாயிற்று. இங்கு பட்டாளத்து உடுப்பு, முதலிய ராணுவத்திலிருந்து கொண்டு வந்த பொருள்களை வைத்திருப்பேன். ஆணியில் ராணுவக் கோட்டைத் தொங்க விடுவேன். இங்கு என்னைத் தவிர வேறு யாரையும் வர விடுவதில்லை.

"கொஞ்ச நாள் போனதும், உன் பாட்டி பொன்னியைக் கல்யாணம் கட்டிக் கொண்டேன்! அனுல் கிராமத்தில் இருக்கவே எனக்குப் பிடிக்கவில்லை. பட்டாளத்துச் சேவைக்காரன்களுக்குச் சர்க்காரிலே வேலை கொடுக்கிருர்கள் என்று கேள்விப்பட்டேன். எனக்கும் சர்க்கார் வேலைக்காரனுகி இந்த ஊரைவிட்டே போய்ப் பட்டணத்தில் இருந்துவிட ஆசை உண்டாகி விட்டது. எனக்குப் படிப்பில்லை. தற்குறிப் பேர்வழி. என்ன உத்தியோகம் கொடுப்பார்கள்!

"டவாலிச் சேவகன் உத்தியோகத்துக்கு மனு எழுதி ஜில்லாக் கலெக்டருக்குப் போட்டேன். ஒரு வருஷமாகியும் கிணற்றில் போட்ட கல்போல பதிலே இல்லை. நானும் வேலைவெட்டி பார்க்காமல் டப்பமாக ஊர் சுற்றி வந்தேன். என் அப்பா மட்டும் அடிக்கடி 'தம்பி! சுழனி வேலையைப் பாரு. அடிமை உத்தியோகத்தில் ஆசை வைக்காதே. கழம்பைத் திருத்தினுல் கரும்பு விளையும்! மண்ணை வளப்படுத்தினுல் பொன்னுகப் பூக்கும்! வயல் வெளிக்கு வந்து வேலையைப் பாரடா' என்பார். எனக்கு ஏனே அவர் வார்த்தைகளைக் கேட்கத் தோன்றவில்லை. அவ்வளவு தலைக்கிறுக்கு எனக்கு. சர்க்கார் வேலை பார்க்கும் ஆசை விடவில்லை. தினமும் தபால்கார ஐயாவரவை எதிர்பார்ப்பதுதான் என் வேலை.

"இதற்குள் இந்தப் பொன்னியம்மா உன் வள்ளி, உன் அம்மாவைப் பெற்று போட்டாள்.







எங்கள் பேக்டரியில் இண்டாந்தரின் நெப்தால் சல்பர் முதலிய ரகங்களில் 40, 60, 80, 100 நெ. நூல்களுக்கு கண் கவரும் கலர்களில் உத்திரவாதமான சாயம் போட்டுத் தருகிறோம்.

வெளியூர் ஆர்டர்கள் இங்கு உடனுக்குடன் கவனிக்கப்படும்.

சென்னை மாகாண நெசவாளர் கூட்டுறவு சொசைட்டி லிமிடெட்டாரின் அங்கீகாரம் பெற்றது

பூரண உரிமையாளர்:

**எல். பச்சமுத்து**

# ஸ்ரீ முருகன் & கோ

டையிங் பாக்டரி

**பத்மாவதிபுரம், திருப்பூர்**







இப்போது குழந்தை ஆசையும் கொஞ்சம் என்னைப் பற்றிக் கொண்டது. இருந்தாலும் பழைய போக்கு எனக்கு மாறவில்லை !

"அப்போது உன் தாய் வள்ளியம்மை மூன்று மாதக் குழந்தை! முன்போல நான் ஊர் சுற்றப் போவதில்லை. ராணுவக் கோட்டு ஆணியில் தொங்க விட்டது அப்படியே தொங்கியது.

"நிலைமை இப்படி வந்திருந்த போதுதான் தபால்கார ஐயா வீடு தேடி வந்தார். கலெக்டர் உத்தரவைக் கொண்ட ஒரு கவரைக் கொடுத்தார். அவரையே பிரித்துப் படிக்கச் சொன்னேன். அதிலிருந்த விஷயம் இதுதான். 'நீ இரண்டு நாட்களுக்குள் ராணுவ சேவை செய்ததற்கு அத்தாட்சிகளுடன் நேரில் வரவேண்டியது. அதைப் பார்த்த பின்னரே வேலைக்கு உத்தரவிடப்படும்.'

"என் உற்சாகம் கரை புரண்டு ஓடியது. வள்ளியம்மை பிறந்த அதிர்ஷ்டம்தான் இது என்று மனது எண்ணியது. பொன்னியும் அப்படித்தான் சொன்னாள். அன்றைக்கே கலெக்டர் துரையைப் போய்ப் பார்த்து விடுவதென்று முடிவு கட்டி விட்டேன். இதற்கான முயற்சியில் ஈடுபட்டேன்.

"முதலில் குடிசையைப் போய்த் திறந்தேன். அங்கே தானே ராணுவ அதிகாரி கொடுத்த 'சர்டிபிகேட்டும்' ஆணியில் தொங்கிய கோட்டுப் பையிலிருந்தது. இதை எடுத்து வைத்துக் கொண்டல்லவா மற்ற முயற்சியில் ஈடுபட வேணும்!

"முத்து! இப்பொழுதுதான் அதிசயம்! நான் எந்தப் பையில் ராணுவ சர்டிபிகேட்டை வைத்திருந்தேனோ, அதே பையில்தான் சிட்டுக்குருவி கூடு கட்டி விட்டது. பையில் கையை விட்டேன். குருவிக் குஞ்சுகள் தட்டுப்பட்டன. அப்படியே கோட்டை வெளிச்சத்தில் கொண்டு போய்ப் பார்த்தேன். அப்பொழுதுதான் முட்டையிலிருந்து வெளி வந்தவை மூன்று குஞ்சுகள் இருந்தன. அவைகளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. எனக்கு கோட்டும் வேண்டும்; சர்டிபிகேட்டும் வேண்டும். கோட்டு வேண்டாம் என்றாலும், கூட்டைக் கலைக்காமல், குஞ்சுகளை வெளியில் எடுத்துப் போடாமல் சர்டிபிகேட்டை எடுக்க முடியாது. நான் உத்தியோகத்துக்குப் போக வேண்டுமென்றால், இந்தக் குஞ்சுகளுக்கு உடனே மரணச் சீட்டுக் கொடுத்தாக வேண்டும். என் சுயநலத்தில் அப்படிச் செய்யத்தான் நினைத்தேன். அதற்குள் பொன்னி அங்கு வந்தாள்.

"அவளும் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு, குருவிக் குஞ்சுகளைப் பார்த்தாள்; 'நல்ல வேடிக்கை' என்று அதிசயித்தாள். என் சங்கடத்தையும் அதைத் தீர்க்க நான் கொண்டிருந்த யோசனையையும் சொன்னேன். இதற்குள் தாய்க் குருவி வந்து விட்டது. அதற்குப் பயம். இங்கும் அங்குமாகப் போய் உட்கார்ந்தது. பரிதாபக் குரலில் 'கிரீச்'சிட்டது. சுற்றிச் சுற்றிப் பறந்த வண்ணமிருந்தது.

"பொன்னி திடுக்கிட்டாள். அவளுக்கு எப்பொழுதுமே இளகிய மனசு; இரக்க சுபாவம்! 'ஐயோ, இந்தப் பாதகத்தை நீங்கள் செய்ய வேணும். குஞ்சுகளைப் பார்க்கவே சகிக்கவில்லை. அதோ தாய்க் குருவியும் கதறுகிறது. பச்சிளம் குஞ்சுகளைத் தூக்கி யெறிந்து, கொலை பாதகத்துக்கு ஆளாக வேணும்' என்று குருவிக்கும் குஞ்சுகளுக்கும் பரிந்து பேசினாள் பொன்னி.

"அவள் இடுப்பில் கள்ளங் கபடமில்லாப் பொக்கை வாய்ப் புன் சிரிப்புடன், தங்க விக்கிரமெனக் காட்சி யளித்த அருமைக் கண்மணி வள்ளியம்மை என் கொடிய சித்தத்தை மாற்றி விட்டாள். கூட்டைக் கலைத்து, ராணுவ சர்டிபிகேட்டை எடுக்கும் யோசனையையும் கை நழுவ விட்டேன்.

"'பொன்னி! உன் மறு யோசனை என்ன! சர்க்கார் வேலைக்குப் போவது எப்படி!' என்று என் கவலையை மறுமுறையும் அவளிடம் சொன்னேன். அவள் தன் தலையைத் தோள்பட்டையில் வேகமாக இடித்து எனக்குக் கோணங்கி காட்டினாள். 'நல்ல பைத்தியம் போங்கள். இந்த டவாலி உத்தியோகமில்லா விட்டால் பிழைக்க மாட்டார்களா!' அந்த வேலை வேணும். பேசாமல் களை யெடுத்து, காடு திருத்தி காட்டு ராஜாவாக ஆகி, இங்கேயே ஆட்சியைச் செலுத்துங்கள்" என்றாள்.

"என் கோட்டையும் குடிசையையும் குருவிக்கும், குருவிக் குஞ்சுகளுக்கும் சுதந்திரமாக விட்டு விட்டேன். அதன் பிறகு அவைகளின் வழிக்கு நான் போகவில்லை.

"கையோடு கொண்டு வந்த ஆயிரம் ரூபாயில் செலவழித்தது போக, மீதி எண்ணூறு ரூபாயிருந்தது. இந்தப் பணத்தைக் கொண்டு ஒரு ஐந்து காணி கரம்புப் பூமியை வாங்கினேன். கரம்பை, மண் எடுத்து, பக்குவப்படுத்தி, விளை நிலமாக்கி விட்டேன். இதற்குப் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. கரம்பு கழனியாகிக் கனியென நெல் தந்தது. கிடைத்த மகசூலைச் சாப்பிட்டது போக மிஞ்சியதில் கொஞ்சம் கொஞ்சமாக நிலம் வாங்கவே உபயோகித்தேன்.

"இன்னொன்று சொல்ல மறந்து விட்டேனே, முத்து! ஆறு மாசத்துக்குப் பிறகு குடிசையில் போய்ப் பார்த்தபோது, குருவிகளோ, குஞ்சுகளோ அங்கில்லை. குஞ்சுகளுக்குப் பறக்க முடிந்தபோது, அவைகள் பறந்து எங்கோ பத்திரமான

## ஸ்ரீ ரமண்லால் வஸந்தலால் தேசாய்

பிரபல குஜராத்திக் கதாசிரியர் ஸ்ரீ ரமண்லால் வஸந்தலால் தேசாய் அவர்கள் செப்டம்பர் மாதம் 20-ம் தேதி காலமானார் என்னும் செய்தி கேட்டு வருந்துகிறோம். ஸ்ரீ தேசாய் அவர்கள் பல நவீனங்களும், கதைகளும், கட்டுரைகளும் குஜராத்தி மொழியில் எழுதி மிகவும் புகழ் பெற்றவர்; 'குஜராத்தின் டால்ஸ்டாய்' என்று பெயரும் பெற்றவர். 'கல்கி' நேயர்களுக்கு ஸ்ரீ தேசாய் அவர்களின் மனோரமா, கோகிலா ஆகிய நூல்கள் அறிமுக மானவைகளே.

ஸ்ரீ தேசாய் அவர்கள் சென்ற ஆண்டு ரஷ்யாவுக்குச் சென்ற கலாசார தூது கோஷ்டியில் அங்கம் வகித்தவர். கடைசியாக ரஷ்யப் பிரயாண அநுபவங்கள் என்ற ஒரு அரிய நூலும் அவர்கள் இயற்றியுள்ளார்கள். காலஞ்சென்ற ஸ்ரீ தேசாயின் குடும்பத்தாருக்கு நம் அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.




**K K C** மார்க் பனியன்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை
நேர்த்தியாகவும் உறுதியாகவும் உழைக்கக் கூடியவை
அணிந்து கொள்பவர்களுக்கு அழகு கொடுப்பவை
யாவரும் வாங்கும் வண்ணம் மிகக் குறைந்த விலை

எமது விசேஷ தயாரிப்புகள்

★ ஸாண்டோ ★ V நெக் ★ R நெக்

★ F நெக் ★ காலர் ஷர்ட் ★ டிராயர்




# காதர் நிட்டிங் கம்பெனி



புதுக்கோட்டையிலிருந்து 26 மைல் தூரத்திலிருக்கும் வலையப்பட்டி என்னும் ஊரில் சென்ற 13-ந் தேதி கவர்னர் ஸ்ரீ பிரகாசா பாப்பாயி ஆச்சி ஆஸ்பத்திரியைத் திறந்து வைத்தார். எழுபதினாயிரம் ரூபாயில் திரு ந. ராம. அ. பெரி. பெரியகருப்பன் செட்டியார் அவர்கள் தமது காலஞ்சென்ற மனைவியின் ஞாபகார்த்தமாக கட்டியிருக்கிறார். ஆஸ்பத்திரியின் திறப்பு விழாவுக்கு டாக்டர் அழகப்ப செட்டியார் தலைமை வகித்தார். நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த பல பிரமுகர்கள் வைபவத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தனர். பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் வைத்திய உதவி அளிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் திறக்கப்பட்டுள்ள இந்த ஆஸ்பத்திரியில் எட்டு படுக்கைகளும், நான்கு விசேஷ வார்டுகளும், நான்கு குடும்பங்களும் வசிக்க போதிய இட வசதியும் அடைக்கப்பட்டிருக்கிறது. மேற்படி விழாவின் சில காட்சிகளை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

இடத்துக்குப் போயிருக்கும். ஆனால் கூட்டைக் கலைத்துவிடும் எண்ணம் தோன்றவில்லை. கோட்டை அப்படியே விட்டு விட்டேன்.

"உழைப்பினால் செல்வம் கொழித்தது; பணம் குவிந்தது. குடிசை வீட்டைக் கல் வீடாக்கினேன். ஆனால் இந்தக் 'குருவிக் குடிசை'யைப் பெயர்த்தெடுத்துவிட மனம் வரவில்லை. எப்படி வரும்! எனக்குப் புத்தி புகட்டி என்னை உயர்த்தியது இந்தக் குருவிக் குடிசைதானே!

"குடிசை வாழ்வில் ஆரம்பித்து நான் இப்படிப் பணக்காரனாக என் சொந்த முயற்சியில் ஆவதற்கும், உன் தாய் வள்ளியம்மை பெரியவளாவதற்கும் சரியாக இருந்தது. உன் தகப்பன் வடிவேலுவைத் தேடிப் பிடித்து அவளுக்குக் கல்யாணம் கட்டி வைத்தேன். பிறகு நீயும் பிறந்தாய்!

"தம்பி! இப்போது தெரிந்ததா இந்தக் குருவிக் கூட்டின் பெருமை" என்றார்.

"தாத்தா ஒரு சந்தேகம்! அப்பாவும்தான் சர்க்கார் உத்தியோகம் பார்க்கிறார். ஆனால் கடன் படாமல் வாழ முடியவில்லை. உங்களைப் போலவே அவரும் உழுது பயிரிட்டிருந்தால், நன்றாக இருந்திருக்கும் அல்லவா! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது தாத்தா! நான் எதற்காகப் படிக்க வேணும்! இப்பொழுதிருந்தே பயிர்த் தொழில் கற்றுக் கொள்ள ஆரம்பிக்கிறேனே!" என்று உணர்ச்சியோடு கூறினான் முத்து.

"தம்பி! நீ ரொம்பக் கெட்டிக்காரன். இப்போதே அதற்காகப் படிப்பை நிறுத்த வேண்டாம். நன்றாகப் படி. ஆனால் படித்துவிட்டுச் சர்க்கார் வேலைக்கு மனுப் போடாதே! உன் படிப்பை உழவுத் தொழில் அபிவிருத்திக்குச் செலவிடு. உனக்குத்தானே என்னுடைய நிலங்கள் எல்லாம்" என்றார் தாத்தா.

"தாத்தா! இப்போது எல்லாமே புரிகிறது. நான் கவனமாகப் படிக்கிறேன். படித்து விட்டுப் பயிர்த் தொழிலிலேயே ஈடுபட்டு உழைக்கிறேன். உங்கள் ஆசையைப் பூர்த்தி செய்து விடுவேன், தாத்தா! இது நிச்சயம்."

அப்போது பொன்னி தன்னுடைய கணவரையும் பேரனையும் தேடிக்கொண்டு, குருவிக் குடிசைக்குள் வந்து விட்டாள்.

"உங்களுக்குப் பசிக்கவில்லையா! பாவம், குழந்தையும் சாப்பிடவில்லை. மணி ஒன்றாகப் போகிறது!" என்று அவள் செல்லமாக அவரைக் கடிந்து கொண்டாள்.

"பையனுக்குக் குருவிக் குடிசையைப் பற்றிச் சொன்னேன். நேரம் போனது தெரியவில்லை" என்று இளம்பினார் சிங்காரம்.

"குழந்தைக்குக் குருவிக் குடிசையைப் பற்றிச் சொல்ல வேண்டியதுதான்" என்று கூறிப் பலமாகச் சிரித்தாள் பொன்னி.

அவர்கள் இருவர் உள்ளத்திலும் பழைய நினைவு வெள்ளமெனப் பாய்ந்தது.



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா.வீ.

## 20. விதியும் விலக்கும்

"மனிதன் தெய்வம் ஆகி விடுவதில்லையே!"

ஜகதீஷின் மனத்தில் அச்சமயம் இந்தக் கேள்வி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. மானிட சாதியும் சமூகங்களும் செய்யும் பயங்கரப் பாவச் செயல்களை வேரோடு களைந்து எறிந்து விட வேண்டும் என்ற தீவிர நோக்கம் அவன் மனத்தில் அப்பொழுதும் பசுமை மாறாமல் நிலைபெற்று நின்றது. ஆயினும் தனக்கு இழைக்கப்பட்ட தாங்கவொண்ணாத தீங்கை நினைக்கும் பொழுது இந்த மானிட சாதியைப் பழிவாங்கியே தீர வேண்டும் என்ற தீய எண்ணமும் தீவிரமாகத் தோன்றியது. இரண்டும் ஒன்றையொன்று மேவி அவன் மனத்திலே ஆதிக்கம் செலுத்தத் தொடங்கின. ஆனால் கடுமையான ஜுரத்தில் விழுந்து விடவே, அவன் அம்மாதிரி எண்ணங்களை மனத்தில் எழ விடாமல் தடுத்து நிறுத்தப் பார்த்தான். ஏறக்குறைய ஏழு நாட்கள் வரை அவன் படுத்த படுக்கையாகவே இருந்தான். படுத்திருக்கும் பொழுது பலத்த யோசனைகள் உண்டாவது இயல்பே அல்லவா? அதனால் அவன் ஆட்சி முறையை மட்டும் அல்ல; ஆட்சி பீடத்தையே மாற்றி அமைத்து விடுவது, மேலதிகாரிகளைப் படுகொலை செய்து அவர்கள் இருந்த இடத்தில் புல்பூண்டு முளைக்கச் செய்து விடுவது போன்ற சதித் திட்டங்கள் வகுப்பது, சூழ்ச்சிகளுக்கு அடிகோலுவது, பணக்காரர்களைக் கொள்ளையடித்துப் பாமர மக்களிடையே பிரித்துக் கொடுப்பது, தலைக்கர்வம் பிடித்தவர்களைத் தூக்கில் ஏற்றுவது இதுபோன்ற பல விஷயங்களைப் பற்றி வெகு விஸ்தாரமாகச் சிந்தித்து விட்டான். ஆனால் அவன் உடல்தான் அவன் வசத்தில் இல்லை. உடலுக்கு ஏற்பட்ட பலவீனம் உள்ளத்தையும் ஆட்கொண்டு விட்டது. மனத்தைப் பெருஞ் சுமை ஆழ்த்துவதுபோலத் தோன்றவே, அவன் செய்வது என்னவென்று வகை புரியாது திகைத்தான்; திண்டாடினான்.

ஒருநாள் அவன் தூங்கிக் கொண்டிருந்தான். கண்ணிமைகள் நன்கு மூடியிருந்தன. வெளுத்துக் களையிழந்து போயிருந்த அவன் முகத்தைப் பார்த்தவாறே கோகிலா மெதுவாக அவனுக்கு விசிறிக் கொண்டிருந்தாள். அவள் கையில் விசிறியென்று சொல்லக் கூடிய பொருள் இல்லை. புடவைத் தலைப்பின் முந்தானைதான் விசிறியாக உபயோகப்பட்டுக் கொண்டிருந்தது. அதிலிருந்து நல்ல காற்று வந்து கொண்டிருக்க வேண்டும் என்றே தோன்றியது. ஏனெனில் ஜகதீஷின் முகத்தில் மொய்க்கும் ஈக்கள் உட்கார முடியாமல் பறந்து ஓடிக் கொண்டிருந்தன.

அவர்கள் வீட்டில் அடைக்கலம் புகுந்த இரண்டொரு நாட்களுக்குள்ளேயே ராதா வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொள்ளத் தொடங்கி விட்டாள். ஜகதீஷின் அருகிலேயே கோகிலா உட்கார்ந்து சிசுருஷை செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதற்காக அவளுக்கு வீட்டுக் கவலையே ஏற்படாத வகையில் ராதா காரியங்களை நிர்வகிக்கத் தொடங்கியிருந்தாள்.

அன்று வேலையிலிருந்து ஓய்வு கிடைத்ததும் அவள் கோகிலாவின் அருகில் வந்து உட்கார்ந்தாள். கணவனைக் கவனித்துச் சிசுருஷை செய்வதில் ஈடுபட்ட கோகிலாவுக்குச் சாப்பிட வேண்டும், குளிக்கவேண்டும் என்ற நினைவே இல்லாமற் போய் விட்டது. ஏன்? அதெல்லாம் அவசியமில்லாத பொருளாகவே கூடத் தோன்றத் தொடங்கி விட்டன.

"அண்ணி! நீ கொஞ்சம் இளைப்பாறு. ரொம்பக் களைத்துப் போயிருப்பாய்!" என்றாள் ராதா.

ஜகதீஷுடன் சகோதரன் என்ற உறவை ஏற்படுத்திக் கொண்டு விட்ட பின் ராதாவுக்குக் கோகிலா அண்ணி ஆகத்தானே வேண்டும்? அதே போல ராதாவும் கோகிலாவுக்கு நாத்தனார் ஆகத்தானே வேண்டும்? எனவே அவள் கோகிலாவை அண்ணி என்று அழைத்ததில் வியப்பு என்ன?

ராதா தன்னை அப்படி அழைப்பதைக் கோகிலா தவறாக எடுத்துக் கொள்ளவும் இல்லை; ஆட்சேபிக்கவும் இல்லை. தற்காலத்திய உலகத்துக்கு 'அண்ணி' என்னும் சொல் சரியாகப் பட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி, குடும்ப வாழ்க்கையில் இந்தச் சொல் அழகு நிறைந்ததாகவும் பாவம் ததும்பியதாகவும் தான் தோற்றமளிக்கிறது. அண்ணி நாத்தி என்னும் பரிசுத்தமான தொடர்பிலும்



தமிழர்கள் திரளாக வாசம் செய்யும் பம்பாய் நகரில் பல பேட்டைகளில் பாரதி விழா கொண்டாடினார்கள். சுமார் மூவாயிரம் தமிழர்கள் வசிக்கும் கோரேகானில் செப்டம்பர் மாதம் 12ம் தேதியன்று நடந்த பாரதி விழாவுக்குக் கலா ரஸிகர் ஸ்ரீ டி. வி. ராமானுஜம் தலைமை வகித்துப் பாரதியின் பெருமையை அழகாக விளக்கியதைத் திரளாக வந்திருந்த குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரை மிகவும் ரஸித்தனர்.

குமாரிகள் ஆர். சரோஜா, எம். கே. லக்ஷ்மி, எஸ். மரகதம், ஸ்ரீமதி சுகந்த வல்லி, ஸ்ரீமதி அ. கி. ஜயலக்ஷ்மி, ஸ்ரீ சுபஸ்ரீ, ஸ்ரீ டி. எஸ். ஹரிஹரன், ஸ்ரீ டி. பி. சுப்ரமண்யம், ஸ்ரீ வேணு, ஸ்ரீ சிவராம கிருஷ்ணன், ஸ்ரீ சுந்தரேசன் முதலிய தமிழன்பர்கள் பாரதி பாடல்களைப் பாடி, அவருடைய குணநிசயங்களைப் பற்றிப் பேசி, விழாவுக்குச் சோபையளித்தனர். கோரேகான் பாரதி விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ டி. வி. ராமானுஜம் அவர்களையும் விழாவை நடத்திய கோரேகான் தமிழ்ச் சங்க நிர்வாகிகளையும் மேலே படத்தில் காணலாம்.

---

உறவிலும் உயர்ந்த மனோரம்யமான உணர்ச்சி இழைந்தோடிக் கொண்டுதான் இருக்கிறது. அந்த உறவை வேண்டாம் என்று அறுத்தெறிய நாம் யார்?

"உட்கார்ந்து கொண்டே இருக்கும் எனக்கு என்ன களைப்பு ஏற்படப் போகிறது? வீட்டு வேலை முழுவதையும் தான் நீ செய்து விடுகிறாயே!" என்றாள் கோகிலா.

அதைக் கேட்டதும் ராதாவுக்குக் கோகிலா தனது சொந்த அண்ணியே தானோ என்பது போன்ற அன்பு உணர்ச்சி உண்டாயிற்று.

"நல்லது, அம்மா! கணவனுக்குப் பணி விடை செய்வதென்றால் அதற்குப் பாக்கியம் செய்திருக்க வேண்டாமா? முன் பிறவியில் புண்ணியம் செய்திருந்தால் அல்லவா இந்தப் பிறவியில் அந்தப் பாக்கியம் கிடைக்கும்?" என்றாள் ராதா.

அதைச் சொல்லும்பொழுது அவள் சாதாரணமாகத்தான் சொன்னாள். ஆனால் அதில் பொதிந்திருந்த விசாலமான பொருள் திடுதிப்பென்று தானாகவே வெளியாகி விட்டது.

அவள் கணவன் சிறையில் இருந்தான். அவன் விடுதலை பெற்று வெளியே வருவதைப் பார்ப்பதற்காக அவள் அடிக்கடி நகரத்தை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தாள். ஆனால் அவனைப் பற்றிய தகவலே அவளுக்குத் தெரியவில்லை. சிறையில் இருந்து விட்டதனால் கணவனுக்கு மனைவி செய்யக்கூடிய பணிவிடைகளை அவளால் செய்ய முடியாமற் போய்விட்டது. கோகிலாவுடன் பேச்சைத் தொடர்ந்த பொழுது அவளுக்கு அந்த நினைவு வந்து விட்டது. மனத்தை வருத்தம் அழுத்தவே அவள் நீண்ட பெரு மூச்சு விட்டாள்.

ராதாவின் வாடிய முகத்தைக் கோகிலா கவனித்தாள். மனிதனின் கண்கள் சிரிப்பதற்காகச் சிருஷ்டிக்கப்பட்டனவா? அல்லது அழுவதற்காகச் சிருஷ்டிக்கப் பட்டனவா? ராதாவின் கண்களில் நீர் பொங்கிக் குமிழியிட்டுக் கொண்டு வந்தது. அப்பப்பா! பட்டிக்காடு என்கிறோமே! அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணின் உள்ளத்தில் எத்தனை வேதனை பொங்கிக் குமிழியிட்டுக் கொண்டிருக்குமோ?

"ராதா, இது என்ன?" என்று ஆதுரத்துடன் கேட்டாள் கோகிலா.

"அண்ணி! உன் வீட்டில் எனக்கு வேண்டிய' சுகங்களும் இன்பங்களும் கிடைத்தன. ஆனால் அவருடைய நாட்கள் சிறைச் சாலையின் கம்பிகளை எண்ணிக் கொண்டு எண்ணிக் கொண்டு எத்தனை கஷ்டத்துடன் போய்க் கொண்டிருக்கின்றனவோ, தெரியவில்லை! அவருக்கு உடல் நிலை கெட்டு விட்டால், ஜுரம் வந்து விட்டால், அல்லது தலையைக் காலை வலித்தால் அவரை என்ன வென்று கேட்பவர்கள் அங்கே யார் இருக்கிறார்கள்?" இப்படிக் கேட்ட ராதா, கண்ணில் பொங்கி வந்த நீரைப் புடவைத் தலைப்பினால் துடைத்துக் கொண்டாள். துக்கம் தொண்டையை அடைக்கவே, அவளுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. கேவிக் கேவி அழத் தொடங்கி விட்டாள். அதைக் கண்ணுற்ற கோகிலாவின் கண்களிலும் நீர் நிறைந்தது.

தவறு இழைப்பவனுக்குத் தண்டனை கொடுக்கட்டும். அதை யாரும் இங்கே தடுக்கவில்லை. தவறு இழைக்காத மனைவியைக் கணவனிடமிருந்து பிரித்து வைத்து அவளுக்கும் எதற்காக வீணில் நரக தண்டனை கொடுக்க வேண்டும்?

மனத்தை முற்றுகையிட்ட இந்தக் கேள்விக்கு விடை காணக் கோகிலாவினால் முடிய



# கண்ணாடியில் உங்கள் உருவம்

உங்கள் சருமமும் மேனியும் ரக்ஷித்து போஷிக்கப்பட வேண்டியது அவசியம். சருமத்தை போஷிப்பதற்கு மார்க்கம் ஒன்றே என்று புத்திசாலியான பெண்கள் அறிவார்கள். தினம்தோறும் இவர்கள் "ஹாஸலைன்' ஸ்னோ" வை " 'HAZELINE' SNOW" தங்களுடைய மிருதுவான சருமத்தில் உபயோகித்து நெகிழச் செய்கிறார்கள். இது சருமத்தில் இயல்பாகப் பொருந்தி சருமத்திற்கு மிருதுத்தன்மை வெண்மை, காந்தி இவைகளை அளிக்கின்றது.




## "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

"' ஹாஸலைன்' ஸ்னோ" (டிரேட் மார்க்)

 பர்ரோஸ் வெல்கம் அண்ட் கம்பெனி (இந்தியா) லிமிடெட், பம்பாய்.

# 'கோடக்' பிலிமில்

## பிடிக்கப்படும் படங்கள் சிறந்தவைகளாகவே அமைகின்றன

ஜொலிக்கும் அதிப்பிரகாசத்திலிருந்து ஆழ்ந்த நிழல்வரை... இவைகளுக்கிடையே நிலவும் ஆயிரக் கணக்கான நிழல் வித்தியாசங்களையும் ... ஒவ்வொரு சிறு பொருளைக்கூட விட்டு விடாமல், நன்றாக பதிவு செய்வதற்கு 'கோடக்' பிலிமே வேண்டும்.




**வெரிக்ரோம்**—பகல் வெளிச்சத்தில் பதிவு செய்யும் எந்தப்படங்களுக்கும் மிகப்பொருத்தமானது.




**சூப்பர்-XX** துரிதமான செயல் காட்சிகளை (ஆக்ஷன் – பிக்சர்ஸ்) படம் பிடிப்பதற்கும் மங்கிய ஒளியிலும் செயற்கை ஒளியிலும் படம் பிடிப்பதற்கும் இது உதவுகிறது.




**ப்ளஸ்-X** நிழல்களையும் அதேபோல் பிரகாசத்தையும் தெளிவாக பதிய வைத்து அழகான படங்களை தருகிறது. முக்கியமாக, பெரிய என்லார்ஜ்மெண்ட் செய்ய வேண்டிய படங்களுக்கு மிகவும் பொருந்தியது.

போட்டோ உலகில் 'கோடக்' பிலிம் இணையற்றதென்று நிரூபித்துக்கொண்டு விட்டது. இன்றே இரண்டு ரோல்கள் ... ஒன்று உங்கள் காமிராவில் நிறைக்கவும் இன்னொன்று அதிகப்படியாக கையிருப்பிற்கும் — வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் • கல்கத்தா
டில்லி • மதராஸ்

K. 9020

வில்லை. 'என்ன உலகம் இது! பொல்லாத பாழும் உலகம்!' என்று உலகத்தை அவள் நொந்து கொண்டாள்.

மிகவும் மெதுவான குரலில் நடந்து கொண்டிருந்த இந்தச் சம்பாஷணையை ஜகதீஷ் கண்களை மூடியவாறே கேட்டுக் கொண்டிருந்தான். அவ்வளவு தூரம் முற்றி விட்ட அந்தப் பேச்சைக் கேட்டபின் அவனால் பேசாமல் இருக்க முடியவில்லை. அவன் தன் கண்களைத் திறந்து ராதாவைப் பார்த்தான். தன் பேச்சை அவன் தூங்காமல் கேட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்த ராதா வெட்கித் தலை குனிந்தாள். ஏன் இந்தப் பேச்சைப் பேசினேம் என்று கூட மனம் வருந்தினாள். 'இம்மாதிரி பேச்சை ஆரம்பித்துத் தூங்கிக் கொண்டிருந்த ஜகதீஷை எழுப்பி விட்டோமே!' என்று எண்ணிய அவள் அந்தக் குற்றத்துக்குப் பொறுப்பாளியாகத் தன்னைத் தீர்மானித்துக் கொண்டு மனம் நொந்தாள்.

ஜகதீஷ் திடீரென்று குரலைக் கனைத்துக் கொண்டு, "ஏன், ராதா! உன் கணவன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

ராதா வெட்கித் தலை குனிந்தாள். அவள் கணவனே குற்றவாளி. சிறைத் தண்டனை அநுபவித்துக் கொண்டிருந்தான். அதனால் அவன் பெயரைச் சொல்வது என்ற நினைப்பே அவள் மனத்தை என்னவோ செய்தது. அதோடு வேறு அவள் கிராமத்துப் பெண் அல்லவா? எனவே, குனிந்த தலையைக் குனிந்த தலையாக வைத்துக் கொண்டது மட்டும் அல்ல; தரையில் புதைத்த கண்களைத் தூக்கவே இல்லை. கால் கட்டை விரலினால் தரையில் கோடு இழுக்கலானாள். வெட்கம் எல்லை மீறி விட்டால் பெண்களின் கால் கட்டை விரலுக்குத்தானே வேலை அதிகம்?

"ஆமாம். நீங்கள் இப்படி நேரிடையாகக் கேட்கிறீர்களே! அவள் சொல்லி விடுவாளா? யார் யாரிடம் எப்படிக் கேட்க வேண்டும் என்பது தெரிய வேண்டாம்?" என்று கேட்டாள் கோகிலா. அதோடு ஜகதீஷுக்கு விவகார ஞானமும் உலகத்தின் பழக்கமும் பற்றாது என்பதை வாய்திறந்து சொல்லாமலே தன் இதழ்க் கடையில் எழுந்த இளநகையின் மூலம் எடுத்துக் காட்டினாள்.

அப்பொழுதுதான் அந்த விஷயம் நினைவு வந்தவன் போல, "ஆமாம், மறந்தே விட்டேன்! கணவனின் பெயரை மனைவி சொல்லக் கூடாதோ?... ஆனால் இவள் கணவர் பெயர் தெரியாமல் நான் எப்படித் தேடிக் கண்டு பிடிக்க முடியும்?" என்றான் ஜகதீஷ்.

"நீங்கள் இந்த நிலைமையில் எழுந்திருக்கலாமா? அதெல்லாம் கூடாது. நானே அவரை எப்படியாவது தேடிக் கொள்கிறேன். உங்கள் உடல் நிலை சீக்கிரம் குணமானால், அதுவே எனக்குப் போதும்!" என்றாள் ராதா.

"இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குள் என் உடம்பு சரியாகி விடும். நடமாடக் கூடிய சக்தி வந்ததும் நானே போய் அவரைத் தேடி வருகிறேன். நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே!" என்றான் ஜகதீஷ். அதைக் கூறும்பொழுது அவனுக்குத் தன் உடல்நிலை மறந்து விட்டது. உலகத்தோடு விரோதம் பாராட்டும் எண்ணமும் மறந்து விட்டது. அவன் அந்தப் பட்டிக் காட்டுப் பெண்ணின் கணவனைத் தேடிவரும் விஷயத்தில் ஆதுரம் காட்டத் தலைப்பட்டு விட்டான். பழைய குருட்டு யோசனைகள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன.

"ஆமாம், விஜயாவிடம் சொன்னால் தேடிக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்ய மாட்டாளா?" -ராதாவின் கணவரைக் கண்டு பிடிக்கக் கோகிலா மூன்றாவது மார்க்கம் சொன்னாள்.





தென் சென்னை மின்சாரக் கார்ப்பொரேஷன் சிப்பந்திகள் ஆகஸ்டு மீ 22வ ஞாயிற்றுக்கிழமை 'சிப்பந்திகள் தின'த்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். இந்த விழாவுக்கு மந்திரி கனம் பக்தவத்ஸலம் தலைமை வகித்தார். விழாவின் சிறப்பு அம்சமாகச் சிப்பந்திகள் ''மருடபதி'' நாடகத்தைப் பிரமாதமாக நடித்தனர். நாடகத்தில் நடித்தவர்களைப் படத்தில் காணலாம்.

---

''அதெல்லாம் எதற்கு? இன்றைக்கு மூன்றுவது நாள் நான் வெளியே போய் வரக் கூடிய சக்தி பெற்று விடுவேன்.-ஏன், ராதா! அவருக்கு எப்பொழுது விடுதலை கிடைக்கக் கூடும் என்று சரியான தகவல் இதுவரை உனக்குக் கிடைக்க வில்லையா?'' என்று கேட்டான் ஜகதீஷ்.

''அவரிட மிருந்து ஒரே ஒரு கடிதம் வந்தது. எந்த மாசம் விடுதலை கிடைக்கும் என்று அதில் எழுதி யிருந்ததாகத் தான் ஞாபகம். ஆனால் எனக்கு மறந்து விட்டது. அவசரத்தில் இங்கே ஓடி வந்து விட்டேன். கடிதத்தைக் கையோடு கொண்டு வரவில்லை. அப்புறம் சிறைச்சாலைக்குச் சென்று விசாரித்தேன். ஆனால் எனக்கு யார் சரியான தகவல் கொடுப்பார்கள்? அவருக்கு விடுதலை கிடைக்க இன்னும் கொஞ்ச நாட்கள்தான் இருக்கின்றன என்பது மட்டும் தெரிய வந்தது!'' என்றாள் ராதா.

இன்று விடுதலை பெறுவார், நாளை விடுதலை பெறுவார் என்ற நம்பிக்கையிலேயே ராதா தினந்தோறும் சிறைச்சாலைக்கு வெளியே போய் உட்காரத் தொடங்கி யிருந்தாள். இதன் மத்தியில் அவள் கையிலிருந்த காசு முழுவதும் செலவழிந்து விட்டது. அவள் இரவு வேளைகளில் ஒரு தர்ம சத்திரத்தில் தங்கி வந்தாள். ஆனால் அங்கிருந்து அவள் வெளியேற்றப்பட்டாள். காரணம் என்னவெனில், அங்கிருந்த காவற்காரனை அவள் திருப்திப் படுத்தவில்லை என்பதுதான். தர்ம காரியமா யிருந்தாலும் தன்னலம் தானே எங்கும் முன் நிற்கிறது? தர்ம சத்திரத்தை விட்டு வெளியேற்றப்பட்ட அவளுக்கு வேறு எங்கும் இடம் கிடைக்கவில்லை. முன்பின் அறிமுகம் இல்லாத அவளுக்கு யார் அடைக்கலம் அளிப்பார்கள்? திரும்பிப் போவதற்கு அவளிடம் பணமும் இல்லை; மனமும் இல்லை. கணவன் சிறையிலிருந்து விடுதலை பெற விருந்தான். இன்றைக்கோ, நாளைக்கோ என்றைக்கென்று தெரியாது. சிறைச்சாலையின் வாசலிலேயே அவனைக் கண்டு வரவேற்க வேண்டும் என்று அவள் ஆசை மனம் துடித்துக் கொண்டிருந்தது. பிரிந்த கணவனைப் பார்க்க எந்த மனைவிக்குத்தான் பரபரப்பும் ஆசையும் இராது?

நாட்டுப்புறத்து ஆண்-பெண்களிடையே பழகும் முறையில் பகட்டோ பண்போ குறைந்து காணப்படலாம். அதைக் காரணம் காட்டி அவர்களிடம் அன்புணர்ச்சி சிறிதும் இடம் பெற்றிருக்காது என்று கூறுவது தவறாக முடியும். ஏனெனில் அவர்கள் பழகும் முறை பண்பும் பகட்டும் குறைந்து காணப் பட்ட பொழுதிலும் அவர்கள் காட்டும் பரிவும் பிரேமையும் மிக மிக உண்மையானதாக இருக்கக்கூடும்; அசாத்தியமான ஆர்வமும் ஈடுபாடும் கொண்டதாக இருக்க முடியும். ராதா பட்டிக் காட்டுப் பெண்தான். இருந்தாலும் அவள் பிரேமைக்குப் பங்கம் கற்பிக்க முடியுமா? அப்படியே முடிந்தாலும் நாம் கற்பிக்கத்தான் கற்பிக்கலாமா?

கணவனிடம் கொண்டுள்ள அபாரப் பிரேமை காரணமாகத்தான் அவள் சொந்த ஊரையும் வீட்டையும் விட்டு அந்த நகரத்துக்கு வந்தாள்; வீட்டுக்கு வீடு, வாசலுக்கு வாசல் சுற்றித் திரியும் நிலைமையையும் அடைந்தாள்.

யார் வீட்டிலாவது வேலை வெட்டி என்று செய்தால் அவளுக்கு உண்ண உணவு கிடைத்துவிடும். அவள் அதற்குத் தயாராகவும் இருந்தாள். ஆனால்......? முன்பின் அறிமுகம் இல்லாத அவளுக்கு வேலை தர யாருமே அஞ்சினர். ஏன் அஞ்சமாட்டார்கள்? அவளோ வயது வந்த பெண்; அதிலும் நல்ல

# உங்கள் சேமிப்பு பிரச்னைகளுக்கு ஓர் பதில்!

## 'ப்ரீபாப்ரிகேடட்' (தயாராக உள்ள பாகங்களை இணைத்த) அலுமினிய பத்தாயம்

**5 முக்கிய விஷயங்கள்**

- சுலபமாக ஒன்று சேர்த்து அமைக்கலாம். பிரித்து விடலாம்.
- பூச்சி பொட்டுகளை அண்டவிடாது. குளுமையானது மற்றும் கிருமி-விஷமுண்டாகாது - தானியங்களை ஒரு போதும் பாதிக்காது.
- மழை மற்றும் உளுத்தலுக்குப் பாதுகாப்பு.
- லேசானது – உறுதியானது.
- – நீடித்துழைக்க வல்லது.

தயாராக உள்ள தனித் தனி பாகங்களாலான இண்டால் அலுமினிய பத்தாயங்கள் நம் நாட்டு தொழிலாளிகளால் சுதேசப் பொருள்களைக் கொண்டு இந்தியாவில் தயாரிக்கப்பட்டவை.

இது வளைவான காருகேடட் அலுமினிய உலோகக் கலவைத் தகடுகளால் ஆனவை. இதன் கும்பம் போன்ற கூரை, தட்டையான தனித் தனி பாகங்கள். இதை நிரப்ப கூரையின் சரிவில் வழியும், தானியத்தை நேரடியாக மூட்டைகளாகக் கட்ட இதனடியில் வாயும் அமைந்துள்ளது. இவைகளைப் பூட்டலாம். மூட்டை கட்டவும், தண்ணீர் உட்புகாமல் இருக்கவும் இது 2 அடி பேஸ்து மட்டத்தின் மீது அமைக்கப்பட வேண்டும். நிலங்களில் வேலை செய்யும் ஆட்களே இதைப் பொருத்தி சுலபமாகப் பிரித்து மீண்டும் அமைக்கலாம். எளிதில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மாற்றலாம். அலுமினியம், பூச்சி பொட்டுகளை அண்டவிடாது. துக்குப் பிடிக்காது. ஈரத்தால், தானியங்கள் மடிப்பதும் குறைபடுகிறது. இதற்குப் பராமரிப்புச் செலவுகள் ஏதுமில்லை. சாதாரண கவனிப்பிலேயே கால வரையரையின்றி உழைக்கும். விஞ்ஞான ரீதியற்ற முறையில் ஏராளமாகச் சேமித்து வைக்கப்படும் விலைமிக்க தானியங்கள் பாழாகி விடுகிறது. இந்த நவீன முறைப்படி நமது உணவுப்பற்றாக் குறையை எதிர்த்துப் போராடுங்கள்!



**பரிமாண விவரங்கள்**

| | |
|---|---|
| 750 மணங்குகள் (சமார் 500 மூட்டைகள்) பிடிக்கக் கூடியவை. | 400 மணங்குகள் பிடிக்கக் கூடியவை |

இதர விவரங்களுக்கு எழுதவும்:

## இந்தியன் அலுமினியம் கம்பெனி லிட்.

தபால் பெட்டி 550
44 க்வீன்ஸ்வே
புது டெல்லி.

தலைமை ஆபீஸ்:
தபால் பெட்டி 361
31, சௌரங்கீ ரோட்
கல்கத்தா.

தபால் பெட்டி 1654
லோட்டஸ் ஹவுஸ்
மெரைன் லைன்ஸ்
பம்பாய்.

தபால் பெட்டி 1662, மதராஸ் 1. | தபால் பெட்டி 2, ஆல்வாய்.

எஸ். ஆர். ராம்ரத்னம், ஸ்தல பிரதிநிதி, இந்தியன் அலுமினியம் கோ. லிட்.
'விஜயா', கஸ்தூரிரங்க அய்யங்கார் ரோட், ஆழ்வார்பேட்டை, மதராஸ் 18.

கட்டழகி. ஆண்களின் மனம் ஒரு நிலையில் இருக்கும் என்று எப்படி நம்ப முடியும்?

தங்கள் தங்கள் கணவன் மார்களிடமே கொண்டுள்ள அவநம்பிக்கை காரணமாக வீட்டுக்கு எசமானிகளான பல பெண்கள் அவளைத் தங்கள் வீட்டில் வேலைக்கு அமர்த்திக் கொள்ளத் தயங்கினர். அவர்கள் தயக்கத்துக்கும் காரணம் இல்லாமல் இல்லை. வழியில் போகும் பொழுதும் வரும் பொழுதும் இந்த ஆண்கள் தங்கள் கண்களுக்கு ஏதாவது விருந்து அளிக்கக் கூடிய பொருளோ இடமோ இருக்கிறதா என்று தேடிக் கொண்டேதான் செல்கிறார்கள். அழகைக் காணும் இடத்தில் ஆண்களின் பார்வை நிலைத்து விடுவது ஒரு வழக்கமாகி விட்டது. அழகை ரசித்து ஆதரவு காட்டுவதிலும் ஆண்களுக்கு ஈடு ஆண்கள்தான் என்று சொல்லும் படி நடக்கத் தலைப்பட்டு விடுகின்றனர். அதனால் அழகியான ராதாவின்மீது எல்லோருடைய கவனமும் சென்றதென்றால் அது அவர்களுடைய கண்களின் தவறேயொழிய அவர்களுடைய தவறு ஆகுமா? அவளுடன் பேசிப் பழக வேண்டும், பிச்சை போட்டுப் பாசம் பெற முயல வேண்டும், கேலியும் பரிகாசமும் செய்து அவள் மனத்திலே இடம் பொத்திக் கொள்ள முயல வேண்டும் என்று அவளைப் பார்ப்பவர்கள் எல்லோரும் எண்ணினர். தங்கள் எண்ணத்தைச் செயலாக்கும் விஷயத்திலும் அவர்கள் காலம் கடத்தவில்லை.

உலகம் என்றால் நல்லவர்களும் இருப்பார்கள், தீயவர்களும் இருப்பார்கள். இருவருக்கும் இடையே இருக்கும் ஒரே ஒரு மிகப் பெரிய வித்தியாசம் என்னவென்றால் தீயவர்கள் தங்கள் மிருக சுபாவத்தை வெளிப்படையாகக் காட்டுவார்கள். நல்லவர்கள் அக்கம் பக்கம் பார்த்து மறைமுகமாகக் காட்டுவார்கள். இதைக் கொண்டு இந்த உலகத்தில் உள்ளவர்கள் எல்லோருமே இப்படித்தானோ என்று எண்ணுவதும் ஒருவேளை தவறாக முடிந்துவிடக் கூடும்.

போக்கிரிகள் சமய சந்தர்ப்பம் பார்க்காமல் சதா சர்வகாலமும் தங்கள் வேல் விழிகளால் ராதாவைச் சுட்டு வந்தார்கள் என்றால், நல்லவர்களும் நாற்புறமும் ஒரு முறை நன்றாகத் தங்கள் கண்களைச் சுழற்றிப் பார்த்து விட்டு யாரும் இல்லையா என்று தீர்மானித்துத் தெரிந்து கொண்டு அதன்பின் தங்கள் கண் வீச்சுக்கு அவளை இலக்காக்கி வந்தார்கள். இப்படி எல்லோருடைய கண் அம்புக்கும் குறியாகி ராதா திக்கு முக்காடினாள்.

இத்தகைய ஆசாமிகளின் கும்பல் நாளுக்கு நாள் அதிகரித்து விடவே, ராதா மிகவும் மனம் வெதும்பினாள். வெளியே தலை காட்டுவதே தனக்கு ஆபத்தாக முடியுமோ என்று கூட அவளுக்குத் தோன்றியது. ஒரு புறம் வயிற்றைக் கிள்ளும் பசியும், பட்டினியினால் வாடும் பச்சிளம் பாலகனின் பிரச்னையும் அவளை வாட்டின. இன்னொரு புறம் அநீதி இழைக்கும் அநியாயக்கார சமூகம் அவளுக்கு இல்லாத பல தொந்தரவுகள் எல்லாம் கொடுத்தது. இவ்விரண்டுக்கும் இடையே அந்த அபலை சிக்கித் தவித்தாள்; செய்யும் வகையறியாது திகைத்தாள். இருதலைக் கொள்ளி நிலையில் இருந்த அவள் எப்பொழுது எப்படி எவ்வழியில் தவறு வாளோ, யார் கண்டார்கள்? தவறாமல் இருக்க அவளுக்கு வழி சொல்லித் தருவோர் தான் யார்? ஆண் வர்க்கத்தின் மிருகத் தன்மைக்குப் பலியாகி அவள் பாவப் படுகுழியில் விழுந்து விட்டால், அப்புறம் சிறையில் வாடும் அவள் கணவனைச் சேர்ந்து வார் யார் இருப்பார்? அல்லது யார் என்று கேட்கத்தான் யார் இருப்பார்?

ராதாவின் கதையனைத்தையும் சிறுகச்சிறுக ஜகதீஷ் கேட்டுத் தெரிந்து கொண்டான். அவனுக்கு அப்பொழுது தன் ஜுரம் அனைத்தும் இறங்கி விட்டதாகவே தோன்றியது. அவனால் மட்டும் முடிந்திருந்தால் அந்தக் கணமே ராதாவின் கணவனைத் தேடி வரப் புறப்பட்டிருப்பான். ஆனால் ராதாவும் கோகிலாவும் அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கவில்லை; எழுந்து புறப்படவொட்டாமல் அவனைத் தடுத்து நிறுத்தி விட்டார்கள். ஆனால் அடுத்த இரண்டு நாட்களில் அவன் எழுந்து தன் வீட்டுக்குள்ளேயே நடமாடத் தொடங்கினான். மூன்றாம் நாள் யார் என்ன சொல்லியும் கேளாமல் சிறையதிகாரியைச் சந்தித்து விஷயம் தெரிந்து வர வெளியே புறப்பட்டு விட்டான்.

சிறைச் சாலைக்குச் சென்று விசாரித்த ஜகதீஷுக்கு ராதாவின் கணவன் இன்னும் இரண்டு மூன்று நாட்களில் விடுதலையடைந்து விடக்கூடும் என்றும் தண்டனைக் காலம் பூர்த்தியுறுவதற்கான காலம் குறுகி விட்டதென்றும் விடுதலை சம்பந்தமாக மேலாவின் உத்தரவுக்காக எழுதப்பட்டிருக்கிறதென்றும், உத்தரவு வந்ததும் விடுதலை செய்து விட வேண்டியதுதான் என்றும் தெரிய வந்தது.

அதை யறிந்த ஜகதீஷ் சிறையதிகாரியிடம் தன் விலாசத்தைக் கொடுத்து, "விடுதலை பெற்றதும் கைதியை இந்த விலாசத்துக்கு அனுப்பி வையுங்கள்!" என்றான்.

ஜகதீஷின் சொற்களைக் கேட்ட சிறை அதிகாரிக்குச் சற்று வியப்பு ஏற்பட்டது. ஜகதீஷைப் பார்த்தால் கைதிக்கு உறவினனாக இருக்க முடியும் என்று தோன்றவில்லை. அதனால் விடுதலை பெறும் கைதிகளுக்கு உதவுவதற்காக ஏதாவது ஒரு சங்கம் நிறுவப் பட்டிருக்கலாம் என்றும், ஒருவேளை ஜகதீஷ் அத்தகைய சங்கத்தின் அங்கத்தினனாக இருக்கலாம் என்றும் தோன்றியது. மனத்தில் தோன்றிய சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள எண்ணி அவர் ஜகதீஷிடமே தம் சந்தேகத்தைக் கேட்டு வைத்தார். ஆனால் ஜகதீஷ் அம்மாதிரி சங்கம் ஒன்றும் நிறுவப்படவில்லை என்று



சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ ஈ. கிருஷ்ணய்யர் பி. ஏ., பி. எல். அவர்களின் குமாரி செல்வி மீனுபாய்க்கும் பம்பாய் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ கே. எஸ். விஸ்வநாதன் எம். ஏ. அவர்களுக்கும் செப்டம்பர் 9-ந் தேதி சென்னையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்குச் சென்னை ராஜ்ய முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ் நாடார் அவர்களும், நீதிபதிகள், பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள், சங்கீத வித்வான்கள், கலா ரஸிகர்கள், சென்னை நகரப் பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்து சிறப்பித்துத் தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.

---

சொல்லி விடவே, அவருடைய சந்தேகம் சந்தேகமாகவும் வியப்பு வியப்பாகவுமே இருந்து விட்டன.

"ஆமாம், அந்தக் கைதிக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? எதற்காக அவனைத் தேடி......" என்று கேட்டார் சிறையதிகாரி.

"அவன் மனைவி என்னுடைய வீட்டுக்கு வந்திருக்கிறாள்!"

"இருந்தாலும் அவளை உங்கள் வீட்டுக்கு அனுப்பி வைப்பது முறையல்ல. ஏனென்றால் அவன் மிகவும் மட்டரகமான கைதி!" என்றார் சிறையதிகாரி.

"அதனால் பரவாயில்லை!"

சிறையதிகாரியை யோசனையில் ஆழ்த்தி விட்டு ஜகதீஷ் அங்கிருந்து திரும்பினான். ராதாவின் சுபாவத்தை நினைக்க நினைக்க ஜகதீஷுக்கு வியப்பா யிருந்தது. ராதாவின் கணவன் அவ்வளவு மட்டரகமானவனாக இருந்தால், அவள் ஏன் அவனிடம் அப்படி அன்பு கொள்ள வேண்டும்? உயிரையே வைக்க வேண்டும்?

இந்தக் கேள்விக்குப் பதில் கிடைப்பதற்கு முன்பாகவே அவன் நினைவுத் திரையில் கோகிலா வந்து நின்றாள். எனவே, 'வாழ்க்கையில் வெற்றி என்பதையே காணாத உதவாக்கரைக் கணவனான என்னைக் கோகிலா ஏன் இவ்வளவு காதலிக்கிறாள்?' என்ற கேள்வியை அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அந்தக் கேள்வியைத் தொடர்ந்தாற்போலவே, அவன் தன்னிடம் உள்ள நற்குணங்களையும் நற்பண்புகளையும் நினைத்துப் பார்த்தான். அவற்றில் ஒன்றுகூடச் சாதாரண மனிதர்களிடத்தில் இல்லாத பெரும் பண்புகளாகவோ குணங்களாகவோ அவனுக்குப் படவில்லை.

கோகிலாவைப் போன்ற நற்குணங்கள் நிறைந்த மனைவி மட்டும் அவனுக்குக் கிடைக்காம லிருந்தால், அவன் இத்தனை நாட்களும் இப்படியா இருந்திருப்பான்? தீய நோக்கம் கொண்டு திரியும் மட்ட ரகமான மனுஷ்யனாக ஆகியிருக்க மாட்டானா?

ஆமாம், அவனுக்கு இந்தச் சந்தேகம் எழுவானேன்? எழக் காரணம் இல்லாமல் என்ன? அவனே கோபக்காரன். உலகத்தில் உள்ள எந்தப் பொருள்தான் அவன் கோபத்துக்கு இலக்காக வில்லை? எதற்கெடுத்தாலும் மூக்குக்கு மேல் கோபம் கொள்ளும் கணவனை எந்த மனைவிதான் விரும்புவாள்? கோபக்காரனா யிருந்தாலும் சம்பாதிக்கும் திறமையாவது இருந்தால்! ஒரு வேளை நேசிப்பாள். ஆனால் அவனிடத்தில் அதுவும்தான் இல்லையே! தன்னிடமுள்ள அந்தத் திறமை யின்மை அவன் மனத்தையே உறுத்தியது. அதெல்லாம் ஒன்றும் இல்லாவிட்டாலும் ஆளாவது அழகா யிருந்தால் ...... அவன் அழகை அவன் தான் மெச்சிக் கொள்ள வேண்டும். அவன் அழகைப்பற்றிக் கோகிலாவைத் தவிர வேறு யாரும் புகழ்ந்து பேசியதாக அவனுக்குத் தெரிந்த மட்டில் நினைவில்லை.

எப்பொழுதாவது எந்த அழகியாவது அவனை ஏறிட்டுப் பார்த்திருப்பாளா? ஏறிட்டுப் பார்க்கா விட்டாலும் பார்க்க வேண்டும் என்று ஆசையாவது கொண்டிருப்பாளா? அல்லது அவன்தான் அத்தகைய காரியங்களில் ஈடுபட்டு வெற்றி கண்டிருப்பானா? தன் நினைவை ஓட்டிப் பார்த்த வரை அவனுக்கு அப்படி எதுவும் நடந்திருப்பதாகத் தோன்றவில்லை. அப்படி யிருக்கும் பொழுது கோகிலா மட்டும் அவனிடம் ஏன் அவ்வளவு அன்புசெலுத்த வேண்டும்? அவனை உயிருக்குயிராக நேசிக்க வேண்டும்?

அவள் தன் கணவனைக் காதலிக்கா விட்டால்......? சே! என்ன அசட்டுக் கேள்வி? கல்யாணம் என்று ஆகி விட்டால் பெண் தன் கணவனைக் காதலித்துத்தானே ஆக வேண்டும்? கட்டிய கணவனிடம் அன்பு செலுத்தா விட்டால் அவளை யார் விட்டார்கள்? கல்யாணம் ஆகிக் கணவன் மனைவியான பிறகு ஒருத்தி கணவனைப் பிரிந்து வாழ்வதா? வெறுத்து விலக்குவதா? கூடாது தான். ஆனால் ஆணுக்கு ஒரு நியாயம்; பெண்ணுக்கு ஒரு நியாயம். இது எந்த ஊர் நியாயம்? ஆண் நினைத்தால் தன் பலவிதமான உரிமைகளைப் பாராட்டித் தனக்கு ஏற்பட்டுள்ள திருமணத் தொடர்பையும் கட்டுப்பாட்டையும் கொஞ்சம் இலேசாக்கிக் கொள்ளலாம். ஆனால் பெண் — அதுவும் பாரதப் பண்பில் ஊறிய பெண் கணவனின்

# தெம்பூட்டுகிறது

# காலையில் உபயோகித்தால்!

# மென்மை உணர்ச்சி

# மணிக்கணக்காய் மாறுது!

காஷ்மீர் பொக்கே டேல் எவ்வளவு தெம்பூட்டுகிறது! அந்த மென்மை உணர்ச்சி மணிக் கணக்காக நீடிக்கிறது! ஈரத்தை உறிஞ்சி, அரிப்பும் புண்ணும் வராமல் தடுக்கிறது. குளுமை மணம், புத்துணர்ச்சி அளிக்கிறது.

கால்கேட் 1806 முதல்
தரத்துக்குப் பெயர்போனது

# காஷ்மீர் பொக்கே
## டால்கம் பவுடர்
### ஆண்கள் விரும்பும் நறுமணம்




CBG/13



சென்னை கந்தசாமி கோயிலுக்கு எதிரில் சென்ற ஓராண்டு காலமாக நடந்து வரும் "ஜெயவிலாஸ்" காப்பி ஹோட்டலின் ஆண்டுவிழா செப்டம்பர் மாதம் 12உ சிறப்பாக நடைபெற்றது. இந்த விழாவுக்கு "கல்கி" ஆசிரியர் தலைமை வகித்து "ராஜாஜி" அவர்களின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார். இந்த வைபவத்தின் போது 'ஜெய விலாஸ்' ஹோட்டலின் அதிபர் ஸ்ரீ சிதம்பரம் அவர்கள் காந்தி மண்டப ஞாபகார்த்த நிதிக்காக ரூ. 101 கொண்ட பண முடிப்பை "கல்கி" ஆசிரியரிடம் வழங்கினர். விழாவுக்கு அந்த வார்டு நகரசபை அங்கத்தினரும் மற்றும் பல பிரமுகர்களும் திரளாக விஜயம் செய்து சிறப்பித்தனர். சென்னை நகரசபை மேயர் விழாவில் கலந்து கொண்டு ஜெய விலாஸ் ஹோட்டல் நிர்வாகியின் திறமையைப் பாராட்டினர். அவர் பாராட்டிப் பேசுவதைப் படத்தில் காணலாம்.

---

குறுகிய கட்டுப்பாடுகளையும் சட்ட திட்டங்களையும் சிறிதாவது மீறிச் செல்ல முடியுமா? மீறிச் சென்றால் சமூகம் சும்மா விடுமா? திருமணம் என்பது ஒரு பெண்ணை எப்படி அடிமையாக்கிக் கட்டுப்பாட்டுக்குள்ளாக்கி விடுகிறது என்பதைப் பற்றி அவன் சிந்திக்கலானான். அந்தக் கட்டுப்பாட்டுக்குள் கட்டுண்டு விட்ட பின் பெண் அசைய முடியுமா? அல்லது நகரத்தான் முடியுமா?

ஆனால் வாழ்க்கையில் இவ்வளவு கட்டுப்பாடுகளும் விதிகளும் இருக்கும் பெண் எப்படிச் சமாளித்துக் கொள்கிறாள்? அதிருப்தியும் அசிரத்தையும் நிலவ வேண்டிய வாழ்க்கையைப் பரிமளிக்கச் செய்கிறாளே, எப்படி? தான் அடிமையாகித் தன் கணவனைத் திருப்திப் படுத்தும் கலையில் பாரதப் பெண்களை வெல்ல யாராலும் முடியாது. அதனால்தான் எத்தனையோ துயரங்களுக்கும் துன்பங்களுக்கும் இலக்கான பொழுதிலும் ஜகதீஷுக்கு வாழ்க்கையில் ஒரு அலுப்போ சலிப்போ ஏற்படவில்லை. கோகிலாவின் கண் பார்வைக்குள்ளே வந்து விட்டால் அவனுக்கு வாழ்க்கையில் உள்ள கசப்பும் அலுப்புச் சலிப்பும் கரைந்து உருகி ஓடி விடுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு வந்தது. அவன் தன் வாழ்க்கையில் எத்தனையோ துணிகரமான தீச் செயல்கள் செய்யத் துணிந்திருக்கிறான். ஆனால் கோகிலாவின் நினைவு அவனை அப்படியெல்லாம் செய்ய வொட்டாமல் தடுத்து நிறுத்தி வந்தது. கோகிலாவைப் போலவே ராதாவும் தன் குற்றவாளியான கணவனை முன்னிட்டுப் பல பயங்கரத் துயரங்களைப் பொறுத்துக் கொள்ளத் தயாராக இருந்தாள். அவள் எதற்காக அப்படித் தயாராக வேண்டும்? ஆம், அதிலேதான் இந்துப் பெண்மணியின் பெருமை புதைந்திருக்கிறது. கோகிலாவின் நினைவு அவனைக் குற்றங்கள் புரிவதிலிருந்து தடுத்து வந்தது. அதே போல் தன் பக்கத்தில் தன் மனைவி ராதா இருப்பது அவள் கணவனுக்கு உபயோககரமானதாக ஏன் படவில்லை?

ஜகதீஷ் எல்லா விவரங்களையும் ராதாவிடம் கேட்டுத் தெரிந்துகொண்டிருந்தான். ஆனால் அவள் கணவனுக்கு எதற்காகத் தண்டனை கிடைத்தது என்பதை மட்டும் அவன் கேட்டுத் தெரிந்துகொள்ளவில்லை. ஒரு பெண் தன் கணவனின் குற்றத்தைத் தன் வாயால் சொல்ல மாட்டாள்; சொல்வதை மகா பாவம் என்று எண்ணுவாள் என்பதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். ஆயினும் ராதாவின் கணவனைப் பற்றி முழு விவரமும் தெரிந்துகொள்ளாமல் தன் வாழ்க்கையில் அவனுக்கு எப்படி அவன் இடம் கொடுப்பான்? ஜகதீஷ் சட்டென்று ஒரு முடிவுக்கு வர முடியாமல் திக்கு முக்காடினான். ஆனால் தன் குற்றவாளிக் கணவனின் பொருட்டு இத்தனை துயரங்களையும் பொறுத்துக் கொள்ளும் ராதா உண்மையான மனைவி என்னும் உண்மையை ஒப்புக் கொள்வதில் அவனுக்குச் சிறிதும் தயக்கம் உண்டாகவில்லை. மானிட சாதி கொடுங்குணம் வாய்ந்தது, குற்றம் நிறைந்தது என்பதை ஜகதீஷ் அநுபவ வாயிலாகக் கண்டறிந்திருந்தான். ஆனால் ராதாவும் கோகிலாவும் அதே மானிட சாதியைச் சேர்ந்தவர்கள் தானே? அவர்கள் மட்டும் அத்தகைய குற்றங் குறைகள் இன்றி இருப்பதேனோ?

இதை எண்ணிப் பார்த்த பொழுதுதான் அவன் இருதயத்தில் "மனிதன் தெய்வம் ஆகி விடுவதில்லையே?" என்ற கேள்வி வட்டமிட்டது. அதே சமயம் அவன் தோள்மீது யாரோ கை வைக்கவே அவன் துணுக்குற்றுத் திரும்பிப் பார்த்தான். (தொடரும்)

# நட்பு வளர்ந்தது!



மணாமணி

அன்று வெள்ளிக்கிழமை. கூடத்தில் மாட்டியிருந்த மகாலக்ஷ்மி படத்தின் முன் திருவிளக்கை ஏற்றி நமஸ்கரித்து விட்டுத் தன் கணவர் வருவதற்குள் கோயிலுக்குப் போய் வந்து விடலாம் என்ற எண்ணத்துடன் 'லக்ஷ்மி ஸ்தோத்திரம்' சொல்லிக் கொண்டே பீரோ டிராயரில் வைத்திருந்த தங்கச்சங்கிலியை எடுத்து வருவதற்காகச் சென்றாள் வைதேகி.

சங்கிலியைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே அவள் கண்கள் லக்ஷ்மி படத்தை நோக்கிச் சென்றன. "உன் இதயத்தில் என்னை வைத்துப் பூஜிக்கலாம். ஆனால் அதே சமயத்தில் உன்னைத் தன் இதயத்தில் வைத்துக் கொண்டாடும் அந்த அன்புத் தெய்வமாகிய உன் லக்ஷ்மியை என்றென்றும் மறந்து விடாதே!" என்று படத்திலுள்ள மஹாலக்ஷ்மியே நேரில் வந்து கூறுவது போல் தோன்றியது வைதேகிக்கு. இந்தச் சிறு வாக்கியங்கள் மீண்டும் மீண்டும் அவள் மனத்திரையிலே புகுந்து படம் பிடித்துக் காட்டின.

வைதேகி, லக்ஷ்மி இவர்கள் பெயரும் உடலும் வேற்றுமையாக இருந்தனவே ஒழிய அவர்கள் உள்ளங்கள் ஒற்றுமையாக இருந்தன. வைதேகியின் சொந்த சிற்றப்பா மகள் லக்ஷ்மி. அவர்களது திருமணம் நடக்கும் வரைக்கும் பாகம் பிரிக்கப் படாமலிருந்தமையால் இவர்களிருவரும் ஒரே வீட்டில் ஒன்றாகவே இருந்து வந்தனர். கிராமத்தில் இருந்தமையால் குளத்துக்குச் சென்று தண்ணீர் கொண்டு வரும் பொழுதும், பாத்திரங்கள் தேய்க்கும் பொழுதும், உண்ணும் பொழுதும், உறங்கும் பொழுதும், ஏன்! பொழுது போகாத போது பல்லாங்குழி, தாயக்கட்டம் ஆடும் பொழுதும் கூட இவர்கள் ஒன்றாகவே சேர்ந்து இருப்பார்கள்.

வைதேகி கொஞ்சம் முன் கோபமுள்ளவள். சிறு வயதில் ஒவ்வொரு சமயம் விளையாட்டுச் சண்டையில் கோபித்துக் கொண்டு லக்ஷ்மியை அடித்தும் விடுவாள். ஆனால் லக்ஷ்மி வைதேகி அடித்ததைப் பற்றிக் கொஞ்சம்கூட மனங் கோணாது முன்போலவே பழகுவாள். இவர்களது உறவு முறை எப்படி வலுத்திருந்ததோ அதே மாதிரி அவர்களது நட்பும் வளர்ந்தது.

ஒரு சமயம் வைதேகிக்குப் பத்து வயதாக இருக்கும் பொழுது கடும் காய்ச்சல் வந்தது. ஜுரம் வந்து மீண்டும் வைதேகி படுக்கையை விட்டு வெளியில் உலாவும் வரையில் லக்ஷ்மி அவள் படுக்கையின் அருகிலேயே அமர்ந்து இரவு பகல் தூங்காமல் வைதேகியைக் கவனித்து வந்தாள். அந்தச் சம்பவம் வைதேகியின் மனத்தில் இன்றைக்கும் நினைவுறுத்திக் கொண்டே இருக்கிறது.

இவர்களது திருமணங்களும் ஒரே நாளில் இவர்கள் இருவர் எதிர்பார்த்தது போல் நடந்தன. வைதேகிக்குக் கணவனாக வாய்த்த பார்த்தசாரதி பி. ஏ. படித்துப் பட்டம் பெற்று ஒரு கம்பெனி உத்தியோகத்தில் இருந்தான். அக்கா, தங்கை, அம்மா, அப்பா என்ற 'பிச்சுப் பிடுங்கல்'கள் கிடையாது. திருமணமான ஒரு சில நாட்களிலேயே சென்னையில் தனிக் குடித்தனமும் அவன் வைத்து விட்டான்.

ஆனால் லக்ஷ்மிக்கு வாய்த்த இடம் எதிர்மாறாக இருந்தது. அவளது கணவன் சென்னையில் மாம்பலத்தில் ஒரு 'ஸெகண்டரி கிரேட்' உபாத்தியாயராக இருந்தான். அவனது சம்பாத்தியத்தை நம்பி அவனது கிழப் பெற்றோர், கல்யாணமாகாத இரு தங்கைகள், பத்தாவது படித்துக் கொண்டிருக்கும் அவன் தம்பி, இத்தனை பேர்கள் இருந்தார்கள். இவ்வளவு பேரையும் காப்பாற்றும் பொறுப்பு அவன் தலையில் விழுந்திருந்தது.

வைதேகியின் கணவன் பார்த்தசாரதி தன் மனைவியைக் கண்ணின் இமை போல் காத்து வந்தான். ஆசையுடனும், அன்புடனும் நடந்து கொள்வது மட்டுமல்லாமல் அடிக்கடி சினிமாவுக்கும், டிராமாவுக்கும் கூட்டிச் செல்வான்.

கல்யாணமாகித் தனிக் குடித்தனம் வைத்த புதிதில் கம்பெனியில் அவனுக்கு 'உத்தியோக உயர்வு' கிடைக்கும் போலிருந்தது. அதற்காக மூன்னூறு ரூபாய் 'டிபாஸிட்' கட்டத் தேவையாக இருந்தது. அதற்காகத் தன் மனைவியைத் தூண்டி 'மாமியார், மாமனார் மூலமாகப் பணம் கேட்டால் கிடைக்குமா!' என்று கேட்டான். ஆனால் வைதேகி அந்தக் கேள்விக்குப் பதில் கூறாது தன் கழுத்திலிருந்த சங்கிலியை எடுத்துக் கொடுத்து இதனை வைத்துப் பணம் வாங்கி முன் பணம் கட்டும்படியும், பணம் வரும்பொழுது நகையை மீட்டுக் கொள்ளலாம் என்றும் சொல்லிக் கொடுத்து விட்டாள். பார்த்தசாரதி எவ்வளவு மறுத்துக் கூறியும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை வைதேகி.

வெகு சீக்கிரத்திலேயே பார்த்தசாரதிக்கு உதவி மானேஜர் வேலை கிடைத்தது. அந்த மகிழ்ச்சிக்கு அறிகுறியாக வெகு சீக்கிரத்திலேயே பார்த்தசாரதி தன் மனைவி கொடுத்த ஒற்றை வடச் சங்கிலிக்குப் பதிலாக இரட்டை வடச்

சங்கிலியும், ஒரு வைர மோதிரமும் வாங்கி அணிவித்தான். உதவி மானேஜர் ஆகிவிட்ட பெருமிதத்தில் ஒரு வீட்டில் தனிப் பகுதியில் இருந்து வந்த அவர்கள் வெகு சீக்கிரத்திலேயே மாம்பலத்தில் தனியாக ஒரு வீட்டை அமர்த்திக் கொண்டு குடியும் வந்து விட்டனர்.

வைதேகி அடிக்கடி லக்ஷ்மியின் வீட்டுக்குப் போய் அவளுடன் பேசிவிட்டு வருவாள். ஒரு நாளாவது லக்ஷ்மி வீட்டுக்குப் போகாவிட்டால் என்னமோ போல் இருக்கும். லக்ஷ்மியைத் தன் வீட்டுக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டாலும் லக்ஷ்மி அடிக்கடி வராமல் வாரத்துக்கு ஒரு முறை இரு முறை வந்து தங்கள் குடும்பச் சிரமத்தைச் சொல்லிக் கஷ்டப்படுவாள். அத்துடன் வைதேகி, லக்ஷ்மி படும் சிரமத்தை அறிந்து சிறு உதவி புரிந்தாலும் லக்ஷ்மி வாங்க மறுத்து விடுவாள்.

லக்ஷ்மியின் கணவன் ராமானுஜம் சரியாகச் சம்பளத்தைக் கொடுப்பதில்லை என்றும், பாதிப் பணத்தைக் குறுக்கெழுத்துப் போட்டிகளில் கட்டி விடுகிறார் என்றும் சொல்லக் கேட்டு வைதேகியின் மனம் பாகுபோல் உருகும்.

ஒரு நாள் வைதேகி தன் சகோதரி லக்ஷ்மியைக் கோயிலில் சந்தித்தாள். எப்படியோ வற்புறுத்தித் தன் வீட்டுக்கு வந்து தான் போக வேண்டுமென்று பிடிவாதம் செய்து லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு வந்தாள் வைதேகி.

அன்றும் பேச்சு வாக்கில் லக்ஷ்மி தன் குடும்ப நாவலிலிருந்து ஒரு சிறு அத்தியாயத்தை வாய் தவறி வைதேகியிடம் கூறி விட்டாள். தன் கணவன் இவ்வளவு காலம் குறுக்கெழுத்துப் போட்டிகளில் மட்டும் பணத்தைச் செலவழித்து வந்தாரென்றும் இப்பொழுது சீட்டாட்டத்திலும் ஈடுபட்டிருக்கிறாரென்றும், வாங்கும் சம்பளத்தை வீட்டுக்குக்கொண்டு வருவதில்லையென்றும் கூறினாள்.

வைதேகிக்குத் தன்னுடன் வளர்ந்த சகோதரி, தன் மேல் பாசம், நேசம், பிணைப்பு, பிரியம் இத்தனையும் கொட்டி யிருக்கும் லக்ஷ்மி கஷ்டப்படுவது கண்டு அவள் கணவன் மேல் ஆத்திரமும், லக்ஷ்மியின் மேல் அனுதாபமும் ஏற்பட்டன.

அப்பொழுது தான் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய பார்த்தசாரதி தன் வீட்டில் மற்றொரு புதிய குரல் கேட்கவே வெளியே நின்று கொண்டு அவர்கள் பேசுவதை அறிய நினைத்தான்.

"லக்ஷ்மி! இவ்வளவு நாட்கள் நான் கொடுக்கும் உதவிகளைப் பெறுமல் தட்டிக் கழித்துக் கொண்டு வந்தாய். உன் துன்பம் என் இதயத்தைப் பிளக்கிறது. இதோ இந்தப் பையில் ஒரு வீசை காப்பிக் கொட்டையும் மூப்பது ரூபாய் பணமுடிப்பும் வைத்திருக்கிறேன். இதனை மறுக்காமல் ஏற்றுக் கொள்."

"வைதேகி! இப்படி நீ எனக்குக் கொடுப்பது தவறு. இது உன்னுடைய சொந்த வீடானாலும் உன்னுடைய கணவனுக்குக் கீழ் இருப்பதை நினைவில் வைத்துக் கொள். உன் கணவர் இதனைக் கண்டால் என்ன நினைப்பார்!" என்றாள் லக்ஷ்மி.

"லக்ஷ்மி! நான் கொஞ்சம் நல்ல நிலையில் இருப்பதால் தானே தருகிறேன். நீ இதனைப் பெற மறுத்தால் நான் உன் வீட்டுக்கே வர மாட்டேன். அதுவும் அடுத்த மாதம் நடக்கவிருக்கும் உன் குழந்தை முரளியின் ஆண்டு நிறைவுக்கு வர மாட்டேன். என் கணவரைப் பற்றித் தவறாக நினைக்காதே. நான் உனக்கு இதனைக் கொடுப்பது பற்றிக் கணவரிடம் சொல்ல மாட்டேன். இது சத்தியம்" என்றாள் வைதேகி.

வைதேகியின் வர்புறுத்தலின் பேரில் லக்ஷ்மி பையை எடுத்துக் கொண்டு கிளம்பினாள். அது வரையில் தலைமறைவாக நின்றிருந்த பார்த்தசாரதி வீட்டினுள் நுழைந்தான். வைதேகியிடம் இதனைப் பற்றி அவன் பிரஸ்தாபிக்கவே யில்லை. ஆனால் வைதேகியின் உள்ளம் மட்டும், தன் கணவர் பார்த்து விட்டாரோ என்று பயந்தது.

காலச் சக்கரம் தன் வேலையைச் சரிவரச் செய்து கொண்டிருந்தது. வைதேகியின் அத்தை மகள் மீனுவுக்குக் காஞ்சிபுரத்தில் அடுத்த ஏழாம் தேதி கலியாணம் என்று அவள் அத்திம்பேர் வந்து அழைத்திருந்தார்.

ஆனால் வைதேகி போகக்கூடிய நிலையில் இல்லை. நிறை மாதக் கர்ப்பிணி. தன் அம்மாவை வேறு உதவிக்கு வருமாறு அழைத்திருந்தாள். இருந்தாலும் தன் கணவரையாவது போய் விட்டு வந்தால்தான் தன் அத்தைக்குத் திருப்தியாக இருக்கும் என்று எண்ணித் தன் கணவரிடம் சொல்லிப் போகும்படி சொன்னாள். பார்த்தசாரதியும் தனக்கும் அரக்கோணத்தில் கொஞ்சம் வேலை இருக்கிறதென்றும் கலியாணத்துக்குப் போய்விட்டு அப்படியே தன் வேலையையும் பார்த்து விட்டு வருவதாகவும் சொன்னான்.

அன்று கடைத் தெருவுக்குப் போய்க் காய்கறிகள் வாங்கிக் கொண்டு திரும்புகையில் வைதேகி லக்ஷ்மியைச் சந்தித்தாள்.

"என்ன லக்ஷ்மி! நம் மீனு கல்யாணம் காஞ்சிபுரத்தில் நடக்கிறதாமே! நீ என்று போகப் போகிறாய்!" என்று கேட்டாள் வைதேகி.

"எப்படிப் போகிறது, வைதேகி! கையிலும் கழுத்திலும் இல்லாமல் போவதென்றால் அவமானமாக இருக்கிறது."

"லக்ஷ்மி! இதற்காகவா போவதற்குத் தயங்குகிறாய்! நான்தான் போக முடியாதென்றால் நீயாவது போய்விட்டுத்தான் வர வேண்டும். என்னுடைய சங்கிலியைப் போட்டுக் கொண்டு போ" என்று சொல்லிக் கொண்டே லக்ஷ்மியின் பதிலை எதிர் பாராமல் தன் சங்கிலியை எடுத்து லக்ஷ்மியின் கழுத்தில் அணிவித்தாள். லக்ஷ்மி எவ்வளவோ மறுத்தும் வைதேகி செவிசாய்க்கவே யில்லை.

பார்த்தசாரதியும் கல்யாணத்துக்குக் கிளம்பி விட்டான். வைதேகியும் தன் கணவரைப் பத்திரமாகப் போய் விட்டு வரும்படி சொல்லி வழி அனுப்பினாள். லக்ஷ்மியும் அன்று மாலை வண்டிக்குத் தான் போகிறாளென அறிந்தாள்.

இரண்டு தினங்கள் சென்றன. திருமணத்தன்று சாயந்திரமே வருவதாகச் சொல்லிவிட்டுப் போன தன் கணவர் வராதது கண்டு, வைதேகி கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள்.

யாரோ வரும் அரவம் கேட்கவே திரும்பிப் பார்த்தாள். லக்ஷ்மி சோகம் நிறைந்த முகத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

"என்ன லக்ஷ்மி! ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்! திருமணமெல்லாம் நன்றாய் நடந்ததா! இப்படி உட்கார். மீனு என்ன சொன்னாள்! என் கணவர் எப்பொழுது வருகிறார் என்று தெரியுமா!"

ஆனால் லக்ஷ்மி அதற்கு நேர் விடை கூறாமல், "வைதேகி! உனக்கு நான் பெரிய தீங்கு விளைவித்து விட்டேன்" என்று மென்று விழுங்கிக் கொண்டே பதில் சொன்னாள்.

"என்ன லக்ஷ்மி! நீ சொல்வது ஒன்றும் எனக்குப் புரியவில்லையே!"

"வைதேகி! உன்னுடைய தங்கச் சங்கிலியைக் காணாமற் போக்கி விட்டேன்."

## சிவானந்த லஹரி

பராசக்தியின் மகிமையை விளக்க ஸௌந்தர்ய லஹரி என்னும் அற்புத நூலையும், சிவபெருமானின் மகிமையை விளக்க, சிவானந்த லஹரி என்னும் புனித நூலையும் இயற்றினார் ஸ்ரீ ஆதி சங்கரர். சிவஞானச் செல்வர்களால், சிவானந்த லஹரி இணையற்ற அத்வைத ஞான சாஸ்திரம் என்று கொண்டாடப்பட்டு வருகிறது. மேற்படி நூலுக்கு, தாரா காடு ஸ்ரீ கிருஷ்ணய்யர் பத்மநாபன் அவர்கள் வேத சாஸ்திரப் பிரமாணங்களுடன் விரிவான வியாக்கியானம் தமிழில் எழுதியிருக்கிறார். தமிழ் விரிவுரை, மூல நூலை அறியப் பெருதவியாக இருக்கிறது.

பிரசுரித்தவர்: கிரி பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை - 5. விலை: ரூ. 6—0—0.

---

"என்ன! என் தங்கச் சங்கிலியையா!" அந்த வார்த்தைகள் அவளையுமறியாமல் அவள் வாயினின்று வெளி வந்தன.

"ஆம் வைதேகி! திருமணம் நடந்த மறுநாள் வெள்ளிக் கிழமையாதலால் எல்லோரையும் என்னைப் போல் நினைத்து ஸ்நானம் செய்யும்படி அத்தை வற்புறுத்தினாள். அதனால் சங்கிலியைக் கழற்றி யாரிடமும் கொடுக்க மனமின்றி அறையில் மாட்டியிருந்த என் பையில் போட்டு வைத்திருந்தேன். அந்தப் பையும் ஒரு தடவை நான் இங்கு வந்திருந்த பொழுது நீ கொடுத்ததுதான். வந்து பார்த்தால் சங்கிலியைக் காணவில்லை."

"என்ன அஜாக்கிரதை, லக்ஷ்மி! என் கணவர் வந்து கேட்டால் இதனைப் பற்றி என்ன சொல்வேன்! இரவல் நகை போட்டு அனுப்பினால் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டாமா! இப்பொழுது என் கையிலும் பணமில்லையே!"

"வைதேகி! என் மனசு சரியில்லை. நாளைய தினம் உன்னை வந்து சந்திக்கிறேன்" என்று கிளம்பினாள் லக்ஷ்மி. ஆனால் வைதேகியின் சொல்லம்புகள் அவள் இதயத்தில் புகுந்து தைத்தன.

அதேமாதிரி வைதேகியின் மனசும் ஒரு நிலையில்லை. "ஐயோ! தெரியாத் தனத்தினாலும், அவசரத்தினாலும் லக்ஷ்மியின் மனம் நோகும்படி செய்து விட்டோமே!" என்று ஏங்கித் தவித்தது.

அன்று மாலை, பார்த்தசாரதி என்றுமேயில்லாமல் வெகு அவசரத்துடனும், பரபரப்புடனும் வந்தான். வைதேகிக்குத் தன் விஷயம்தான் அவனுக்குத் தெரிந்து விட்டதோ என்ற பயம் வேறு பிடித்துக் கொண்டது.

"வைதேகி! உன் தங்கச் சங்கிலி எங்கே! உடனே எடு" என்றான்.

"ஏன்! எதற்கு!" என்று பதட்டத்துடன் வார்த்தைகள் வெளி வந்தன.

"இன்றைக்கு என் உயிர் தப்பியதே உன் மாங்கல்ய பலத்தாலும், உன் சகோதரி லக்ஷ்மியின் புருஷனுடைய உதவியினாலும் தான். பஸ்ஸை விட்டு இறங்கி வீட்டுக்கு வரும்பொழுது எதிரே கார் வந்ததை நான் கவனிக்கவில்லை. ஆனால் சட்டென்று ராமானுஜம் எங்கிருந்தோ ஓடி வந்து என்னைப் பிடித்துத் தூரத் தள்ளினார். அவர்மேல் கார் ஏறி விட்டது. நான் ஆஸ்பத்திரியில் அந்தக் காரிலேயே அவரைக் கொண்டு போய் விட்டு விட்டு டிரைவரையும் போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்து விட்டு வந்தேன். ராமானுஜம் மிகவும் அபாயகரமான நிலையில் இருக்கிறார். சில முக்கிய இன்ஜெக்ஷன் மருந்துகளை உடனே வாங்க வேண்டுமென்று டாக்டர் சொன்னார். பாங்கியும் மூடிவிட்டார்கள். அதனால் தங்கச் சங்கிலியாவது வைத்துப் பணம் வாங்கி வைத்தியம் செய்யலாம் என்றுதான் கேட்டேன்" என்றான் பார்த்தசாரதி.

"என்ன! என் சகோதரியின் கணவர் ராமானுஜமா உங்களுக்கு உயிர்ப் பிச்சை அளித்துக் காப்பாற்றித் தாம் தற்பொழுது உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறார்!" என்று கூறிவிட்டு அவள் அதே சமயத்தில் கேவிக் கொண்டே நகை காணாமற் போன விஷயத்தையும் அவனிடம் ஒன்று விடாமல் சொல்லி விட்டாள்.

"சரி! இந்தப் பையைக் காலி செய். பழங்கள் வாங்கிச் செல்ல வேண்டும்" என்று துரிதப்படுத்தினான் பார்த்தசாரதி.

கணவர் கொண்டு வந்த பையை உதறிய வைதேகி, "ஆஹா!" என்று கத்தி விட்டாள். காரணம், அந்தப் பையினின்று அவளுடைய தங்கச் சங்கிலி கீழே விழுந்ததுதான்.

பார்த்தசாரதி விளக்கினான்.

"இப்பொழுதுதான் எனக்கு விஷயம் விளங்குகிறது. கல்யாணத்துக்குப் போனபொழுது ராமானுஜத்தின் தம்பியிடம் பையைக் கொடுத்து உள்ளே வைக்கச் சொன்னேன். அவன் உன் லக்ஷ்மியின் பையுடன் சேர்த்து ஆணியில் மாட்டியிருக்கிறான். திருமண கலாட்டாவில் லக்ஷ்மி என் பையைத் தன்னுடைய பை என்று நினைத்து இதில் தங்கச் சங்கிலியைப் போட்டிருக்கிறாள்."

"ஐயோ! லக்ஷ்மியின் மனசு நோகும்படி செய்து விட்டேனே! இதற்கு என்ன பிராயச்சித்தம் செய்வேன்!" என்று ஏங்கினாள்.

"ஒன்றும் செய்ய வேண்டாம் நீ. நான் செய்யத் தீர்மானித்து விட்டேன். ராமானுஜத்துக்கு உடம்பு குணமானதும் ஆசிரியர் வேலையை ராஜினாமா செய்யச் சொல்லிவிட்டு, புதியதாக அரக்கோணத்தில் ஆரம்பிக்கப் போகும் எங்கள் கம்பெனிக்குக் கிளை மானேஜர் வேலை வாங்கிக் கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்!"

"என் கணவருக்கு எப்படி இருக்கிறது!" என்ற குரல் கேட்கவே தம்பதிகள் திரும்பிப் பார்த்தனர். லக்ஷ்மிதான் நின்று கொண்டிருந்தாள். அவள் கையில் அவளுடைய குழந்தையின் தங்கக் காப்புகளும், செயினும், மூன்று பத்து ரூபாய் நோட்டுகளும் இருந்தன.

"வைதேகி! இதனைப் பெற்றுக் கொண்டு வேறு ஒரு சங்கிலி செய்து கொள்" என்றாள்.

"என்ன லக்ஷ்மி! என்ன உளறுகிறாய்! என் சங்கிலியைத்தான் என் பையில் போட்டு அனுப்பி விட்டாயே! நீ சாதாரண லக்ஷ்மி அல்ல. என் கணவரின் உயிரைக் காப்பாற்றிய அந்தத் தீர புருஷரின் பத்தினி. அன்புத் தெய்வம்" என்று லக்ஷ்மியை அணைத்துக் கொண்டாள் வைதேகி.

"என்ன வைதேகி! வெள்ளிக்கிழமை அதுவும், சங்கிலியைப் பிடித்துக் கொண்டு லக்ஷ்மி படத்தின் முன் என்ன செய்கிறாய்! கோயிலுக்குப் போய் விட்டு வரலாம், கிளம்பு" என்று ஆபீஸிலிருந்து வந்த கணவனின் குரல் கேட்டுத் திரும்பினாள்.

"இல்லை! நம் லக்ஷ்மியின் நினைவு வந்தது. அந்தச் சம்பவத்தை நினைத்துப் பார்த்தேன்" என்றாள் வைதேகி, கண்களிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டே. அது ஆனந்தக் கண்ணீரா, அல்லது துக்கக் கண்ணீரா என்று தெரியவில்லை.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 27. கங்கையைத் தாண்டினர்!

தமஸா நதிக்கரையில் படுத்து உறங்கின அயோத்தி நகரவாசிகள் காலையில் எழுந்து பார்த்தார்கள். ராமனையும் தேரையும் காணாமல் பிரமித்து இங்குமங்கும் தேடிப் பார்த்துத் தேர்ச் சக்கரத்தின் சுவட்டைப் பின்பற்றிப் போய் மறுபடி அயோத்திக்குப் போகும் வழியோடு அது கலந்து போனதைப் பார்த்து ஏமாற்றமடைந்தார்கள். நகரத்துக்குத் திரும்பித் தத்தம் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். கைகேயியைப் பலவாறாக நிந்தித்துத் திருப்தி யடையப் பார்த்தார்கள். ராமனை யிழந்த நகரம் அழகை யிழந்து துயரத்தில் மூழ்கிற்று.

* * *

விடிவதற்கு முன்னமே புறப்பட்டுப் போன ரதம் வனத்தில் வெகு தூரம் சென்று விட்டது. பல நதிகளைக் கடந்து கோசல தேசத்தின் தெற்கு எல்லையை நோக்கிச் சென்றார்கள். ராமன் சுமந்திரனோடு பேசிக் கொண்டே போனான்: "நான் மறுபடியும் சரயூ நதிக்கரை வனத்தில் என்று வேட்டை யாடுவேனோ? வேட்டை யாடுவது சரியா? அளவுதான் அத்தகைய காரியங்களில் அரச குமாரர்கள் ஈடுபட வேண்டும். அளவுக்கு மிஞ்சிப் போனால் அது கெட்ட வழக்கமாகும்."

இம்மாதிரி பொழுது போக்காகப் பல விஷயங்கள் பேசிக் கொண்டே அவர்கள் சென்றார்கள்.

கோசல நாட்டின் தென் எல்லையைச் சேர்ந்ததும் ராமன் தேரை நிறுத்தி அயோத்தி நகரத்தை, திசை நோக்கி வணங்கினான்.

"நகரங்களுக்குள் மாணிக்கமே! இக்ஷ்வாகு வம்சத்தின் தலை நகரமே! என் வனவாச விரதம் முடிந்து தந்தை தாய்களையும் உன்னையும் மறுபடி தரிசிப்பேனா? நீ அந்தச் சந்தோஷத்தை



"எனக்குத் தர வேண்டும்" என்று பிரார்த்தனை செலுத்தினான்.

தேர் கங்கை நதிக்கரையை அடைந்தது. நதியின் அபார அழகை அனுபவித்துக் கொண்டே சென்றார்கள். மிக ரம்மியமான ஓர் இடத்தைக் கண்டதும் ராமன், "இவ்விடம் இன்று இரவு தங்கலாம்" என்றான்.

குதிரைகளை அவிழ்த்து விட்டு ஒரு மரத்தடியில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அந்தப் பிரதேசத்துக்கு அதிபதி குகன். ராமன் வருவான் என்பதைத் தன்னுடைய ஆட்களால் முன்னாலே அறிந்த குகன் தன் பரிவாரங்களுடன் ராம லக்ஷ்மணர்களைத் தரிசிக்க வந்தான்.

குகன் ராமனிடம் அபார அன்பு கொண்டவன். கங்கைக் கரை நிஷாதர்களுக்குத் தலைவன். மிக்க செல்வாக்கும் புகழும் பெற்ற ஸ்தலபதி. தூரத்தில் வரும் போதே குகனைப் பார்த்துச் சக்கரவர்த்தித் திருமகனும் லக்ஷ்மணனும் எழுந்து அவனிடம் சென்றார்கள். குகன் ராமனை ஆலிங்கனம் செய்து வரவேற்றான்.

"இந்தத் தேசம் உனதாகவே வைத்துக் கொள்வாய். அயோத்தி எப்படியோ அப்படியே இதுவும் உன்னுடையதாகும். இத்தகைய அதிதி எவனுக்குக் கிடைப்பான்? இது என் பாக்கியம்" என்றான் குகன்.

குகனுடைய உபசாரம் அபாரமாக இருந்தது. அவனுடைய ஆட்கள் பல வித உணவுப் பதார்த்தங்களும் பணியாரங்களும் கொண்டு வந்து வைத்தார்கள். "என் ராஜ்யத்தில் நீ சுகமாக இருக்கலாம். பதினான்கு வருஷங்களும் கழிக்கலாம். ஒன்றும் குறைவு இருக்காது. உன்னை உபசரிப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும், அருள்வாய்!" என்றான்.

ராமன் அவனை இறுகத் தழுவி, "அப்பனே! உன் அன்பு எனக்குத் தெரியும். உன் உபசாரத்தை இங்கே பெற்றேன். அதற்கு மேல் நான் விரதத்தால் கட்டுப்பட்டு நிற்கிறேன். வனவாசம் செய்ய வந்திருக்கிறேன் அல்லவா? இதோ, இந்தக்



குதிரைகள், என் தந்தைக்கு இவை மிகப் பிரியமான குதிரைகள். அவற்றிற்கு நல்ல தீனி ஏற்பாடு செய்வாய். நாங்கள் வனவாசத்துக் குரிய உணவைப் புசித்துப் படுக்கிறோம்'' என்றான்.

அன்று அந்த மரத்தடியில் ராமனும் சீதையும் தங்கினார்கள். லக்ஷ்மணன், குகனுடனும் சுமந்திரனுடனும் பேசிக் கொண்டே அன்று இரவும் தூங்காமலே கழித்தான்.

குகன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான் :

'' அப்பனே, நீ படுத்துத் தூங்குவாய். அதோ உனக்கு இடம் சரியாகப் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த வனத்தில் என்னை யறியாமல் யாரும் ஏதும் செய்ய முடியாது. என்னுடைய ஆட்கள் மிகக் கவனமாகக் காவலிருக்கிறார்கள். ராமனைப் பற்றிக் கவலையோ பயமோ வேண்டியதில்லை- தூங்குவாய்.''

இதைக் கேட்டு லக்ஷ்மணன், ''குகனே! எனக்குத் தூக்கம் வரவில்லை. அதோ சீதை, ஜனக மகாராஜனின் மகள், தசரத சக்கரவர்த்தியின் மருமகள் தரையில் படுத்திருக்கிறாள். மூன்று உலகமும் யுத்தம் செய்து வசமாக்கிக் கொள்ளும் சக்தி வாய்ந்த புருஷோத்தமன் புல் தரையின் மேல் படுத்துக் கிடக்கிறான். இதைப் பார்த்தும் எனக்கு எப்படித் தூக்கம் வரும்?' என்றான்.

''ராமனை வனத்துக்கு அனுப்பி விட்ட அயோத்தி நகரம் எவ்வாறு பிழைக்கும்? அரண்மனை அந்தப்புரம் அழு குரலால் நிரம்பும். கௌசல்யையும் என் தாயும் இப்போது உயிருடன் இருக்கிறார்களோ, உயிர் நீத்தார்களோ, எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. 'வனம் போ' என்று தந்தை எளிதில் சொல்லி விட்டாரே யொழிய ராமனை அனுப்பிவிட்ட பின் அவர் உயிர் வைத்திருப்பது சந்தேகம். அவர் இறந்தால் பிறகு எங்கள் தாய்மார்களின் கதியும் அதுவே. அந்திமக் கடன் செய்வதற்குக் கூட நாங்கள் கொடுத்து வைக்க வில்லை. எங்களுடைய வனவாச விரதம் முடிந்து நாங்கள் திரும்பி ஊர் போய்ச் சேரும் போது, தந்தையும் தாய்மார்களும் உயிருடனிருந்து சந்தோஷப் படுவார்களா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகத் தான் இருக்கிறது'' என்றான்.

இப்படித் துயரம் நிறைந்த மொழிகளை மனமுருகிப் பேசினான் லக்ஷ்மணன். லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட குகனும் கண்ணீர் விட்டான். இரவெல்லாம் இவ்வாறு பேசிக் கொண்டு கழித்தார்கள்.

அதிகாலையில் ராமன் எழுந்து லக்ஷ்மணனுக்குச் சொன்னான் :

''நதியைத் தாண்டிப் போக வேண்டும். குகனுக்குச் சொல்லி இந்த அகலமான நதியைக் கடப்பதற்குப் பெரிய ஓடம் ஏற்பாடு செய்யும்படி சொல்லுவாய்!'' என்றான்.

அவ்வாறே குகனும் தன் காரியஸ்தர்களுக்குச் சொல்லி ஒரு நல்ல ஓடத்தை அமைத்து ராமனுக்குத் தெரிவித்தான். ஆயுத பாணிகளாக ராமலக்ஷ்மணர்களும் சீதையும் நதியை நோக்கிச் சென்றார்கள்.

சுமந்திரன் ராமனை வணங்கி, ''இனி நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

ராமன் சுமந்திரன் தோளின் மேல் தன் கையை வைத்து, ''சுமந்திரரே, சீக்கிரம் அயோத்தி திரும்பிச் செல்லுவீர். அரசன் பக்கத்திலிருப்பீர். அவரை நன்றாகப் பார்த்துக் கொள்வீர்'' என்றான்.

''உலகத்தில் சீலம், அத்தியயனம், நல்ல நடத்தை இவை யெல்லாம் ஒரு பயனும் இல்லை என்பதை இப்போது அறிந்தேன். நீயும் தம்பியும் வைதேஹியுடன் வனத்தில் வசிக்கப் போகிறீர்களே! எங்களுக்கு இனி என்ன கதி? கைகேயி ஆட்சியில் நாங்கள் எப்படிப் பிழைப்போம்?'' என்று சொல்லிச் சுமந்திரன் குழந்தை போல் உரக்க அழுதான்.

ராமன் அவன் கண்களைத் துடைத்து, ''எங்கள் குலத்துக்கு உத்தமமான நண்பர் உம்மைப் போல் வேறு யாரும் இல்லை. தந்தை துக்கம் அடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உம்முடைய கடமை. மனம் உடைந்து போயிருக்கிறார். அவர் என்ன சொன்னாலும் அது சரியா அல்லது கைகேயியைத் திருப்தி செய்வதற்காகச் சொல்லுகிறாரா என்று விசாரியாமல் அவர் சொன்னபடி செய்து அவருடைய மனத்தில் கஷ்டம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். வனத்திலிருக்கும் எங்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நாங்கள் பதினான்கு வருஷம் சுலபமாகக் கழித்துத் திரும்பி வந்து விடுகிறோம் என்று நான் சொன்னதாக அரசனிடமும் எல்லாரிடமும் சொல்ல வேண்டும். பரதனைச் சீக்கிரம் தருவித்து அரச பதவியில் அமர்த்தி, எங்கள் அன்பைச் சொல்லி, பெரிய அன்னைகள் இருவரையும் தன்

ளைப் பெற்ற தாய் கைகேயியைப் போலவே பார்த்துக் கொள்ளச் சொல்ல வேண்டும்'' என்றான்.

இவ்வாறு ராமன் சொன்னான். ஆனாலும் சுமந்திரன் துக்கம் தாளாமல், ''நான் எப்படித் திரும்பிப் போய், என்ன சொல்லி, யாரைச் சமாதானப் படுத்துவேன்?'' என்றான். தேரைப் பார்த்து, ''நீ இல்லாமல் சூனியமாக நிற்கும் இந்தத் தேரை நான் எப்படி ஓட்டுவேன்?'' என்று அழுது கொண்டே யிருந்தான்.

ராமன் மறுபடியும் சுமந்திரனுக்கு ஆறுதலும் தைரியமும் சொல்லிக் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு பொறுமையுடன் இருப்பதே அவன் கடமை என்று கூறி அனுப்பினான்.

''குகனே! நீ விரும்பியபடி உன் ராஜ்யத்தில் நான் சந்தோஷமாக இருந்து கொண்டு பதினான்கு வருஷங்கள் கழிக்கலாம். ஆனால் அது நான் பிரதிக்ஞை செய்த வனவாசம் ஆகுமா? தகப்பனார் கொடுத்த வாக்கைச் சத்தியமாக்க நான் அயோத்தியை விட்டு வந்திருக்கிறேன். ஆனபடியால் தாபஸ வாழ்க்கை வாழ வேண்டும். ருசியாகச் சமைக்கத் தெரிந்தவர்கள் பக்குவப்படுத்திய பதார்த்தங்களை நான் தொடக் கூடாது. பழம், கிழங்கு, காய் அல்லது விலக்கப்படாத மாமிசத்தை நாங்களே சம்பாதித்து வேள்வித் தீயில் சுட்டு ஆகாரம் செய்ய வேண்டும்.''

இப்படிச் சொல்லிக் குகனைச் சமாதானப்படுத்தித் தங்கள் தலை மயிரை அவ்விடத்தில் ஆல மரத்துப் பாலால் திரித்து ஜடையாகச் செய்து முடித்துக் கொண்டார்கள்.

சீதையை ஓடத்தில் ஏற்றி உட்கார வைத்து, பிறகு இரு ராஜகுமாரர்களும் ஏறினார்கள். குகன் தன் ஆட்களுக்குச் சொல்லி ஓடத்தைச் செலுத்த உத்தரவிட்டான்.

ஓடக்காரர்கள் ஓடத்தைக் கங்கையில் வேகமாகச் செலுத்தினார்கள். நடு ஆற்றில் சீதை பாகீரதியைத் தியானித்து, ''தேவி! எங்களுடைய விரதத்தை முடித்து மறுபடியும் உன்னைக் கடந்து க்ஷேமமாக ஊர் திரும்ப அருள்வாயாக!'' என்று சொல்லி நமஸ்கரித்தாள்.

பிறகு பேசிக் கொண்டே கங்கையைக் கடந்து அக்கரை அடைந்தார்கள். அங்கே மூவரும் முதல் முதல் வேறு துணையின்றி நின்றார்கள்.

• • •

''லக்ஷ்மணா! நீதான் இனி எனக்குக் காவல் படை!'' என்றான் ராமன். ''நீ முன்னால் செல். சீதை உன்னையடுத்தாற் போல் செல்ல வேண்டியது. நான் உங்கள் இருவருக்கும் பின்னால் வருவேன். வன வாசத்தின் கஷ்டங்கள் சீதைக்கு அதிகமா யிராமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். இனி ஜனக் கூட்டம் கிடையாது. விளையாட்டு வேடிக்கைகள் கிடையாது.''

அன்று ராமனுக்குக் கௌசல்யா தேவியின் நினைவு வந்து ரொம்பவும் துக்கப்பட்டான்.

''லக்ஷ்மணா! நீ திரும்பிப் போய் என்னைப் பெற்ற கௌசல்யா தேவியையும், உன்னைப் பெற்ற சுமித்திரா தேவியையும் பாதுகாத்தல் நலமல்லவா? நான் எப்படியாவது சமாளித்துக் கொள்ளுகிறேன்'' என்றான். இதற்கு லக்ஷ்மணன்,



"மன்னிக்கவும்; நான் அயோத்திக்குத் திரும்பிப் போக முடியாது" என்றான். இது ராமன் எதிர்பார்த்த பதிலே.

* * *

இப்படி அடிக்கடி மானுஷ சுபாவம் தலை யெடுத்துச் சக்கரவர்த்தித் திருமகன் துக்கப் படுவதையும் பேசுவதையும் பார்ப்போம். இதுவே ராமாயணத்தின் அழகு. சர்வ வல்லமை பொருந்திய ஈசுவரன் ஈசுவரனாகவே இருந்து எல்லாம் செய்து முடித்து விட்டால் பிற்பாடு அவதாரம் ஏது? சாமான்ய தருமம் நிலை நாட்டுவது ஏது? ஆதி அவதாரங்களுக்கும் பிந்திய அவதாரங்களுக்கும் பேதம் இதுவே. 'ராமாவதாரத்தில் மானுஷ சுபாவத்தின் போக்கும் அதனுடன் சாதாரண' தருமத்தின் விளக்கமும் சேர்ந்து வரும். இதைத்தான் ராமசந்திரன் யுத்தம் முடிந்து சீதை அக்னிப் பிரவேசம் செய்யும் சமயம் சொன்னான்:

**ஆத்மானம் மானுஷம் மன்யே**
**ராமம் தசரதாத்மஜம்**

"நான் என்னைத் தசரதன் மகன் ராமன் என்கிற மனிதனாகத்தான் எண்ணி வருகிறேன். உண்மையில் நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எதற்காகப் பிறந்தேன்?—இந்த விஷயங்கள் எனக்கு எப்படித் தெரியும்? தாங்கள் தான் எனக்குச் சொல்ல வேண்டும்." இவ்வாறு அச்சமயம் ராமனே சொன்னதாக வால்மீகி எழுதியிருக்கிறார்.

* * *

கங்கையின் தென் கரையில் ராமன் துக்கப்பட்டுப் பேசிய போது லக்ஷ்மணன் ராமனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றினான்.

அன்றைய இரவு ஆலமரத்தடியில் கழித்து மறுநாள் காலையில் புறப்பட்டு அஸ்தமிக்கும் சமயம் பரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

அவ்விடம் உபசாரங்களைப் பெற்று "எந்த இடத்தில் நாம் வனவாசம் ஏகாந்தமாகச் செய்ய முடியும்?" என்று முனிவரைக் கேட்டு அவருடைய யோசனையையும் ஆசியையும் பெற்றுச் சித்திரகூடம் சென்றார்கள்.

## கொஞ்சம், நில்!












# பனியன் ஹாஸ்யம்





'' பனியன் 'லூசா' இருக்கே?''

'' வளருகிற சரீரம்தானே, போகப் போக 'டைட்டா' ஆகி விடும்.''

'' பனியனிலேயே ஏக வரி போட்டிருக்கு, நீங்க வேறே விற்பனை வரி போடறீங்களே ?''



*சட்டை* : உங்கள் அண்ணு 'ஸ்வெட்டர்' படா மொரப்புப் பேர்வழியாக இருப்பான் போல் தெரிகிறதே!

*பனியன்* : இல்லே, பார்வைக்கு அப்படி இருக்கான். குளிருக்கு ரொம்ப அடக்கமா இருப்பான் !



'' உங்களுக்குத்தானே பனியன் ? 'வி' நெக்கு பனியன் வேணுமா, 'ரவுண்டு' நெக்கு பனியன் வேணுமா, சொல்லுங்க சார் !''



பாப்பா மலர்

தொடர் கதை

# தங்க மாம்பழம்



## 1. இருட்டு அறை

மாயா மகேந்திரபுரம் என்பது ஒரு பெரிய நகரம். அந்த நகரத்தை வீரசிம்மன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். மாயா மகேந்திரபுரத்துக்குப் பல மைல்களுக்கப்பால் ஒரு பெரிய காடு இருந்தது. அதற்கு வயற்காடு என்று பெயர். மற்றைய காடுகளைப்போல் அந்தக் காட்டில் பெரிய புதர்களோ, மரங்களோ இருக்க வில்லை. காடு என்ற பெயருக்கு ஏற்ப, புலிகளோ, சிங்கங்களோ வேறு துஷ்ட மிருகங்களோ அங்கு வசிப்பதில்லை. எங்கும் வயல்கள்தான் தென்படும். அதுவும் பயிர் செய்து பண்பட்ட வயல்கள் அல்ல. ஒன்றுமே பயிரிட முடியாமல் கட்டாந் தரையாக உள்ள வயல்கள். அதனால்தான் அந்த இடத்துக்கு வயற் காடு என்று பெயரிடப் பட்டிருந்தது.

இரவு நேரங்களில் மாத்திரம் அங்கே ஓநாய்களும் நரிகளும் ஊளை இடுவது தான் பொறுக்க முடியாது. அதுவும் பௌர்ணமி வந்துவிட்டால் ஓநாய்களுக்கும் நரிகளுக்கும் கொண்டாட்டம்தான். கூட்டம் கூட்டமாகக் கூடி ஊளையிடும். அவைகள் ஊளை இடுவது மாயா மகேந்திரபுரத்தில் தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தைகளைக் கூடப் பயமுறுத்தும். அந்த வயற் காட்டில் அதிகமான வீடுகள் இல்லை. அதனால் அங்கு ஜனங்கள் நடமாட்டமும் மிகவும் குறைவு. சில குறவர்கள் மாத்திரம் திறந்த வெளியில் குடிசைகளை அமைத்துக்கொண்டு வசித்து வந்தார்கள். அவர்களில் பெரும் பான்மையோர் கல்லுடைத்து ஜீவனம் செய்பவர்கள்.

மாயா மகேந்திரபுரத்தில் மாய வேலைகள் செய்யக்கூடிய பல மந்திர வாதிகள் இருந்தார்கள். அரசன் வீரசிம்மன் மந்திரவாதிகளின் உதவிகளைக் கொண்டு, அரசாங்க சம்பந்தமான பல காரியங்களைத் தனக்கு மிகச் சாதகமாக நடத்திக் கொண்டு வந்தான்.

வயற்காட்டிலே ஒரு பெரிய கட்டிடம் இருந்தது. அந்தக் கட்டிடம் பார்ப்பதற்குப் பழைய கட்டிடமாகத் தோன்றினாலும் வசிப்பதற்குரிய பல அறைகள் உள்ளே இருந்தன. அவ்வளவு பெரிய கட்டிடத்திலே ஒரு கிழவி மாத்திரம் தனியாக வசித்து வந்தாள். அவளுக்கு வயது சுமார் எண்பது இருக்கும். அந்தக் கிழவி மிகவும் பெயர்பெற்ற மந்திரவாதி என்றும் மாயா மகேந்திரபுரத்திலுள்ள மற்றைய மந்திரவாதிகள் அந்தக் கிழவியிடம் போட்டி போட்டால் மற்ற மந்திரவாதிகள் தான் தோற்றுப் போக வேண்டும் என்றும் யாவரும் பேசிக்கொள்ளுவதுண்டு. ஆனால் ஒன்று; அந்த வயற்காட்டில் வசிக்கும் குறவர்களுக்கு அந்தக் கிழவியைக் கண்டால் பயம். யாரும் அவளிடம் நெருங்க மாட்டார்கள். மந்திரவாதிக் கிழவியிடம் குறவர்கள் நெருங்காமல் இருப்பதற்குச் சில காரணங்களும் உண்டு.

ஒரு சமயம் இரண்டு மூன்று குறவர்கள் கிழவியின் வீட்டுக்கருகில் அடுப்புக்காகச் சுள்ளிகள் பொறுக்கிக் கொண்டிருந்தார்கள். உடனே கிழவி உரக்கச் சத்தமிட்டு அவர்களைத் துரத்தினாள். குறவர்கள் பிடிவாத குணம் படைத்தவர்கள் அல்லவா? கிழவியின் வார்த்தைகளை அவர்கள் கவனிக்காமல் கிழவியின் வீட்டுக்கு அருகில் நின்று கொண்டிருந்தார்கள். சில நிமிஷங்களுக் கெல்லாம் அரண்மனைச் சேவகர்கள் வந்தார்கள். அவர்கள் என்ன சொல்லியும் குறவர்கள் பொருட்படுத்தவில்லை. கிழவியின் வீட்டுக்கு அருகிலேயே நின்று கொண்டிருந்தார்கள். சேவகர்கள் அவர்களைப் பலாத்காரமாக வயற்காட்டை விட்டு அப்புறப் படுத்தினார்கள். பிறகு அக் குறவர்களின் கதி என்ன ஆயிற்றோ தெரியவில்லை.

இந்தச் சம்பவம் அங்கு வசிக்கும் குறவர்களிடம்

ராஜ்

பீதியை உண்டாக்கியது. தினந்தோறும் அரண்மனைச் சேவகர்கள் கிழவியிடம் வந்து ஏதோ பேசி விட்டுச் செல்லுவார்கள். சில சமயம் வீரசிம்மனே இரவில் மாறுவேஷம் அணிந்து கொண்டு கிழவியைச் சந்தித்துப் பேசி விட்டுப் போவது வழக்கம். இதனால் குறவர்களும் வயற்காட்டில் வசிக்கும் மற்றும் சிலரும் அந்த மந்திரவாதிக் கிழவிக்கும் அரசாங்கத்துக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது என்று ஊகித்துக் கொண்டார்கள். அதனால் வயற்காட்டில் வசிக்கும் மற்றையவர் எவரும் கிழவியிடம் நெருங்க விரும்பவில்லை. அப்படி யாராவது தவறிக் கிழவியிடம் பேச நெருங்கினால் கிழவி அவர்களிடம் பேசாமல் 'விர்'ரென்று வாசற் கதவைப் பலத்த சத்தத்துடன் மூடித் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்று விடுவாள்.

அந்தப் பாழடைந்த வீட்டில் அந்த நகரத்திலேயே யாருக்கும் தெரியாத ரகசியம் ஒன்று இருந்தது. இருட்டு அறையிலே பிரபாகரன் என்னும் வாலிபனும் அவன் தங்கை உமாவும் பல வருஷங்களாகக் காவலில் வைக்கப்பட்டிருந்தார்கள். கிழவியும் அந்த வீட்டை விட்டு வெளியே எங்கும் செல்வது கிடையாது. பக்கத்தில் வசிக்கும் குறவர்கள் மாத்திரம் கிழவியின் வீட்டில் என்ன ரகசியம் இருக்கிறது என்று கண்டு பிடிக்க ஆவல் கொண்டிருந்தார்கள். ஆனால் கிழவியிடம் நெருங்க அவர்களுக்குப் போதிய தைரியம் வரவில்லை. அக் குறவர் கூட்டத்தில் மிகவும் தைரியம் வாய்ந்த மூன்று நான்கு குறவர்கள் இருந்தார்கள். அவர்கள் மாத்திரம் தங்கள் இனத்தவரை அவ்வயற் காட்டினின்று அப்புறப் படுத்தியதற்காகக் கிழவியின் ரகசியத்தை எப்படியாவது அம்பலப்படுத்த வேண்டும் என்று நல்ல சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ரகசிய அறையில் அடைபட்டுக் கிடந்த பிரபாகரனும் அவன் தங்கையும் பிறரோடு பேசுவதற்குச் சந்தர்ப்பமே கிடைப்பதில்லை. அவர்களுக்குக் கிழவி ஒருத்தியைத்தான் தெரியும். ஆனால் கிழவியும் அவர்களோடு பேசுவது கிடையாது. அவர்கள் பேசினாலும் அதற்குக் கிழவி பதில் சொல்லுவதும் கிடையாது. இரவில் நாய்களும் நரிகளும் ஊளையிடும் சத்தங்களும் குறவர்கள் ஒருவருக்கொருவர் அடிக்கடி சண்டை போட்டுக் கொள்ளும் சச்சரவுகளும்தான் பிரபாகரனுக்கும், உமாவுக்கும் பழக்கப்பட்ட சத்தங்கள். அவை தவிரக் கிழவியிடம் அரசனோ அல்லது அரசாங்க உத்தியோகஸ்தர்களோ வரும் பொழுது ரகசியமாகப் பேசிக் கொண்ட சில வார்த்தைகள் அவர்கள் காதில் விழும். அவ்வார்த்தைகள் அடிக்கடி பேசப்பட்டன வாதலால் பிரபாகரனுக்கும், உமாவுக்கும் மனப் பாடம் ஆகி விட்டன.




"கல்லறைத் தீவில் வசிக்கும் நாயின் கழுத்தில் இருக்கும் சாவியின் உதவியால்தான் அந்தத் தங்க மாம்பழத்தைத் திறக்க முடியும். தங்க மாம்பழத்தைத் திறந்ததும் அதனுள் இருக்கும் கண்ணாடிக் கூடுகளின் உதவியால்தானே அவர்களைப் பிழைக்க வைக்க முடியும்? இந்தக் கிழவியைத் தவிர அது எவராலும் முடியாது" என்று கிழவி அடிக்கடி சொல்லும் வார்த்தைகளைக் கேட்கப் பிரபாகரனுக்கும், உமாவுக்கும் ஆச்சரியமாயிருந்தது. இந்த வார்த்தைகளின் மர்மம் என்னவென்று அவர்களுக்கு விளங்கவில்லை. அப்படியே விளங்கினால் தான் என்ன? அவர்கள்தான் உலக வெளிச்சத்தையே பார்க்காமல் இருட்டு அறையில் சிக்கிக் கொண்டுதான் தவிக்கிறார்களே!

---

ஒரு நாள் இரவு கிழவி தன் வீட்டை விட்டு அவசர அவசரமாக வெளியே வந்தாள். வாசற் கதவைத் தாளிட்டுப் பெரிய பூட்டு ஒன்றை மாட்டிப் பூட்டினாள். அந்தப் பூட்டை மூன்று முறை சரியாகப் பூட்டி இருக்கிறதா என்று இழுத்துப் பார்த்தாள். பிறகு வீட்டைச் சுற்றிலும் ஒரு முறை மெதுவாகத் தடியை ஊன்றிக் கொண்டே இங்கும் அங்கும் பார்த்த வண்ணமாகவே இருந்தாள். பிறகு மறுபடியும் வாசற் பக்கம் வந்தாள். எல்லாத் திசைகளிலும் இப்படியும் அப்படியுமாகப் பார்த்து விட்டு வடக்குப் பக்கம் நோக்கித் தடியை ஊன்றிக் கொண்டே

மெதுவாக நடந்து சென்றுள். ஒரு நாளும் இல்லாமல் கிழவி அன்று வெளியே போவதைப் பார்த்தார்கள் சில குறவர்கள். கிழவியின் ரகசியத்தை அம்பலப் படுத்துவதற்குச் சரியான சமயம் இதுதான் என்று தைரியமுள்ள மூன்று குறவர்கள் எண்ணினர்கள். அன்று பௌர்ணமி ஆனதால் நிலா வெளிச்சம் நன்ருக இருந்தது. இரண்டு குறவர்கள் மெதுவாக வாசற் பக்கம் பூட்டியிருந்த பூட்டை உடைத்தார்கள். ஒரு குறவன் மாத்திரம் கிழவி எங்கு வந்து விடப் போகிருளோ என்று பார்த்த வண்ணமாக இருந்தான். மற்ற இரண்டு குறவர்களும் பூட்டை உடைத்து விட்டு உள்ளே சென்ருர்கள். அவசர அவசரமாக இங்கும் அங்கும் பார்த்தார்கள். ஒவ்வொரு அறைக்குள்ளும் சென்று பார்த்தார்கள். கடைசியில் ரகசிய அறைக்கருகிலும் வந்தார்கள். ரகசிய அறை மிகவும் கெட்டியான பூட்டால் பூட்டப்பட்டிருந்தது. அப்பூட்டையும் குறவர்கள் உடைத்து அப்பால் எறிந்தார்கள்.



ஒரு நாளும் இல்லாமல் திடீரென்று தாங்கள் இருக்கும் அறையின் பூட்டை யாரோ உடைக்கும் சத்தத்தைக் கேட்ட பிரபாகரன் என்ன பண்ணுவது என்று தெரியாமல் விழித்தான். உமாவும் பயந்து கொண்டே, "இது என்ன அண்ணு, எனக்குப் பயமாக இருக்கிறதே" என்று கூறிப் பிரபாகரனைக் கட்டிக் கொண்டாள்.

"உமா, நீ பயப்படாதே! வேண்டுமென்று யாரோ நம்மை ஏதோ ஆபத்துக்குள்ளாக்கப் பார்க்கிருர்கள். வந்தவர்களிடம் நான் என் முழு பலத்துடன் சண்டை போடுகிறேன். இந்த இருட்டு அறையில் எவ்வளவு காலம் தான் கஷ்டப் பட்டுக் கொண்டிருப்பது? ஒன்று, இந்தச் சண்டையில் நாம் இறப்போம் அல்லது வெளி ஏறுவோம்" என்ருன் பிரபாகரன்.' பிறகு அவனுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. "உமா, இங்கே வா! இந்தக் கதவு மூலையில் ஒளிந்து கொள்ளுவோம். அவர்கள் இக் கதவைத் திறந்து உள்ளே வந்தால் நாம் இருப்பது தெரியாது" என்று உமாவை அழைத்துக் கொண்டு கதவு மூலையில் பதுங்கினன்.

மறு நிமிஷம் கதவு படார் என்று திறக்கப்பட்டது. "அண்ணே, இந்த அறையிலும் ஒன்று மில்லை, திரும்பலாம் வா!" என்ருன் ஒரு குறவன். பிறகு இரண்டு குறவர்களும் கதவைத் திறந்தபடியே வைத்து விட்டு வெளியே செல்ல எத்தனித்தார்கள். அப்பொழுது ஒரு குறவன் "அண்ணே, அந்த அறையில் இருக்கும் இரும்புப் பெட்டியைப் பார்த்தாயா? அதை இப்பவே உடைப்போம். அதனுள் என்ன இருக்கிறது என்று பார்ப்போம்" என்ருன் இன்னெருவன்.

இரும்புப் பெட்டியின் மூடியை உடைத்தார்கள். ஆனல் அந்தப் பெட்டியிலும் ஒன்று மில்லை. ஒரு மாம்பழம்தான் இருந்தது. அதைப் பார்த்த ஒரு குறவன் "ஹி, ஹி, ஹி!" என்று பெரிதாகச் சிரித்தான்.

"ஒரு மாம்பழத்தைக் கொண்டு வந்து பூட்டி அல்லவா வைத்திருக்கிருள்!" என்று சொல்லிக் கொண்டே மாம்பழத்தை எடுக்கப் போனுன் ஒரு குறவன். உடனே மற்ருெரு குறவன், "அண்ணே, அவசரப் படாதே! எப்போது அந்த மாம்பழத்தை வைத்துப் பூட்டி இருக்கிருளோ அந்தக் கிழவி, அது மந்திர மாம்பழமாகத் தானிருக்கும். நம் போதாத வேளைக்கு அதைத் தொட்டு நாம் இரண்டு பேரும் கல்லாக ஆகிவிட்டால் என்ன பண்ணுவது? வா, பாட்டி வருவதற்குள்ளே போய் விடலாம்" என்று இரண்டு குறவர்களும் கிழவியின் வீட்டை விட்டு ஒரே ஓட்டமாக ஓடி விட்டார்கள்.

"அப்பாடி! பிழைத்தோம் அண்ணு" என்ருள் உமா.

"உமா, நம்மைக் கடவுள்தான் இன்று காப்பாற்றினர். இனிமேலும் அவர்தான் காப்பாற்றப் போகிருர். திக்கற்றவர்களுக்ுத் தெய்வம் தானே துணை" என்று

பிரபாகரன் கூறி முடிக்கவில்லை. அதற்குள் உமா, "அண்ணு, இப்பொழுது பாட்டி இங்கு இல்லை என்று தெரிகிறது. கதவுகளும் திறந்து கிடக்கின்றன. ஏன் நாமும் இதைவிட்டு ஓடிவிடக் கூடாது!" என்ருள்.

"ஆமாம். அதைத்தான் நானும் நினைத்தேன். இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளா விட்டால் இந்த இருட்டு அறையிலே கிடந்து நாம் சாகவேண்டியதுதான். சீக்கிரம் கிளம்பு" என்று உமாவின் கையைப் பற்றிக் கொண்டான் பிரபாகரன். பிறகு வாசற் பக்கம் வந்து மெதுவாகக் கிழவி வருகிருளா என்று எட்டிப் பார்த்தான். மறுபடியும் அவன் உள்ளே வந்தான். இங்கும் அங்குமாக ஏதோ தேடிய வண்ணமாக இருந்தான்.



"அண்ணு, என்ன தேடுகிருய்? கிழவி வரப் போகிருள், வா போகலாம்! இங்கே இருக்கும் சாமான்களைப் பார்த்தால் கிழவி ஒரு மந்திரவாதியாக இருப்பாள் போல் தோன்றுகிறது!" எனக் கூறினுள் உமா.

"யாராயிருந்தால் என்ன? எனக்கு வேண்டியது கிடைத்து விட்டது" என்று ஒரு மாம்பழத்தை ஒரு மூலையிலிருந்து எடுத்தான் பிரபாகரன்.

"எங்கே இந்த மாம்பழத்தை அந்தக் குறவர்கள் எடுத்துக் கொண்டு போய் விடுவார்களோ என்று பயந்தேன். இந்தப் பழத்தை மாத்திரம் அவர்கள் எடுத்துக் கொண்டு போயிருந்தால் நான் கட்டிய கோட்டைகள் எல்லாம் தகர்ந்தல்லவா போயிருக்கும்!" என்று கூறினுன் பிரபாகரன்.

"அண்ணு, அது என்ன மாம்பழம்? எனக்குக் காண்பி!" என்ருள் உமா.

"இப்பொழுது வேண்டாம். முதலில் நாம் வெளியே போகலாம்" என்று அவள் கையைப் பிடித்துக் கர கரவென்று இழுத்துக்கொண்டே பாட்டியின் வீட்டை விட்டு வெளியே வந்தான் பிரபாகரன். இது வரையில் இருட்டு அறையில் இருந்த அவர்களுக்குப் பரந்த உலகத்தைப் பார்த்தவுடன் அளவிலா ஆனந்தம் பொங்கிப் பெருகியது.

பிரபாகரனுக்குப் பதினெட்டு வயது இருக்கலாம். நல்ல உயரம். உயரத்துக்கு ஏற்ற பருமன். ஒரு தூய வெள்ளைப் பைஜாமா அணிந்திருந்தான். அவன் போட்டுக்கொண்டிருந்த வெள்ளை ஜிப்பாவும் முழங்கால் வரையில் நீண்டிருந்தது. அவன் தங்கை உமாவுக்கு வயது பதினைந்து இருக்கலாம். பெண்கள் அணிந்து கொள்ளும் மஞ்சள் நிறமுள்ள ஒரு பைஜாமாவை அவள் அணிந்து கொண்டிருந்தாள். மிகவும் நீளமுள்ள ஒரு வெள்ளை ஜிப்பா அணிந்திருந்தாள். ஜிப்பாவுக்கு மேலே இரண்டு தோள் பக்கமும் விழும்படி ஒரு நீலத் துணியைப் போட்டுக் கொண்டிருந்தாள். தன் கூந்தலை இரண்டு பின்னல்களாகப் பின்னித் தொங்க விட்டுக் கொண்டிருந்தாள். அவர்கள் இருவர் முகத் தோற்றங்களும் ஏதோ ஒரு இராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று எடுத்துக் காட்டின. தெருவில் போகிறவர்கள் யாராவது அவர்களைப் பார்க்க நேரிட்டால் அவர்களுடைய வசீகரமான தோற்றங்களைக் கண்டு ஆச்சரியப் படாமல் மேலே போக மாட்டார்கள்.

பிரபாகரன் தான் கிழவியின் வீட்டிலிருந்து கொண்டு வந்த மாம்பழத்தைத் தன் பைஜாமாவின் பையில் போட்டுக்கொண்டான். உமாவின் கையைப் பிடித்துக் கொண்டு நிலா வெளிச்சத்தில் சாலையின் ஓரமாகத் தெற்கு முகமாக வெகு வேகமாக நடந்தான். கொஞ்ச தூரம் சென்றவுடன் உமா, "அண்ணு! எனக்குக் கால் வலிக்கிறது. இந்த மரத்தடியில் உட்கார்ந்துவிட்டுப் போகலாமா?" என்று சோர்ந்து போய்க் கூறினுள்.

"உமா, சத்தம் போடாதே! பாட்டி வந்து நம்மைக் கண்டு பிடித்து மறுபடியும் இருட்டு அறைக்கு அழைத்துக் கொண்டு போய் விடுவாள்" என்ருன் பிரபாகரன். இருட்டு அறை என்று சொன்னவுடனே, "அண்ணு! இனிமேல் இருட்டு அறைக்குப் போக வேண்டாம். நான் உன்னுடன் எத்தனை தூரம் ஆனுலும் நடந்து வருகிறேன்!" என்ருள் உமா. அப்பொழுது இரண்டு மூன்று குதிரைகள் வேகமாக வரும் குளம்புச் சத்தம் கேட்டது. (தொடரும்)

# வீட்டில் செய்யும் நிட்டிங் தொழில்

தர்ம தேவ்
(உதவி டைரக்டர், நெசவுத் தொழில் கமிஷனர் காரியாலயம், பம்பாய்)

நூலைக் கொண்டு பல விதமான உடைகளைப் பின்னுதல், கைத் தொழில்களுக்குள் மிகப் பழமையானது. இந்தத் தொழில் சென்ற பல நூற்றாண்டுகளாக உலகம் முழுதும் பழக்க வழக்கத்தில் இருந்து வருகிறது.

பண்டைய காலத்தில் பழைய ஊசிகளை வைத்துக் கொண்டு கையினால் உடைகளைப் பின்னி வந்தார்கள். எனினும் அந்த உடைகள் மிகவும் நேர்த்தியாகவும் சிறந்த வேலைப்பாடுகளுடனும் இருந்தன. அவை ஐரோப்பாவில் ஆட்சி புரிந்த மன்னர்கள், மகாராணிகளின் மனத்தைக் கவர்ந்தன. அவர்களிடையே பொறாமைக்கும் போட்டா போட்டிக்கும் கூடக் காரணமாயின. அக்காலத்தில் பின்னப்பட்ட, கண்களைக் கவரும் உயர்ந்த உடை நினுசுகள் உலகிலுள்ள பல கண்காட்சிச் சாலைகளிலும் இன்றைக்கும் வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

எலிஸபெத் சகாப்தத்தில் பின்னல் கலை மிகவும் உயர்ந்த நிலையை அடைந்திருந்தது. அது பின்னல் தொழில் நிபுணர்களுக்குப் பொன் போன்ற காலமாய் இருந்ததாகக் கூறப்படுகிறது. அக்காலத்தில் அவர்களுக்குக் கத்தோலிக்கர்கள் உற்சாகமளித்து, பின்னல் தொழிலின் உயர்வைப் போற்றிப் பாராட்டினார்கள். மேற்படி தொழில் கடவுளின் மகத்துவத்துக்குச் சிறந்த சான்று என்றும் உபதேசித்து வந்தார்கள்.

ஆனால் முதலாவது எலிஸபெத் மகாராணி காலத்திலேயே பின்னல் கைத்தொழில் ஆபத்துக்குள்ளாக நேர்ந்தது. அப்போது வில்லியம் லீ என்பவர் உடைகள் பின்னும் யந்திரமொன்றைக் கண்டு பிடித்தார். அதிலிருந்துதான் பிரிட்டனிலும் உலகத்தில் உள்ள மற்ற நாடுகளிலும் கைப் பின்னல் தொழில் மறைந்து யந்திரப் பின்னல் தொழில் வளரத் தொடங்கியது.

இந்தியாவிலும் காஷ்மீர் உடைகள் வெகு காலமாகப் பிரசித்தி பெற்று விளங்கி வந்திருக்கின்றன. பிறகு பின்னல் யந்திரத் தொழிலில் பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்த லூதியானா கீர்த்தி பெறலாயிற்று. காஷ்மீரத்திலிருந்து லூதியானாவுக்குக் குடியேறிய தொழில் நிபுணர்கள் அங்கரைப் பின்னல் கைத்தொழிலுக்குத் தலைமை ஸ்தானமாகச் செய்து விட்டார்கள்.

1910-ம் வருஷம் லூதியானாவில் கால் உறைகள் (Socks) பின்னும் யந்திரங்கள் பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அதிலிருந்துதான் பின்னல் கைத்தொழில் யந்திரத் தொழிலாக மாறத் தொடங்கியது. பல வகையான உடைகள் பின்னும் பல்வேறு யந்திரங்கள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகத் தொடங்கின.

இன்று இந்தியாவில் பெரும்பாலும் மத்திய தர வகுப்பினரே இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஒரு சில பஞ்சு ஆலைகளைத் தவிர, மற்றப்படி பின்னல் தொழில் மத்தியதர வகுப்பாரின் கையிலேயே இருந்து வருகிறது.

1952-ல் பருத்தி நூல் பங்கீடு சர்க்காரின் கட்டுப்பாட்டில் இருந்தபோது, இந்திய சர்க்காரைச் சேர்ந்த நெசவுத் தொழில் கமிஷனர் காரியாலயம் ராஜ்ய சர்க்கார்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தது. அந்தந்த மாகாணத்தில் உள்ள கைத்தறிகள், விசைத்தறிகள், நிட்டிங் யந்திரங்கள் இவற்றின் மொத்தத் தொகையைக் கணக்கு எடுக்க வேண்டும் என்பதே மேற்படி வேண்டுகோள் ஆகும். அந்தந்தத் தொழிலுக்கு எவ்வளவு நூல் தேவை என்பதை நிர்ணயிப்பதற்காகவே அவ்விதம் கணக்கு எடுக்க வேண்டும் என்று கோரப்பட்டது.

அவ்வாறு கணக்கு எடுத்ததில், வீடுகளில் கையினால் இயங்கும் சிறிய யந்திரங்களிலிருந்து மில்களிலும் பெரிய தொழிற்சாலைகளிலும் மின்சாரத்தினால் இயங்கும் பெரிய யந்திரங்கள் வரையில் மொத்தம் இந்தியாவில் 16,865 நிட்டிங் யந்திரங்கள் இருப்பதாகத் தெரிய வந்தது.

இவற்றில் சுமார் 380 யந்திரங்கள் 12 பெரிய மில்களில் இருக்கின்றன. மற்றவை யாவும் வீடுகளில் சிறிய அளவில் தனி நபர்களாலேயே வேலை செய்யப்படுகின்றன. அவைகளின் மூலம் டிராயர்கள், ஜம்பர்கள், மேல் அங்கிகள், குழந்தைக் குல்லாய்கள் முதலிய பல்வேறு சாதனங்கள் உற்பத்தி செய்யப் படுகின்றன.

நிட்டிங் யந்திரத் தொழிலில் இந்தியாவிலே கிழக்கு பஞ்சாப்தான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. அதற்கடுத்தபடியாக மேற்கு வங்காளம், பம்பாய், டில்லி, சென்னை மாகாணங்களைக் குறிப்பிடலாம்.

இந்தியாவில் உள்ள நிட்டிங் யந்திரங்களுக்கு வருஷத்துக்கு மொத்தம் 2 கோடியே 60 லட்சம் பவுண்டு நூல் தேவையாக இருப்பதாய்க் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆனால் மேற்படி யந்திரங்களைக்

கொண்டு வருஷா வருஷம் 8 கோடி பவுண்டு நூல் அடங்கிய சாதனங்களைச் செய்ய முடியும். அத்தனை சாதனங்களுக்கு இந்தியாவில் கிராக்கி இராததாலேயே அந்த யந்திரங்களின் சொந்தக்காரர்கள் அதிகமாக உற்பத்தி செய்வதில்லை. நூல் சுற்றப்பட்ட 'கோன்'கள் வேண்டிய அளவு கிடைக்காததும் நிட்டிங் சாதனங்களை அதிகமாக உற்பத்தி செய்ய முடியாததற்கு முக்கிய காரணம் என்று சொல்ல வேண்டும்.

பருத்தி நூலால் பின்னப்பட்ட சாதனங்களை இந்தியா வெளி நாடுகளுக்கும் ஏராளமாக ஏற்றுமதி செய்து வருகிறது. 1953—54-ல் ஒரு கோடி ரூபாய்க்கு மேற்பட்ட நிட்டிங் சாதனங்கள் இங்கிருந்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன. 1949-ம் வருஷத்திலிருந்து நிட்டிங் சாதனங்களின் ஏற்றுமதி விவரத்தைக் கீழே காணலாம் :

| | | |
|---|---|---|
| 1949—50 | ... | ரூ. 79,44,614 |
| 1950—51 | ... | ரூ. 86,37,025 |
| 1951—52 | ... | ரூ. 1,78,61,464 |
| 1952—53 | ... | ரூ. 98,01 708 |
| 1953—54 | ... | ரூ. 1,21,77,426 |

இந்தியாவில் உற்பத்தி செய்யும் நிட்டிங் சாதனங்களின் தர உயர்வை நிர்ணயிப்பதற்காக ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. அதன் பலனாக, வெளி நாடுகளின் நம்பிக்கையைப் பெறக் கூடியவாறு இந்திய நிட்டிங் சாதனங்களின் தரம் உயருமென்பதில் சந்தேகமில்லை. அதன் காரணமாக ஏற்றுமதி அதிகமாகவும், நிட்டிங் யந்திரங்களின் முழு சக்திக்கும் உற்றவாறு உற்பத்தி அதிகமாகவும் இடம் உண்டாகும்.

* * *

பருத்தி நிட்டிங் தொழிலுக்கு அடுத்தபடியாக கம்பளி நிட்டிங் தொழிலும் மிக முக்கியமானது. இந்தத் தொழிலிலும் பெரும் பகுதி லூதியானவிலேயே நடைபெறுகிறது. இத் தொழிலை நடத்துவோரில் தொண்ணூறு சத விகிதம் பேர் சிறிய அளவில் வீடுகளில் நிட்டிங் சாதனங்களை உற்பத்தி செய்யும் தனி நபர்களே ஆவர். அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் வேலை செய்யும் தொழிலாளர்களின் தொகை இருபதுக்கு மேல் இராது.

லூதியானவில் 6110 நிட்டிங் யந்திரங்கள் இருக்கின்றன. அவற்றில் 4545 சக்கர வடிவ யந்திரங்கள்; மற்றவை வேறு வகையான யந்திரங்களாகும். சக்கர வடிவ யந்திரங்களில் பெரும்பாலானவை இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்படுகின்றன. இது மகிழ்ச்சிக்குரிய விஷயம் என்பதில் சந்தேகமில்லை.

சக்கர வடிவ யந்திரங்கள் பிரபலமாக விளங்குவதற்கு முக்கிய காரணம் அதன் விலை குறைவாக இருப்பதுதான். உதாரணமாக, கையினால் ஓட்டக் கூடிய மேற்படி யந்திரம் 500 ரூபாய்க்கும், மின்சார விசையினால் ஓட்டக் கூடியது 2500 ரூபாய்க்கும் கிடைக்கிறது. ஆனால் Raschal Loom யந்திரம் ஒவ்வொன்றும் 10,000 ரூபாய் விலை ஆகிறது. அது உள்நாட்டில் உற்பத்தியாகும் யந்திரமுமல்ல.

மேற்படி யந்திரங்களுக்குத் தேவையான நிட்டிங் ஊசிகளை இதுவரையில் வெளிநாடுகளிலிருந்தே இறக்குமதி செய்து வந்தார்கள். ஆனால் கூடிய விரைவில் அந்த ஊசிகள் கல்கத்தாவில் உள்ள ஒரு கம்பெனியால் உற்பத்தி செய்யப்படுவதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. நம் நாட்டுக்குத் தேவையான நிட்டிங் ஊசிகளைக் கல்கத்தாவில் உற்பத்தி செய்வதற்கான முறைகளை மேற்படி கம்பெனியார் தீவிரமாக எடுத்துக் கொண்டு வருகிறார்கள்.

நம் நாட்டில் உள்ள நிட்டிங் தொழிலுக்கும் நெசவுத் தொழிலுக்கும் தேவையான நூல்களுக்கு வழி செய்யவும் இப்போது தகுந்த முறைகள் கைக்கொள்ளப்பட்டு வருகின்றன.

இப்போது நம் நாட்டில் இருபதாயிரம் கதிர்கள் இருக்கின்றன. இன்னும் இரண்டொரு வருஷங்களில் மேற் கொண்டு முப்பதாயிரம் கதிர்கள் வந்து சேருமென எதிர்பார்க்கப்படுகிறது. தேவையான நூல் கிடைக்கும் பட்சத்தில் நிட்டிங் சாதனங்கள் மிகவும் மலிவாகக் கிடைக்கும். பிறகு மேற்படி சாதனங்களை வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்ய முடியும்.

நிட்டிங் சாதனங்கள் சுருங்கி விடாமல் தடுப்பதற்குற்ற யந்திரங்கள் இந்தியாவுக்கு அத்தியாவசியமான தேவையாக இருக்கின்றன. ஆனால் அந்த யந்திரத்தின் விலை மிகவும் அதிகமாதலால், நிட்டிங் தொழிலில் சிறிய அளவில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அதை வாங்குவதென்பது முடியாத காரியம். பலர் கூட்டுச் சேர்ந்தே அந்த யந்திரத்தை வாங்குவது சாத்தியமாகும்.

செயற்கை நாரிலிருந்து நிட்டிங் சாதனங்கள் செய்வது இன்னும் பிரபல மடையவில்லை. எனினும் உள் நாட்டில் செயற்கை நார் உற்பத்தி எவ்வளவுக் கெவ்வளவு அபிவிருத்தியடைகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதிலிருந்து உற்பத்தியாகும் சாதனங்களை ஜனங்கள் உபயோகிப்பதும் அதிகமாகும் என்பதில் சந்தேகமில்லை.

# மகாத்மாஜியின் மணிமொழிகள்

இந்தியா தேசத்திலுள்ள அனைத்தும் என்னுடைய உள்ளத்தைக் கவர்கின்றன. சாத்தியமாயுள்ள எல்லா உன்னத லட்சியங்களும் மனிதன் விரும்பத் தக்க அனைத்தும் இந்தியாவில் இருக்கின்றன.

●

அவசியம் செய்ய வேண்டிய எல்லா இயற்கையான வேலைகளும் சுலபம்தான். சரியானபடி செய்ய நீண்ட பழக்கமும் செய்ததையே திரும்பத் திரும்பச் செய்ய வேண்டிய தொல்லையும் இருக்கத்தான் செய்கிறது. சலித்துக் கொள்ளாமல் செய்து கொண்டே இருப்பதில்தான் சுயராஜ்யம் இருக்கிறது. இதுவே யோகம். ஓயாமல் செய்ய வேண்டியிருக்கிறதே என்று யாரும் பயப்பட வேண்டியதில்லை. செய்ததையே திரும்பத் திரும்பச் செய்வதுதான் இயற்கையின் விதி. ஓயாமல் தினந்தோறும் சூரியன் உதிப்பதைப் பாருங்கள். அதே சூரியன் சலித்துக் கொண்டு வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாக உதிக்க ஆரம்பித்தால் நேரக்கூடிய விபரீதங்களையும் எண்ணிப் பாருங்கள்! ஆகவே, ஓயாமல், செய்ததையே திரும்பத் திரும்பச் செய்யும் காரியங்களில், உற்சாகம் ஊட்டுவனவும் இருக்கின்றன; உற்சாகத்தைக் கொல்லக் கூடியவையும் இருக்கின்றன. அவசியம் செய்ய வேண்டிய வேலைகள் புத்துணர்ச்சியும் புத்துயிரும் அளிப்பவையாகும். கலைஞன் தன் கலையைச் சலித்துக் கொள்வதில்லை. நூல் நூற்கும் கலையில் திறமை பெற்றவன், கொஞ்சமும் சலிப்பும் களைப்பும் அடையாமல் தொடர்ந்து நிச்சயம் வேலை செய்வான்.

●

முள் நிறைந்த செடியிலேதான் வனப்பும் வாசனையும் தருகின்ற ரோஜாப் புஷ்பம் மலர்கின்றது. அது போலவே, சொல்லொணாத் துன்பங்களுக்கும் தாங்க முடியாத எதிர்ப்புகளுக்கும் மத்தியிலேதான் உண்மை பூத்து மலருகின்றது.

●

மனித குலத்தின் முதல் தேவை உணவு; இரண்டாவது உடை; பிறகுதான் அறிவு, ஆத்மா முதலியன எல்லாம். உலகத்து மக்களுக்கு உணவை வழங்குகிறவன் விவசாயி; உடையை அளிப்பவன் நெசவுத் தொழிலாளி. விவசாயி தன் இடைவிடாத உழைப்பின் மூலம் நாட்டின் பசிப்பிணியைப் போக்குகிறான்; நெசவுத் தொழிலாளி மக்கட் குலத்தின் மானத்தைக் காப்பாற்றுகிறான். இவை இரண்டும்தான் அடிமைக் கலப்பில்லாத புனிதமான தொழில்கள்.

●

ஒரு தமிழ்ப் பழமொழி எப்பொழுதுமே என் நினைவில் இருந்து வருகிறது. "திக்கற்றவருக்குத் தெய்வமே துணை" என்பதே அது. நீ அவனிடம் உதவி கோருவதென்றால் உன் உண்மை உருவில் கள்ளங் கபடமின்றி 'என்னைப் போன்ற இழிந்தவனுக்கு அவன் எப்படி உதவுவான்?' என்ற ஐயமின்றி அவனை அணுக வேண்டும். தன்னை அணுகிய கோடிக் கணக்கானவர்களுக்கு அபயமளித்து ஆதரித்தவன் உன்னைக் கைவிடுவானா? அவன் பாரபட்சம் எதுவும் காட்டுவதில்லை யாகையால் உன்னுடைய வேண்டுகோள் யாவற்றையும் அவன் நிறைவேற்றுவதைக் காண்பாய். நான் இதை என் சொந்த அனுபவத்திலிருந்தே சொல்லுகிறேன்.

●

நான் பாக்கியசாலி. பல இங்கிலீஷ்காரர்களை என்னுடைய நெருங்கிய நண்பர்கள் என்று உறவு கொண்டாடும் பேறு பெற்றிருக்கிறேன். பிரிட்டிஷ் ஆட்சியின் கொடுமையை நான் அறிந்து கொண்டதே, அந்த ஆட்சியைப் பற்றிய கசப்பான உண்மைகளைச் சற்றும் தயவு தாட்சண்யம் பாராமல் தைரியமாக எடுத்துக் கூறிய தீர ஆங்கிலேயர்களுடைய எழுத்துக்களின் மூலமாகத்தான்.

●

ஓர் அலை வேகமாக மோதலாம்; மற்றோர் அலை வேகமாகப் பின் வாங்கவும் செய்யலாம். ஆம், உன் மனமாகிய கடலிலே பலவித அலைகள் மோதிக் கொந்தளிக்கலாம். ஆனால் நீ யாவுக்கும் மேலே இருக்க முயல வேண்டும். அலைகள் கொந்தளித்தாலும் அமைதியாக இருக்கும் ஆழ் கடலைப் போலச் சலனமின்றி இருக்க முயல வேண்டும். உங்கள் உள்ளத்தில் பல்வேறு பட்ட கருத்துக்கள் ஒன்றுடன் ஒன்று மோதலாம். இத்தனை மோதல்களிடையேயும் எவன் தன் நிலை இழக்காமல் இருக்கிறானோ, அவனே வெற்றிப் பாதையில் முன்னேறுவான்!

●

மரணம் என்பது பெரிய மாறுதல்; அவ்வளவே. மரணம் வரும்போது அதை வரவேற்க வேண்டும் என்பதை என் மனம் பல வருஷங்களாகவே ஒப்புக் கொண்டு விட்டது. மரண பயம் உள்படச் சகல பயங்களையும் என் உள்ளத்திலிருந்து உதறித் தள்ள நான் தீர்மானமாய் மகத்தான முயற்சி செய்திருக்கிறேன். என்றாலும், சில சமயம் மரணம் நெருங்குவது போன்ற நினைவு எனக்கு ஏற்படுவதுண்டு. அப்போதெல்லாம் வெகு நாட்களுக்கு முன் பிரிந்த ஒரு சிநேகிதனைச் சந்திக்கப் போவது போன்ற ஓர் மகிழ்ச்சியே எனக்கு ஏற்பட்டது.

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக்கும் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது



சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTPG/I

# கிரிஜாவின் கணவன்

சௌமித்திரி



மாலை நேரமானதால் அப்போது பஸ்ஸில் ஒரே கூட்டமாக இருந்தது. தன் அருமையான ஜார்ஜெட் சேலை கசங்கி விட்டதே என்ற வருத்தத்துடன் அதில் நெருக்கி யடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் கிரிஜா. பஸ்ஸில் ஏறும்போது தன்னை இடித்துக் கொண்டு வந்த பிரயாணிகளைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். சட்டசபைக்கு அருகில் பஸ் நின்றது. கிரிஜாவின் அருகில் உட்கார்ந்திருந்த இரண்டு பேர் அங்கே இறங்கி விட்டார்கள். "அப்பாடா!" என்று ஆசுவாசப்படுத்திக் கொண்ட அவள் தாராளமாக உட்கார்ந்து கொண்டாள். கையிலிருந்த புத்தகங்களை அருகில் வைத்துக்கொண்டு, தோளிலிருந்து நழுவி விழும் நிலையிலிருந்த தன் சேலைத் தலைப்பைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

பஸ் நகர ஆரம்பித்தது. அந்தச் சமயத்தில் வேகமாக ஓடிவந்து பஸ்ஸில் தொத்திக்கொண்ட ஒரு வாலிபன், தடுமாறிக் கொண்டே உள்ளே நுழைந்தான். கிரிஜாவின் காலை அவன் கவனிக்கவில்லை; நன்றாக மிதித்து விட்டான்.

"ஹா!" என்று அலறிய கிரிஜா, அந்த வாலிபனைப் பார்த்து, "நன்றாக இருக்கிறது ஸார், நீங்கள் நடந்து வருகிற லட்சணம்! கீழே பார்த்து வரக்கூடாது!" என்று கோபத்துடன் கேட்டாள்.

"மன்னிக்கணும்! அவசரத்தில் கவனிக்கவில்லை!" என்ற அந்த வாலிபன் பற்கள் எல்லாம் தெரிய அவளைப் பார்த்துச் சிரித்தான்.

பாதி நெற்றியை மறைத்துக் கொண்டிருந்த சாம்பல் நிறத் தொப்பியுடனும், புருவத்தை மறைத்துக் கொண்டிருந்த தடித்த பிரேம் போட்ட கறுப்புக் கண்ணாடியுடனும், கருகருவென்று வளர்ந்திருந்த அடர்த்தியான கறுக்கு மீசையுடனும் தடபுடலாகக் காட்சி யளித்தான் அந்த வாலிபன். அவன் வலது கன்னத்தில் மூக்கின் அருகே ஒரு சிவப்பு மச்சம் இருந்தது. ஒரு கணம் அவன் உருவத்தை ஏறிட்டுப் பார்த்த கிரிஜா அருவருப்புடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

ஒரு விநாடி பஸ்ஸிலிருந்தவர்களைச் சுற்றிக் கண்களை ஓட்டிய அந்த வாலிபன், கிரிஜாவிடம், "கொஞ்சம் அந்தப் புத்தகங்களை எடுத்துக் கொள்கிறீர்களா! நான் உட்கார வேணும்!" என்று மரியாதையாகக் கேட்டான்.

தன் வாள்விழியால் அவனை வெட்டிவிடுபவளைப் போல ஒரு தடவை நோக்கிய கிரிஜா, தன் புத்தகங்களை எடுத்து மடிமீது வைத்துக் கொண்டாள். "வந்தனம்!" என்று சொல்லிவிட்டு அவளருகில் இடித்துக் கொண்டே உட்கார்ந்தான் அந்த வாலிபன். கிரிஜா அவன்மேல் இடிக்காமல் தள்ளி உட்கார்ந்து கொண்டாள்.

ராட்டன் பஜார் தபால் நிலையத்துக்கு அருகே பஸ் நின்றது. கிரிஜா அங்கே இறங்கினாள். பாரீஸ் மூலைக்கு டிக்கட் வாங்கியிருந்த அந்தக் கறுப்புக் கண்ணாடிக்காரனும் அவளைப் பின் தொடர்ந்து அந்த இடத்திலேயே இறங்கினான்.

நைனியப்ப நாயக்கன் தெருவிலிருந்த தன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்த கிரிஜா, "உங்களைத்தானே!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினாள். பற்கள் எல்லாம் நன்றாகத் தெரியச் சிரித்தவாறு அருகில் நின்ற அந்த வாலிபனைக் கண்டதும் அவளுக்கு ஆத்திரமும் கோபமும் சீறிக் கொண்டு வந்தன.

"என்ன!" என்று கேட்கும் பாவனையில் அந்த வாலிபனை முறைத்துப் பார்த்தாள்.

"தங்கள் காலைப் பலமாக மிதித்து விட்டேன். அதற்காக நான் ரொம்ப வருத்தப்படுகிறேன்! இன்னும் வலித்துக் கொண்டிருக்கிறதா!" என்று பரிவுடன் வினவினான் அந்த வாலிபன்.

"ஏன், ரிக்ஷா வைத்து என்னை வீட்டுக்கு அனுப்பலாம் என்று பார்க்கிறீர்களா! அந்தக் கவலை உங்களுக்கு வேண்டியதில்லை! நீங்கள் உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போங்கள்!" என்று ஏளனம் தொனிக்கச் சொல்லி விட்டுக் கிரிஜா விடுவிடென்று தன்னுடைய வீட்டுக்குப் போய் விட்டாள்.

மறுநாள் காலை பத்து மணி இருக்கும். கூடத்தில் உட்கார்ந்து கொண்டு செய்திப் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருந்தார் கிருஷ்ணசாமி.

அந்தச் சமயம் 'தடதட'வென்று மாடியிலிருந்து கீழே இறங்கி வந்த கிரிஜா, "இதைக் கேட்டாயா, அப்பா! ஒரு வாரத்துக்கு முன்னாலே மாம்பலத்தில் நடந்த கொலையில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரையும் பிடித்து விட்டார்களாம். துப்பறியும் செல்லப்பாதான் அவர்களைக் கைது செய்தாராம்!" என்று அவனைப் புகழ்ந்தாள்.

"பேஷ்! தேவலையே!" என்றார் அவர்.

"ஸி. ஐ. டி. செல்லப்பாவின் சாமர்த்தியமே சாமர்த்தியம்! இதுவரை அவர் எத்தனை கொலை செய்து விட்டுத் தப்பியவர்களையும் கொள்ளைக்காரர்களையும் கண்டு பிடித்திருக்கிறார்!"

செல்லப்பாவைப் புகழ்ந்து தள்ளிக் கொண்டே போனாள் கிரிஜா.

அப்பொழுது அங்கே வந்த தாயார், "போதுமடி, நிறுத்து. யாராவது கேட்டால் சிரிக்கப் போகிறார்கள்! அந்தச் செல்லப்பா என்ன, உன் மாமனா, மச்சானா! நீ ஏன் இப்படிக் குதித்து அமர்க்களப் படுத்துகிறாய்!" என்று கடிந்தாள்.

"நான் ஒன்றும் குதிக்கவில்லை, சும்மா நின்று கொண்டுதான் இருக்கிறேன்!" என்று கூறிய கிரிஜா தாயாரை முறைத்துப் பார்த்தாள்

துப்பறியும் அசாத்திய திறமையினால் தன் உள்ளம் கவர்ந்திருந்த செல்லப்பாவைத் தாயார் சிறிதும் மதிக்காமல் அலட்சியமாகப் பேசியது அவளுக்குப் பொறுக்க முடியவில்லை.

மகளுக்கு வந்த கோபத்தை அவள் முகத்தைப் பார்த்தே தெரிந்து கொண்ட நாகம்மா, தன் கணவரை நோக்கி, "இதோ, பாருங்க! உங்கள் மகளை அந்த ஸி. ஐ. டி. செல்லப்பாவுக்கே கல்யாணம் செய்து கொடுத்து விடுங்கள். நல்ல வரனுக்காகப் பத்திரிகைகளில் எல்லாம் எதற்காக விளம்பரம் போட்டுக் காசைக் கரியாக்குகிறீர்கள்!" என்று கூறினாள்.

கிரிஜா வெட்கத்தினால் தன்னுடைய தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"போடி, பைத்தியம்! அந்தச் செல்லப்பாவுக்குக் கல்யாணமாகி நாலு பிள்ளைகள் கூட இருப்பார்கள். அவனையா நம் கிரிஜா கல்யாணம் செய்து கொள்வாள்!" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் கிருஷ்ணசாமி.

ஒருவேளை அப்படியும் இருக்குமோ என்று எண்ணிய கிரிஜாவின் மனம் கவலையி லாழ்ந்தது.

அந்தச் சமயத்தில், "ஸார்! நான் உள்ளே வரலாமா!" என்ற குரலைக் கேட்டு அனைவரும் ஏக காலத்தில் வாசலை நோக்கினார்கள். அங்கே ஒரு பெரிய மனிதர் நின்று கொண்டிருந்தார். அவரது கண்ணியமான தோற்றத்தைக் கண்டதும், "வாருங்கள், வாருங்கள்" என்று அவரை வரவேற்றார் கிருஷ்ணசாமி.

நரைத்த தலைமயிர்; தொங்கும் மீசை, நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி, அதன் நடுநாயகமாகக் காலணா அளவு குங்குமப் பொட்டு, மூக்கின்மீது தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி, ஆடம்பரமான உடை, தோளின்மீது சரிந்து கொண்டிருந்த சரிகை அங்கவஸ்திரம், இத்தனையும் சேர்ந்து அந்த மனிதரை நல்ல அந்தஸ்துடையவர் என்று எடுத்துக் காட்டின.

"தாங்கள் வந்த விஷயம் என்னவோ!" என்று பேச்சை ஆரம்பித்தார் கிருஷ்ணசாமி.

ஒருமுறை தொண்டையைக் கனைத்துக் கொண்ட அந்த மனிதர் கரகரத்த குரலில் பேசலானார்: "கல்யாண விஷயமாக வந்தேன். என் பேரன் உங்கள் மகளை எங்கேயோ பார்த்திருக்கிறான். அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் செய்கிறான். உங்களுக்குச் சம்மதமாக இருந்தால்..." என்று அவர் பேச்சை முடிப்பதற்குள், "நீங்கள் யார்! எங்கே இருக்கிறீர்கள்! உங்கள் பேரன் என்ன செய்து கொண்டிருக்கிறார்!" என்று ஆவலுடன் அவரிடம் வினவினார் கிருஷ்ணசாமி.

"என் பெயர் சரவண முதலியார். என் பேரன் இப்போது எம். ஏ. படித்துக் கொண்டிருக்கிறான். என் மகனும் மருமகளும் சிலோனில் இருக்கிறார்கள். பெரிய தொழில் செய்கிறார்கள்! உங்களுக்குச் சம்மதமானால் அடுத்த மாதமே கல்யாணத்தை முடித்து விடலாம்!" என்று கூறினார் அந்தப் பெரிய மனிதர்.

கிருஷ்ணசாமிக்கும் நாகம்மாவுக்கும் தம் காதுகளை நம்பவே முடியவில்லை. தங்கள் பெண்ணுக்கு இவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் வரும் என்று அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை.

"உங்களுடன் சம்பந்தம் செய்து கொள்ள எங்களுக்கு ஆட்சேபணையே இல்லை. ஆனால் எங்களால் அதிகமாகச் சீர் வரிசைகளைச் செய்ய முடியாதே!" என்றார் கிருஷ்ணசாமி.

"உங்களுக்குப் பிடித்ததைச் செய்யுங்கள்! அது இல்லை, இது இல்லை என்று சொல்லும் சில்லறை மனிதர்கள் நாங்கள் அல்ல! எங்களுக்கு வேண்டியது உங்கள் பெண்தான்!"

"அப்போ, சரி, நாளைக்கு நல்ல நாள். பெண்ணைப் பார்க்க உங்கள் உறவினர்களையும் மாப்பிள்ளையையும் அழைத்து வாருங்கள்! நாங்களும் மாப்பிள்ளையைப் பார்த்தது போலாகி விடும்!" என்றார் கிருஷ்ணசாமி உற்சாகத்துடன்.

"மாப்பிள்ளைதான் முன்பே உங்கள் பெண்ணைப் பார்த்திருக்கிறானே! அவனை உங்கள் பெண்ணுக்கும் தெரியுமாம்! நீங்கள் அவனைப் பார்க்க வேண்டுமென்றால் இதோ இந்தப் புகைப் படத்தைப் பாருங்கள்!" என்று அவர் கூறித் தம் கையிலிருந்த தோல் பையைத் திறந்து அதிலிருந்த ஒரு போட்டோ படத்தை எடுத்துக் கிருஷ்ணசாமியிடம் நீட்டினார்.

அதிலிருந்த நாகரிக வாலிபனின் உருவத்தைப் பார்த்ததும், கிரிஜாவுக்கு அவனை நிச்சயம் பிடிக்கும் என்று நினைத்து அந்தப் படத்தை மகளிடம் காட்டினார் கிருஷ்ணசாமி. "கிரிஜா! இவரை உனக்குத் தெரியுமா!" என்று வினவினார்.

அப் புகைப் படத்தைக் கண்டதும்





கிரிஜா திடுக்கிட்டாள். ஏனெனில் அது முதல் நாள் பஸ்ஸில் வந்த கறுப்புக் கண்ணாடிக்காரனின் புகைப்படம். "என்ன, கிரிஜா! பேசமாட்டேன் என்கிறாய்! இவரை நீ பார்த்திருக்கிறாயா! உனக்குப் பிடித்திருக்கிறதா!" என்று மீண்டும் வினவினார் கிருஷ்ணசாமி.

வெறுப்புடன் அந்தப் புகைப்படத்தை அவரிடம் திருப்பிக் கொடுத்த கிரிஜா, "இவரை ஒரே ஒரு தடவை பார்த்திருக்கிறேன். பெண்களிடம் எப்படி நடந்து கொள்வது என்று தெரியாத மனிதர்! தெருவில் தனியாகப் போகும் பெண்களைப் பின்தொடர்ந்து செல்லும் மனிதர்! நேற்று என்னிடம் வந்து வலியப் பேசி என் பின்னாலேயே வீடுவரை வந்தவர். இவர் எத்தனை தான் பணக்காரராக இருந்தபோதிலும் நான் இவரைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்!" என்று கூறிவிட்டு 'விருக்'கென்று எழுந்து மாடிக்குப் போய் விட்டாள்.

கிருஷ்ணசாமியும் அவருடைய மனைவி நாகம்மாவும் அதைக் கேட்டுத் திகைத்து விட்டார்கள். கிரிஜாவின் வார்த்தைகளைக் கேட்டு நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்த அந்தக் கனவான், "என்ன திமிர் இந்தப் பெண்ணுக்கு! என் பேரனைப் பற்றி இப்படியெல்லாம் பேச இவளுக்கு என்ன நெஞ்சழுத்தம் வேண்டும்! இவளைப் போய்க் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று பிடிவாதம் செய்கிறானே, அந்த முட்டாள்! அவனைப் போய்ப் பேசிக் கொள்கிறேன்" என்று சினத்துடன் பேசி விட்டு, கிருஷ்ணசாமியின் கையிலிருந்த புகைப்படத்தை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு வேகமாக வெளியே போய் விட்டார்.

*

இரு தினங்கள் சென்றன. அன்று கிருஷ்ணசாமியின் பெயருக்கு நாலைந்து கடிதங்கள் வந்திருந்தன. அவை எல்லாம் கிருஷ்ணசாமி செய்திருந்த விளம்பரத்தைப் பார்த்துக் கிரிஜாவை மருமகளாக்கிக் கொள்ள விரும்பிய பிள்ளை வீட்டாரிடமிருந்து வந்திருந்த கடிதங்கள்.

முதல் மூன்று கடிதங்களைப் படித்து விட்டு அதிருப்தியுடன் மேஜைமீது போட்ட கிருஷ்ணசாமி, நான்காவது கடிதத்தை எடுத்துப் படித்தார். அவர் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. அருகிலிருந்த மனைவியிடம், "நாகம்மா! நம் கிரிஜா உண்மையில் அதிர்ஷ்டசாலிதான்! சி.ஐ.டி. செல்லப்பா அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று எழுதியிருக்கிறார். நமக்குச் சம்மதம் என்று தெரியப்படுத்தினால் பெண்ணைப் பார்க்க வருகிறாராம்" என்று ஆனந்தம் பொங்கக் கூறினார். பிறகு அவர் "கிரிஜா! சீக்கிரம் இங்கே ஓடி வா! உனக்கு ஒரு சந்தோஷ சமாசாரம்!" என்று உரக்கக் கூப்பிட்டார்.



"என்னப்பா!" என்று கேட்டுக் கொண்டே வேகமாக அங்கே வந்தாள் கிரிஜா.

"சி. ஐ. டி. செல்லப்பா, உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று எழுதியிருக்கிறார். இந்தக் கடிதத்தைப் பார்!" என்று கூறித் தம் கையிலிருந்த கடிதத்தை அவளிடம் நீட்டினார் கிருஷ்ணசாமி.

"உண்மையாகவா, அப்பா!" என்று வியப்புடன் வினவிய கிரிஜா, ஆவலுடன் அக்கடிதத்தைப் படித்துப் பார்த்தாள். அவள் முகம் மலர்ந்தது. "அப்பா! அன்றைக்கு அவர் நாலு குழந்தைகளுக்குத் தந்தையாக இருப்பார் என்று சொன்னாயே! இதில் என்ன எழுதியிருக்கிறார் பார்! அவருக்கு இருபத்தெட்டு வயதுதான் ஆகிறதாம்!" என்றாள் மகிழ்ச்சியுடன்.

"ஆமாம், அவருக்குப் பெற்றோர் இருக்கிறார்களா! ஏதாவது சொத்து இருக்கிறதா! அதைப் பற்றியெல்லாம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறாரா!" என்று தன் மகளை ஆவலுடன் விசாரித்தாள் நாகம்மா.

"அப்பா, அம்மா இல்லையாம்!

அவை எல்லாம் கிருஷ்ணசாமி செய்

என்னிடம் வந்து வலியப் பேசி என் பின்னாலேயே வீடுவரை வந்தவர். இவர் எத்தனை தான் பணக்காரராக இருந்தபோதிலும் நான் இவரைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்!" என்று கூறிவிட்டு 'விருக்'கென்று எழுந்து மாடிக்குப் போய் விட்டாள்.

கிருஷ்ணசாமியும் அவருடைய மனைவி நாகம்மாவும் அதைக் கேட்டுத் திகைத்து விட்டார்கள். கிரிஜாவின் வார்த்தைகளைக் கேட்டு நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்த அந்தக் கனவான், "என்ன திமிர் இந்தப் பெண்ணுக்கு! என் பேரனைப் பற்றி இப்படியெல்லாம் பேச இவளுக்கு என்ன நெஞ்சழுத்தம் வேண்டும்!

திருந்த விளம்பரத்தைப் பார்த்துக் கிரிஜாவை மருமகளாக்கிக் கொள்ள விரும்பிய பிள்ளை வீட்டாரிடமிருந்து வந்திருந்த கடிதங்கள்.

முதல் மூன்று கடிதங்களைப் படித்து விட்டு அதிருப்தியுடன் மேஜைமீது போட்ட கிருஷ்ணசாமி, நான்காவது கடிதத்தை எடுத்துப் படித்தார். அவர் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. அருகிலிருந்த மனைவியிடம், "நாகம்மா! நம் கிரிஜா உண்மையில் அதிர்ஷ்டசாலிதான்! சி.ஐ.டி. செல்லப்பா அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று எழுதியிருக்கிறார். நமக்குச் சம்மதம் என்று தெரியப்படுத்தினால் பெண்ணைப் பார்க்க வருகிறாராம்" என்று ஆனந்தம் பொங்

வருமாறும் அன்றே செல்லப்பாவுக்குக் கடிதம் எழுதி விட்டார் கிருஷ்ணசாமி.

மறுநாளே அதற்குப் பதில் வந்து விட்டது. அன்று மாலை பெண் பார்க்க வருவதாக எழுதியிருந்தார் செல்லப்பா.

ஆறு மணிக்கு வாசலில் ஜீப் கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய சர்க்கிள் இன்ஸ்பெக்டரும், இரண்டு சப் இன்ஸ்பெக்டர்களும், சி. ஐ. டி. செல்லப்பாவும் 'டக், டக்' என்று நடந்து உள்ளே பிரவேசித்தார்கள். அவர்களைக் கண்ட கிருஷ்ணசாமி ஒரு நிமிஷம் பயந்து நடுங்கி விட்டார். "நீங்கள் தானே, கிருஷ்ணசாமி முதலியார்!' உங்கள் பெண்ணைப் பார்க்க வந்திருக்கிறோம்!" என்று சர்க்கிள் இன்ஸ்பெக்டர் புன்னகையுடன் கூறிய பிறகு தான் அவருக்கு உயிர் வந்தது. "வாருங்கள்! உட்காருங்கள்!" என்று அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். நாகம்மா, தான் தயாரித்திருந்த சிற்றுண்டிகளால் அவர்களைத் திணற வைத்து விட்டாள்.

"ஏன், ஸார்! இங்கே நாம் பெண் பார்க்க வந்தோமா! அல்லது இந்தப் பலகாரத்தையும் காப்பியையும் சாப்பிட வந்தோமா! முதலில் பெண்ணை ஆஜர்படுத்துங்கள்!" என்று தம் உத்தியோக பாஷையில் பரிகாசத்துடன் பேசிய சர்க்கிள் இன்ஸ்பெக்டர் காப்பி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டார்.

கிரிஜா நாணிக் கோணிக்கொண்டு அவர்கள் முன்னால் வந்து நின்றாள்.

"ஸார்! சி. ஐ. டி. செல்லப்பா என்றால் போலீஸ் உடையில்தான் இருப்பார் என்று நினைத்து உங்கள் பெண் ஏமாந்துவிடப் போகிறாள்! இதோ கதர் சட்டை போட்டுக்கொண்டு பசுவைப்போல் உட்கார்ந்திருக்கிறாரே, இவர்தான் எங்கள் துப்பறியும் புலி!" என்று தம் அருகிலிருந்த செல்லப்பாவைச் சுட்டிக் காட்டினார் சர்க்கிள் இன்ஸ்பெக்டர்.

எல்லோரும் 'ஹோ' என்று சிரித்துவிட்டார்கள். கிரிஜா, கடைக்கண்ணால் ஒரு கணம் செல்லப்பாவைப் பார்த்தாள். அவனும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். உடனே நாணத்துடன் கண்களை அவனிடமிருந்து அகற்றிய அவள் இதழ்களில் குறுநகை தவழ்ந்தோடியது.

அதைக் கவனித்து விட்ட சர்க்கிள் இன்ஸ்பெக்டர், "என்ன, செல்லப்பா! பெண்ணைப் பிடித்து விட்டதா!" என்று மெல்லிய குரலினால், எல்லோருக்கும் கேட்கும்படியாகக் கேட்டார்.

"என்னை அவர்களுக்குப் பிடித்து விட்டதா என்று முதலில் கேளுங்க, ஸார்!" என்றான் செல்லப்பா புன்னகை செய்தவாறு.

அதைக் கேட்ட கிருஷ்ணசாமி; "உங்களோடு சம்பந்தம் செய்து கொள்ள நாங்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும். எங்கள் எல்லோருக்கும் பரம திருப்தி!" என்று அகமும் முகமும் மலரக் கூறினார்.

அதற்கடுத்த மாதம் செல்லப்பா—கிரிஜா திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

★

கிரிஜா கணவன் வீடு சென்றாள். அந்தத் தனிமையான பங்களாவில் தம்பதிகள் இருவரும் இனிமையாக வாழ்ந்து வந்தார்கள். ஒரு மாதம் இன்பமாகச் சென்றது.

அன்று பகல் பதினொரு மணியிருக்கும். பங்களா வாசலில் நின்று தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் கிரிஜா. அப்போது அவ்

வழியே வந்த ஒரு மனிதனைக் கண்டதும் அவளுக்குக் 'குபீ'ரென்றது அங்கு வந்து நின்றது வேறு யாரும் அல்ல. அன்றொருநாள் பஸ்ஸில் அவள் காலை மிதித்த அந்த வாலிபன்தான்! அதே கறுப்புக் கண்ணாடி; சாம்பல் நிறத் தொப்பி; நறுக்கு மீசை; அதே முரட்டுத் தோற்றத்துடன் கிரிஜாவைப் பார்த்துப் பற்கள் எல்லாம் தெரியச் சிரித்தான் அந்த மனிதன். எரித்து விடுபவளைப் போல் அவனைக் கோபத்துடன் நோக்கிய கிரிஜா, "ஏய், கருப்பா! இங்கே வா, சீக்கிரம்! வாசலில் ஒரு நாய் நிற்கிறது, அதை அடித்துத் துரத்து!" என்று தோட்டக்காரனை அழைத்தாள்.

சிகரெட் புகையை விட்டுக் கொண்டே ஒரு தடவை அவளை ஏறிட்டு நோக்கி விட்டு வேகமாக அங்கிருந்து போய் விட்டான் அந்த வாலிபன்.

அன்று இரவு பத்து மணி இருக்கும், அந்தத் தெருவில் ஆள் நடமாட்டமே இல்லை. எங்கும் அமைதி நிலவி யிருந்தது. கிரிஜா மட்டும் தனியாக உட்கார்ந்து ரேடியோ கேட்டுக் கொண்டிருந்தாள். தோட்டக்காரக் கருப்பன் பங்களாவில் எங்கோ ஒரு மூலையில் கிடந்தான். வேலைக்காரி வேலம்மா சினிமா பார்த்து விட்டு வரப் போயிருந்தாள். அன்று திரும்பி வர நேரமானாலும் ஆகலாம் என்று சொல்லி விட்டுப் போயிருந்தான் செல்லப்பா. அந்தப் பயங்கரத் தனிமையை மறக்க ரேடியோவை அலற விட்டுக் கொண்டிருந்த சமயம் வாசல் கதவு பலமாக இடிக்கப்படும் ஓசை கேட்டது.

கணவன் சீக்கிரம் திரும்பி விட்டார் என்று நினைத்து மகிழ்ந்தவாறு ஓடிப் போய்க் கதவைத் திறந்தாள். மறுகணம் அவளைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்த அந்தக் கறுப்புக் கண்ணாடிக்காரன், 'பட்'டென்று கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டு விட்டான். பேயைக் கண்டவளைப் போலக் கிலியடைந்த கிரிஜா கூச்சல் போட வாயைத் திறந்தாள். அதே சமயம், அவள் முகத்துக்கெதிரே ஒரு கைத்துப்பாக்கியை நீட்டிய அந்த மனிதன், "ஜாக்கிரதை! சத்தம் போட்டால் உன்னைச் சுட்டு விடுவேன்" என்று எச்சரிக்கை செய்தான்.

கிரிஜாவுக்குப் பயத்தினால் உடல் நடுங்கியது. கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "நீ இப்போது இங்கே எதற்காக வந்தாய்! மரியாதையாக உடனே வெளியே போய் விடு!" என்று அதட்டினாள்.

"மரியாதையாக வெளியே செல்ல வேண்டுமா! மரியாதை தெரிந்தவர்கள் அப்படிச் சொன்னால் சரி. ஆனால்..." என்று கூறிப் பலமாகச் சிரித்துக் கொண்டே அவளை நெருங்கினான் அந்த முரடன்.

புலியைக் கண்ட ஆட்டுக் குட்டியைப் போல் கால்கள் நடுங்கிப் பின்னேறிய கிரிஜா, "பிறர் மனைவி மீது ஆசைப்படும், மிருகமே! உன் எண்ணம் நிறைவேறும் என்று கனவு காணாதே!" என்று கண்களில் தீப்பொறி பறக்கச் சீறினாள்.

"பிறர் மனைவி மீது நான் ஆசைப்படவில்லை! என் மனைவி மேல்தான் ஆசைப்படுகிறேன்! அன்று பஸ்ஸில் உன்னைப் பார்த்த அதே விநாடி என் உள்ளத்தை உன்னிடம் பறி கொடுத்து விட்டேன்! உன் தந்தக் கழுத்தில் மானஸீகமாக மாங்கல்யத்தை அணிவித்து விட்டேன்! அந்த நிமிஷம் முதல் நீ என் மனைவி ஆகி விட்டாய்! எனக்கு உரிமையான உன்னைக் கல்யாணம் செய்து கொண்ட அந்த மடையன் செல்லப்பா தான் மிருகம்! கிரிஜா! வீண் வார்த்தை பேச நேரமில்லை! உடனே என்னுடன் புறப்படு.

## அந்தப் பண்பு!

காந்திஜியின் லண்டன் விஜயத்தின் போது அவருக்கு ஸ்காட்லாந்து தேசத்து ஸி. ஐ. டி. போலீஸ்காரர் ஒருவரை நியமித்திருந்தார்கள். லண்டனை விட்டுப் புறப்படுவதற்குமுன்னால் காந்திஜி அந்தப் போலீஸ்காரரின் வீட்டுக்குப் போய்க் குசலம் விசாரித்து விட்டு வந்தார்.

அந்த ரகஸ்யப் போலீஸ்காரர் காந்திஜி வந்து விட்டுப் போன பிறகு, "நான் பாதுகாத்து வந்த பெரிய பிரமுகர்களுக்குள்ளே சிறிதும் ஓய்வில்லாமல் உழைக்கும் மனிதர் காந்திஜி ஒருவர் தான். இத்தனை வேலைகளுக்கு மத்தியில் மறக்காமல் காந்திஜி என்னுடைய வீட்டுக்கும் வந்து விடை பெற்றுச் சென்றார்" என்று வியந்து கூறினாராம்.

---

வெளியே கார் காத்துக் கொண்டிருக்கிறது!" என்று அவளைத் துரிதப்படுத்தினான் கறுப்புக் கண்ணாடி வாலிபன்.

திகிலினால் வெளிறிய முகத்துடன், கண்களை பிரள பிரள விழித்த கிரிஜா, "ஐயோ, அம்மா!" என்றலறிக் கொண்டே கீழே சாய்ந்தாள். இதைச் சற்றும் எதிர் பாராத அந்த வாலிபன் பதறி விட்டான். தண்ணீருக்காகச் சுற்றிலும் கண்களை ஓட்டினான். அந்த ஹாலின் வலது புறமிருந்த அறையில் சுவர் ஓரமாகக் குழாயுடன் கூடிய ஒரு மண் ஜாடி தென்பட்டது. உடனே அந்த அறைக்குள் ஓடினான். அதே சமயம் மூர்ச்சையாகிக் கிடந்த கிரிஜாவின் கண்கள் திறந்தன. மறுகணம் பாய்ந்து சென்று அந்த அறைக் கதவைப் படீரென்று சாத்தித் தாழ்ப்பாள் போட்டு விட்டாள்.

ஸி. ஐ. டி. செல்லப்பாவின் மனைவி அல்லவா! அவளுக்குத் தந்திரம் தெரியாதா என்ன!

அடுத்த விநாடி அவசர அவசரமாகப் போலீசுக்கு டெலிபோன் செய்து உதவி அனுப்பும்படி கூறினாள். கறுப்புக் கண்ணாடிக்காரன், அறையின் உள்ளேயிருந்து கதவைப் பலமாகத் தட்டித் திறக்கும்படி கூச்சலிட்டான்.

இந்தச் சத்தத்தைக் கேட்டுத் தூங்கிக் கொண்டிருந்த தோட்டக்காரக் கருப்பன் அலறிப் புடைத்துக் கொண்டு அங்கே ஓடிவந்தான். ஐந்து நிமிஷத்தில் ஒரு லாரி நிறைய போலீஸ் ஜவான்கள் வந்திறங்கி விட்டார்கள். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கிரிஜாவின் துணிச்சலைப் பாராட்டி விட்டு அந்த அறைக் கதவின் தாழ்ப்பாளைத் திறந்தார். "டேய்! மரியாதையாக வெளியே வருகிறாயா, இல்லையா!" என்று கர்ஜித்தார். ஒரு நிமிஷம் சென்றது. அந்த மனிதன் வெளியே வரவில்லை. 'படீ'ரென்று கதவைத் திறந்து கொண்டு நாலைந்து ஜவான்கள் பின்னால் வர உள்ளே நுழைந்தார் சர்க்கிள் இன்ஸ்பெக்டர். எதிரே இருந்த நாற்காலியில் சாய்ந்தவாறு சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த அந்த மனிதனைக் கண்டதும் எல்லோரும் பிரமித்து விட்டார்கள். "என்ன! செல்லப்பாவா! ஏன் ஸார்! உங்கள் சாமர்த்தியத்தை மனைவியிடந்தான் காட்டுகிறதோ!" என்று கேட்டுக் கொண்டே அவனைச் சமீபித்தார் சர்க்கிள். ஹாலிலிருந்து அந்த அறையில் பிரவேசித்த கிரிஜாவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

அந்த உடையில் காட்சியளித்துக் கொண்டிருந்தது அவள் கணவன் செல்லப்பாவே தான்! அருகிலிருந்த மேஜைமீது அந்தக் கறுப்புக் கண்ணாடியும், மீசையும், தொப்பியும் கிடந்தன. செல்லப்பா அவளைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

போலீஸ் படை விடைபெற்றுச் சென்ற பிறகு கிரிஜாவின் அருகில் வந்து நின்ற செல்லப்பா, "கிரிஜா, எப்படி என்னுடைய வேஷமும் நடிப்பும்!" என்று வினவினான்.

"ரொம்ப நன்றாயிருக்கிறது, உங்கள் வேஷமும் நீங்களும்! இப்படித்தான் என்னைப் பயமுறுத்துகிறதோ!" என்று பொய்க் கோபத்துடன் கேட்டாள் கிரிஜா.

"நீ அன்று என்னைக் கோபித்துக் கொண்டதற்குத் தண்டனை இது!" என்று கூறிச் சிரித்தான் செல்லப்பா.

"காவாலியைப் போல் வேஷம் போட்டுக் கொண்டு பெண்கள் பின்னால் வருகிறவர்களைக் கோபிக்காமல் என்ன செய்வது! அன்று உங்கள் தாத்தா எங்களிடம் உண்மையைச் சொல்லாமல் எங்களை ஏன் ஏமாற்றினாராம்!" என்று கொஞ்சலாகக் கேட்டாள் கிரிஜா.

"அவர் உண்மையைச் சொல்லி எனக்குப் பெண் கேட்கத்தான் வந்தார். அப்போது உன் அப்பாவும் நீயும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு வராந்தாவிலேயே நின்று விட்டார். நீ ஸி. ஐ. டி. செல்லப்பாவைப் புகழ்ந்து பேசியதையும், 'அவன் நம்முடன் எங்கே சம்பந்தம் செய்து கொள்வான்!' என்று உன் தந்தை சொன்னதையும் கேட்டார். எனக்கு உன்னைக் கொடுக்கத் தயாராக இருக்கிறீர்கள் என்ற விஷயம் அவருக்குத் தெரிந்து விட்டது. உடனே அவருக்கு ஒரு எண்ணம் தோன்றியது. நீ மனமார வெறுத்த அந்தக் கறுப்புக் கண்ணாடிக்காரனின் படத்தைக் காட்டி உன்னுடைய கோபத்தைக் கிளற வேண்டும் என்று நினைத்து உள்ளே சென்றார்!"

"நான் உங்கள் மாறு வேஷத்தை வெறுத்தேன் என்று அவருக்கு எப்படித் தெரிந்தது! நீங்கள் அவரிடம் சொன்னீர்களா!" என ஆவலுடன் வினவினாள் கிரிஜா.

"ஊஹும், நான் சொல்லாமலேயே அவருக்குத் தெரியும்!"

"எப்படித் தெரியும்!"

"அந்தத் தாத்தா வேஷத்தில் இருந்தது இந்தச் செல்லப்பாதானே!"

கிரிஜா பிரமித்து விட்டாள். அவளை ஆசையுடன் நோக்கிய அவன், "நான் நினைத்தது சரியாகப் போய் விட்டது!" என்றான்.

"என்ன நினைத்தாய், கிரிஜா!"

"உங்கள் மூளையில் 'ஷெர்லக்ஹோம்'ஸின் ஆவியாவது 'செக்ஸ்டன் பிளாக்'கின் ஆவியாவது புகுந்திருக்க வேண்டும் என்று நினைத்தேன்!"

"அப்பேர்ப்பட்ட என்னையே நீ ஏமாற்றி விட்டாயே! நீ உண்மையாக மூர்ச்சையாகி விட்டாய் என்று நினைத்துப் பதறிப் போய்த் தண்ணீர் கொண்டு வர ஓடினேன். என்னைச் சிறைப்படுத்தி விட்டாயே!" என்று அவள் கன்னத்தைக் கிள்ளினான் செல்லப்பா.

"என்னை யார் என்று நினைத்தீர்கள்! ஒரு துப்பறியும் நிபுணருடைய மனைவி என்பது ஞாபகமிருக்கட்டும். அவருடைய சாமர்த்தியத்தில் கொஞ்சமாவது எனக்கு இருக்காதா, என்ன!" என்று கேட்டுக் கொண்டே அவனைப் பெருமிதத்துடன் நோக்கினாள் கிரிஜா.

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம் :  1907)

தலைமை ஆபீஸ் : "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

மூலதனம்

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,00,000 |
| டெபாஸிட்டுகள் | ... | ரூ. | 23·7 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே குணமடைகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது

உங்கள் பாதங்கள் அதிகமாக வெளுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணுகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ இடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் (Nixoderm) இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது ; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப்படுவது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) உங்கள் பாத உபாதையைப் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன : (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்று விடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து அமைதியளிக்கிறது. (3) சருமத்



தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.

### பரிசீலனைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். இன்றிரவே போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்து விடும். சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டு பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையாவிட்டால் நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழந்ததாகிறது. இந்த உபத்திரவத்தின் பேரில் நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் (Nixoderm) போட்டு பரிசை செய்து பாருங்கள். திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.

# வட்ட மேஜை

## பதில் எழுதலாகாதா?

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பற்றிப் பலர் எழுதுகிறார்கள். இதில் என் மனத்தை ரொம்பவும் சோகச் செய்த விஷயம், மத்திய சர்க்கார் ஆதரவில் இருந்து வரும் ஸ்தாபனமாகிய ரயில்வே சர்வீஸ் கமிஷனும், தபால் இலாக்காவும் தான். விண்ணப்ப பாரம் ஒரு ரூபாய் விலை கொடுத்து வாங்கி, அதைப் பத்தணாவோ, பன்னிரண்டணாவோ கொடுத்து ரிஜிஸ்தர் செய்து உள்ளே தன் விலாஸமிட்ட இரண்டணா கவர் ஒன்றையும் வைத்து அனுப்பவேண்டியிருக்கிறது. இவ்வளவையும் செய்து அனுப்பினால் மேற்படி அதிகாரிகள் வேலை உண்டு, இல்லை என்றுகூட எழுதுவது கிடையாது. உள்ளே வைத்து அனுப்பும் கவரில் கூடவா பதில் எழுத முடியவில்லை! அல்லது கொடுத்த ரூபாய் ஒன்றிற்கு ஒரு கார்டில் உண்டு இல்லை யென்றுதான் எழுதக்கூடாதா! ஒவ்வொரு பையனும் அந்த ஒரு ரூபாய் கிடைப்பதற்கு எவ்வளவு சிரமப்படுகிறான் என்று கூடவா அதிகாரிகளுக்குத் தெரியவில்லை! வரும், பதில் வரும் என்று ஏங்க வேண்டாம் அல்லவா! அல்லது பதில் பெறுவதற்குக்கூட யோக்யதை இல்லையென்றல்லவா ஆகிறது! இதைப் போன்ற அநீதி ஒரு தேசத்திலும் இராது.

திருக்காட்டுப்பள்ளி
15—9—54 ஒ. ஜி. கே. மூர்த்தி

●

## கையை விரிக்கவில்லை!

செப்டம்பர் மாதம் 5-ந் தேதி "கல்கி" "பராமுகம் ஏனோ!" என்னும் தலைப்பில் இலங்கை திரு பி. சுப்பையாவின் கடிதத்தைப் படித்தேன். மேற்படி கடிதத்தின் ஐந்தாவது பாராவில் கண்ட விஷயம் பெரிதும் மன வருத்தத்தைக் கொடுக்கிறது. மலைநாட்டுத் தமிழினத்தின் மானம் காத்து, வாழ்வு காத்துப் போராடியது, இலங்கை இந்தியர் காங்கிரஸ். பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு பிற்போக்கின் பெட்டகமாகக் கிடந்த தொழிலாளர்களிடையே சுதந்திர உணர்ச்சியையும் மனித மானத்தையும் ஊழிக் காற்றாக எழச் செய்தது காங்கிரஸ். காங்கிரஸ் நடத்திய சத்தியாக்கிரகப் போர் சிந்தனையுள்ள, ஜனநாயக உணர்ச்சியுள்ள எல்லாருடைய பெருமதிப்பையும் பெற்றது. இலங்கை இந்தியர் காங்கிரஸ் என்றிருந்ததை, இலங்கை ஜனநாயக காங்கிரஸ் என்று மாற்றி எல்லோரும் ஒன்று சேர்ந்து போராட உதவியது. இன்றுள்ள நிலைமையில் இலங்கை இந்தியர்களின் சகல இன்னல்களுக்கும் காங்கிரஸ் தைரியத்துடன் போராடி வருகிறது. நண்பர் பி. சுப்பையா காங்கிரஸின் நடவடிக்கைகளைச் சரிவரத் தெரிந்து கொள்ளாமல் காங்கிரஸைக் குறைகூறியிருக்கிறார். கடைசி நிமிஷத்தில் காங்கிரஸ் கையை விரித்து விடவுமில்லை; இந்தியாவுக்குப் போகச் சொல்லிக் காங்கிரஸ் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவுமில்லை என்பதை நண்பர் ஸ்ரீ சுப்பையாவுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கம்பளை (இலங்கை)
14—9—54 மு. இராம் சுப்பிரமணியம்

## வீண் செலவு வேண்டாம்!

சென்ற ஆகஸ்டு 18-ம் தேதி நடந்த ஸ்ரீரங்கம் நகர சபைக் கூட்டத்தில் வருகிற வைகுண்ட ஏகாதசி உற்சவத்தின் போது ஒரு பொருட்காட்சி நடத்துவதாகப் பெருவாரியான வாக்குகளினால் தீர்மானிக்கப்பட்டு, அதற்காக ரூ. 25,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது பொதுமக்கள் அறிந்த விஷயம்.

ஸ்ரீரங்கம் முனிஸிபாலிடி மூன்றாவது ரகத்தைச் சேர்ந்தது. வருஷ வருமானம் செலவுக்குப் போதிய அளவு இல்லை. வரி விதிப்போ மிகவும் கடுமை. 100 ரூபாய்க்கு 27 சதவிகிதம் வசூலிக்கப்படுகிறது. இருந்தும் பணம் இல்லாமையால் நீழ்க் கானும் சுகாதார வசதிகளும் மற்றும்சில அவசர வசதிகளும் கவனிக்கப்படாமலே இருந்து வருகின்றன.

1. ஸ்ரீரங்கத்தில் சில பாகங்களுக்குத்தான் தண்ணீர், சாக்கடை வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. அதுவும் குழாயில் தண்ணீர் சௌகரியமாகக் கிடைப்பதில்லை. ஸ்ரீரங்கம் தண்ணீர்க் கிணறு பழுது பட்டிருக்கிறது. கவனிக்கப்படவில்லை. மேற்கூறிய வசதிகளைத் திருவானைக் காவல் வாசிகள் கனவுகூடக் காண முடியாது போல் இருக்கிறது.

2. மருத்துவ சிசு சம்ரக்ஷண சாலையில் இலவச வைத்தியரின் உதவி அளிக்கப்படும் என்று

போட்டிருந்தாலும் அவருக்கு வேண்டிய ஆயுதங்கள், மருந்துகள் அளிக்கப்படவில்லை.

3. ஸ்ரீரங்கம் முனிசிபாலிடியில் மூன்று குப்பை லாரிகள் இருந்தும் சதா குப்பைகளை அப்புறப்படுத்த முடியாமல் ஆங்காங்கு சேமித்து வைக்க வேண்டியிருக்கிறது. குப்பை லாரிகள் அடிக்கடி பழுது பார்க்கப் பட்டும் வேலை முடிவதில்லை. புதிதாக லாரி வாங்குவதற்குப் போதிய பண வசதி இல்லை.

4. திருவானைக்காவலில் ஒரு பூங்காவோ, அல்லது ரேடியோ நிலையமோ, முனிசிபல் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு விளையாட இடமோ, அவர்களுக்குச் சிறுநீர் கழிக்கும் இடங்களோ, காய்கறி விற்பதற்கு மார்க்கட்டோ யாதொரு வசதியும் செய்து தரப்படவில்லை. மார்க்கட்டு வரி மாத்திரம் செக்ஷன் 270-ன் கீழ் வசூலிக்கப்பட்டு வருகிறது.

5. திருவானைக்காவலில் பஸ் நிற்குமிடம் கட்டுவதாக ஏற்பாடு ஆகி இருந்தும் நாளது தேதி வரைக்கும் யாதொரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. பொது ஜனங்கள், வெய்யிலிலும் மழையிலும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது.

6. திருவானைக்காவல் சன்னதி வீதி பழுது பார்க்கப்படாமல் இருக்கிறது.

மேற்கூறிய வசதிகளை உடனடியாகச் செய்து தருவது ஸ்ரீரங்க நகர மன்றத்தின் கடமையாக இருந்தும் அதை விட்டு, பெருந் தொகையைச் செலவழித்துக் கண்காட்சி நடத்துவது என்று தீர்மானித்திருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம். சென்ற கண்காட்சியின் அனுபவத்தை நமது நகர மன்றத் தலைவரும், மற்ற உறுப்பினரும் மறந்திருக்க முடியாது. ஆகவே வரிச்சுமை தாளாது வருந்தும் ஏழை வரி கொடுப்போரின் பணத்தை வீண் செலவு செய்யாது இருக்கும்படி ஸ்தல ஸ்தாபன சர்க்கார் கவனிப்பார்களா !

திருவானைக்காவல் டி. எஸ். சுப்ரமண்யம் எல்.ஐ.எம்
13—9—54 முனிசிபல் கவுன்சிலர்.

●

## பள்ளிகளின் கதி!

நம் சென்னை சர்க்காரின் உத்தரவுப்படி ஆயிரத்துக்கு மேற்பட்ட ஜனத்தொகையுடைய கிராமங்களில் "ஒரு ஆசிரியர் பள்ளிகள்" நமது ராஜ்யமெங்கும் சர்க்கார் விகிதாசாரப்படி திறக்கப்படப் போகின்றன. இதன் நோக்கம் எதுவாயினும் முக்கியமான நோக்கம் படித்தோரிடையே நிலவி வரும் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க வேண்டும் என்பதே. எனவே இது வரவேற்கக் கூடியது; வாழ்த்த வேண்டியதும்கூட.

ஆனால் இந்த வேளையில் கல்வித் துறையில் நாட்டமுள்ளோர்க்கு ஐயங்கள் எழும். ஒன்று, இப்பள்ளிகள் நிரந்தரமானவையா ! இதன் பாடத்திட்டங்கள் எந்த அடிப்படையில் நடக்கப் போகின்றன ! இப் பள்ளிகளுக்கு நியமிக்கப்படும் ஆசிரியர்களுக்கு அளிக்கப்படப்போகும் ஒரே ஒரு மாதப் பயிற்சி போதுமா ! எத்தகைய பயிற்சி அளிக்கப் போகிறார்கள்! நம் ராஜ்யத்தில் ஹையர் கிரேட் பயிற்சி பெற்றவர்களும், செகண்டரி கிரேட் பயிற்சி பெற்றவர்களும் ஏராளமாக இருக்கிறார்கள். எத்தனையோ பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் சொற்ப வருவாய் கொண்ட பஞ்சாயத்துப் பள்ளிகளில் உழன்று வருகிறார்கள். நிலைமை இப்படியிருக்க, வேறு துறையில் புக யோக்கியதாம்சங்களைக் கொண்ட பட்டதாரிகள் ஏன் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்! பட்டதாரிகளுக்கு, பயிற்சி பெறாமலேயே உயர் நிலைப் பள்ளிகளில் சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. ஆனால் அங்கேயே அவர்கள் ரூ. 65 சம்பளமாகப் பெற்றும்கூட, ஒரு வருடம் முழுவதும் நிலையாக நீடித்து இருப்பதில்லை; இருக்க விரும்புவதுமில்லை. காரணம், அவர்கள் இதைவிட உயர்ந்த சந்தர்ப்பங்களை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் பறவைகள். அவர்கள் நிலைமை இப்படி இருக்க, புதிதாக ஏற்படப்போகும் குக்கிராமப் பள்ளிகளில் இப் பயிற்சி பெறாத பட்டதாரிகள் ரூ. 50 சம்பளத்தில் இருப்பார்களா நிரந்தரமாக! அப்படி அவர்கள் இருக்க காண்டிராக்ட் முறை ஏதாவது உண்டா! திடீரென்று வேறு வேலைக்குப் போய் விட்டால், பள்ளிகளின் கதி என்ன! ஆகையால் எந்தப் பள்ளிக்குப்போனாலும், ஒரே சம்பளத்தைப் பெறப் போகும், ஹையர், செகண்டரி கிரேட் பயிற்சி பெற்றவர்களையே நியமிப்பது சாலச்சிறந்ததாகும்.

சென்னை-6 இரா. ராஜேந்திரன்
20-9-54

●

## வழிகாட்டுங்கள்!

வேலையில்லாத் திண்டாட்டம் என்ற காரிருளில் சிக்கி ஏழு வருடங்களாக வழி தெரியாமல் திண்டாடுகிறேன். நான் ஒரு எஸ். எஸ். எல். ஸி. தேறிய மாணவன். புதுக்கோட்டை ராஜா கல்லூரியில் இரண்டு வருட மைனர் இஞ்சினீரிங் படிப்பைப் படித்து, கீழ்க்கண்ட சென்னை சர்க்கார் டெக்னிகல் பரீட்சைகளை 1946-ம் வருடத்தில் பாஸ் செய்தேன். மூன்று பரீட்சைகளில் முதல் வகுப்பில் தேறினேன்.

1. எலக்டிரிக் லைட் அண்டு பவர், ஹையர் கிரேட், முதல் கிளாஸ்- 2. ஹீட் என்ஜின்ஸ்—லோயர் கிரேட், முதல் கிளாஸ். 3. அப்லைட் மகானிக்ஸ், லோயர் கிரேட், முதல் கிளாஸ். 4. மிஷின் டிராயிங். லோயர் கிரேட், 2-வது கிளாஸ்.

படிப்பு முடிந்ததும் புதுக்கோட்டைக்குச் சமீபத்தில் இருக்கும்என் சொந்தக் கிராமமாகிய கீழக்குறிச்சியில் தங்கவேண்டி ஏற்பட்டது. வேலை தேடுவதற்காகச் சில இடங்களுக்குச் சென்றேன். கிடைக்கவில்லை. எம்ப்ளாய்மெண்டு எக்சேஞ்சில் பதிவு செய்து கொண்டேன். பல விளம்பரங்களுக்கு மனுக்களைப் போட்டேன். போட்டுக் கொண்டும் இருக்கிறேன். கல்வி அறிவு இல்லாத உடலுழைப்பு வேலைகளுக்கும் மனுக்கள் போட்டேன். பலரைக் கேட்டும் பார்த்தேன். கிராமவாசியும் எவ்வித சிபாரிசும் இல்லாத எனக்கு வேலை கொடுக்க யாரும் முன்வரவில்லை.

எங்கள் குடும்பத்தின் கஷ்டங்களைச் சொல்லப் போனால் அது வளர்ந்து கொண்டே போகும். எங்கள் கிராமத்தில் ஆறு வருடங்களாகத் தொடர்ந்து மழை பெய்யாததினால் கொஞ்சம் நஞ்சம் இருந்த சொத்துக்கள் யாவும் கடனில் மூழ்கிக் கொண்டிருக்கின்றன. இந்தச் சங்கடமான நிலையில் ஏழையாய்ப் பிறந்து உலகில் வாழ வழி கிடைக்காமல், திண்டாடும் என்மேல் சமுதாயமோ அரசாங்கமோ இரக்கப்பட்டு வழி காட்ட வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய வயது 29, பிரம்மச்சாரி.

கீழக்குறிச்சி சு. ராமமூர்த்தி
13—9—54

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10.


விருந்தினர்
எல்லோரும்
சென்ற பிறகு . . .




DALDA
டால்டா
மர அடையாளமுள்ள
டின்னைப் பார்த்து
வாங்குங்கள்.

REGISTERED No. M. 4392
*Registered as a news paper in Ceylon*










# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 248-50 TM